



# அம்ருதா

## Amrudha Tamil Monthly

Volume 19 Issue 11 June 2025 Rs.30
ஆண்டு 19 இதழ் 11 ஜூன் 2025 ரூ.30

நேர்காணல்
பிராகுயி மொழியும் திராவிட மொழிகளும்
நசீர் ஷாகிர் பிராகுயி

நச்சு பெண்ணியம்
புதியமாதவி

கீழடி
# மறைக்கப்படும் உண்மைகள்
பிரபு திலக்

ஆண்டு 19 இதழ் 11



# அம்ருதா

நவீன கலை இலக்கிய சமூக மாத இதழ்

ஜுன் - 2025 விலை ரூ. 30

கௌரவ ஆசிரியர்
**திலகவதி**

ஆசிரியர்
**பிரபு திலக்**





வடிவமைப்பு: **இரா.செந்தில்குமார்**
+91 89394 38815

**அம்ருதா**
#5, 5வது தெரு, சோமசுந்தரம் அவென்யூ
சக்திநகர், போரூர், சென்னை-600116
தொலைபேசி: -044-2435 3555, 94440 70000
மின்னஞ்சல்: info.amrudha@gmail.com
இணையம்: www.amruthamagazine.com

Published by Prabhu Thilaak
No. 5, 5th Street
Somasundaram Avenue
Shakthi Nagar, Porur
Chennai - 600 116

And Printed by A. Chandran on behalf
of AMRUDHA
Ayyanar Offset, No. 10 Subbarao Nagar
Choolaimedu, Chennai - 600 094

Owner and Editor: Prabhu Thilaak

• அம்ருதா, ஒயிட் லோட்டஸ் தனியார் குழுமத்தின் ஓர் அங்கம்


## இந்த இதழில்...

# பிராகுயி மொழியும் திராவிட மொழிகளும்

சென்ற இதழ் தொடர்ச்சி...

● நசீர் ஷாகிர் பிராகுயி நேர்கண்டவர்: பரமேஸ்வரன் வெங்கடாசலம்

**மொழியியல் ஆராய்ச்சியில் பிராகுயி மொழியைப் பற்றிய தற்போதைய ஆராய்ச்சித் தலைப்புகள் அல்லது திட்டங்கள் எவை?**

*பாகிஸ்தான் மற்றும் பிற நாடுகளின் அறிஞர்கள், பிராகுயி மொழியில் ஆராய்ச்சிகளை மேற்கொண்டு வருகின்றனர். இந்த வேலைகளில் ஈடுபட்ட முக்கிய நிறுவனங்களில் International School Of Dravidian Linguistics (ISDL), Dravidian Linguists Association (DLA) (கேரளா) ஆகியவை அடங்கும். இந்த அமைப்புகள் பிராகுயி மொழியியல் புலத்தில் நவீன பரிணாமத்தைத் தூண்டும் முயற்சியில் உள்ளன. ஜூன் 26, 2009 அன்று மறைந்த பிரபலமான அறிஞர் சுப்ரமண்யம் குறிப்பிடத்தக்க பங்களிப்பாளராக இருந்தார். தற்போதைய அறிஞர்களில் முனைவர் ஜி.கே. பணிக்கர், முனைவர் நடுவட்டம் கோபாலகிருஷ்ணன் ஆகியோர் முக்கியமானவர்களாக உள்ளனர். இந்த அறிஞர்கள் பிராகுயி மொழியில் புதுமையான மொழியியல் ஆராய்ச்சிகளை முன்னெடுத்துள்ளனர்., முனைவர் ஜி.கே. பணிக்கர், பிராகுயி மொழியின் மேல் மிகுந்த அக்கறை கொண்டவராகப் பாராட்டப்பட்டவர். அவர் விரிவான மொழியியல் ஆராய்ச்சிகளை மேற்கொண்டு, பிராகுயி மொழியை சர்வதேச அளவில் அறிமுகப்படுத்தியுள்ளார். அவரது ஓர் முக்கிய சாதனை ISDL மையத்தின் மூலம் உலகின் மொழியியலார்களை ஒன்றிணைத்தது. இது ஒரு முக்கியமான நிகழ்வு என்று கருதப்படுகிறது. 2024 ஆம் ஆண்டு ஏப்ரல் 5 அன்று DLA, ISDL சார்பாக அவர் பிராகுயி கலாச்சார நாளை சர்வதேச அளவில் கொண்டாடினார்.*



*மௌனஜோ-தரோவின் முன்னாள் இயக்குநர், மதிப்புக்குரிய பேராசிரியர் அப்சல் குல் பிராகுயி, தமிழின் முக்கியமான 'திருக்குறள்' நூலை பிராகுயி மொழியில் மொழிபெயர்த்தார். இந்த மொழிபெயர்ப்பில் முனைவர் ஜே. ரவிகுமார் ஸ்டீவனும் ஒரு முக்கிய பங்கு வகித்தார்.*

*பிராகுயி மக்களும் தங்களை திராவிட மரபினராக அடையாளம் காண்பதுடன், மற்ற திராவிட மொழிபேசும் மக்களுடன் தங்கள் தொடர்புகளை வலுப்படுத்த முயற்சிகள் மேற்கொண்டு வருகின்றனர்.*

*மொழியியல் புலத்தில் பிராகுயி ஆராய்ச்சியில் சாதனை புரிந்த உலகப் புகழ்பெற்ற திராவிட மொழியியல் அறிஞர்களாக, சான்போர்ட் பி. ஸ்டீவர் (Sanford B. Steever), சுரேஷ் கோலிசாலா (Suresh Kolichala), ஜி.கே. பணிக்கர் (G.K. Panikkar), ரெஹ்மான் பார்த் (Rehman Fard), அனுஷி (Anushi), முனைவர் மசாடோ கோபயாஷி (Dr. Masato Kobayashi), முனைவர் திம்மிகா (Dr. Dhimmika),முனைவர் சுப்பிரமணியம் விருதாசலம் (Subramaniyam Virudhachalam), பெகி மோகன் (Peggy Mohan), கே.எம். மித்ரேய் (K.M. Mitrey), முனைவர் கோண்ட்வானா ஷா (Dr. Gondwana Shah) ஆகியோரைக் குறிப்பிடலாம். இவர்கள் திராவிட மொழியியல் ஆராய்ச்சிக்கு முக்கிய பங்களிப்புகளைச் செய்தவர்கள்.*

*மதிப்புக்குரியவர்களான முனைவர் அப்துல் ரசாக் சபிர், முனைவர் லியாகத் சன்னி, முனைவர் சொசான் பிராகுயி, அஃப்சல் குல் பிராகுயி, முனைவர் கையூம் பெதார், சுல்தான் அகமது ஷாஹ்வானி, முனைவர் ஹபீஸ் சர்ப்ரா ஆகியோர், பிராகுயி மொழியில் முக்கியமான ஆராய்ச்சிகளை மேற்கொண்டு வருகின்றனர்.*

**பிராகுயி மொழியியல் ஆராய்ச்சியாளராக உங்களை ஊக்குவித்தது எது? உங்களின்**

## மிகவும் சுவாரஸ்யமான கண்டுபிடிப்புகள் என்ன?

நான் 1990ஆம் ஆண்டு பிராகுயி இலக்கியத்தில் பங்களிப்பைத் தொடங்கினேன். 1994ஆம் ஆண்டில் பிராகுயி மொழியியல் ஆராய்ச்சியில் கவனம் செலுத்தத் தொடங்கினேன். இதுவரை, பிராகுயி மொழியின் மூலங்கள் குறித்த பெரும்பாலான ஆராய்ச்சிகள், திராவிட மொழிகளுக்குப் புறம்பான ஆய்வாளர்களால் மேற்கொள்ளப்பட்டுள்ளன. மேலும் இது பெரும்பாலும் மொழியியல், அறிவியல் சார்ந்ததாக இருக்கிறது. உள்ளூர் அளவில், இந்த முயற்சிகள் பெரும்பாலும் வரலாற்று ஆராய்ச்சிகளால் தூண்டப்பட்டுள்ளன; ஆனால், அவற்றில் அரசியல் காரணங்களின் தாக்கம் மிக அதிகமாக உள்ளது.

## பிராகுயி, தமிழ் சமூகங்களுக்கு இடையே எந்த பண்பாட்டுப் பரிமாற்றங்கள் இருந்து வருகின்றன?

3,500 ஆண்டுகளில் பிராகுயி, தமிழ் பேசும் மக்களுக்கிடையில் தொடர்பு இல்லாவிட்டாலும், பழமையான வரலாற்றுச் தொடர்பின் அடிப்படையில் இணைப்பு இன்னமும் காணப்படுகிறது. உதாரணமாக, காளை இரு கலாச்சாரங்களிலும் மதம் சார்ந்த, விவசாய, வணிக மற்றும் பயணம் தொடர்பான சூழல்களில் மிகுந்த முக்கியத்துவம் பெறுகிறது.

தமிழில், காளை கடுவு (Katuvu), கட (Kata), கடாய் (Katay), கிடா (Kita) என அழைக்கப்படுகிறது. இந்த தமிழ்ச் சொற்கள், சிறிய ஒலிப் மாற்றத்துடன், பிராகுயி மொழியில் Xaras அல்லது Khras ஆக பயன்படுத்தப்படுகின்றன. தமிழ் கலாச்சாரம், பிரசித்தி பெற்ற காளை திருவிழா, சல்லிக்கட்டு, ஏறு தழுவுதல், மஞ்சு-விரட்டு என்று கொண்டாடுகிறது. இந்த விழா பூர்வ தமிழ் காலத்துக்கு முந்தியது. மதுரைக்கு அருகிலுள்ள குகை ஓவியங்கள், கி.மு. 1500 காலத்தில் தமிழர் ஒரு காளையை அடக்க முயற்சித்ததை காட்டுகின்றன. இந்த ஓவியக் கலை, சிந்து சமவெளி நாகரிகத்தின் மேல் ஏற்பட்ட Indo-European படையெடுப்புகள் காலத்துடன் இணைக்கப்படுகிறது.





அதேபோல, பிராகுயி கலாச்சாரத்தில், காளை விவசாயம், மதம், வாணிபம், மிருகபலி, பயணம் பாரங்கள் சுமந்து செல்லுவது போன்ற சூழல்களில் முக்கியத்துவம் பெறுகிறது. பலிமாஸ் மலைகள் பிராகுயி பகுதிகளின் அருகில், செம்பட்டைக் காளை ஓவியங்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன; மற்றுமொரு சாஹ்ரி பகுதிகளில் வெள்ளைக் காளை ஓவியங்கள் காணப்பட்டுள்ளன. இந்த கண்டுபிடிப்புகள், பிராகுயி மக்களுக்கு காளை ஒரு முக்கியமான மரபு என்றும், அது இன்னும் மிகுந்த முக்கியத்துவம் பெறுகிறது எனக் காட்டுகின்றன.

விவசாயத்தில், காளைகளை வயல்களை உழுவதற்கும், அரிசி, கோதுமை போன்ற பயிர்களின் உமிகளை நீக்குவதற்கும் பயன்படுத்துகிறார்கள். ஒரு வரிசையில் 10 முதல் 12 காளைகள் கட்டி, பணிகளைச் செய்கின்றனர். மதத்தில் முக்கிய நிகழ்ச்சிகளின் போது, நோய்களைத் தடுக்கவும் மகிழ்ச்சியான நிகழ்வுகளைக் குறிக்கவும் காளைகளை பலி கொடுப்பது மங்களகரமானதாக கருதப்படுகிறது. பயணத்திற்கும் பாரங்கள் சுமப்பதற்கும், காளை ஒரு முக்கிய துணையாக இருக்கிறது.

பிராகுயி மொழியில், ஆண் காளை கரீகர் என அழைக்கப்படுகிறது. இது பெரும்பாலும் செம்மையாக இருக்கும். கரீகர் என்பது ‘அனைத்து செயல்களிலும் திறன் வாய்ந்தது’ என்று மொழிபெயர்க்கப்படுகிறது. அது பூர்வ தமிழ் சொற்களான கல், களை, கள்ளன் எனும் சொற்களின் ஒலி மாற்றமாகும். சமகால இயந்திரங்கள் பல பணிகளில் காளைகளின் பங்கைக் குறைத்துவிட்டாலும், தொலைதூர மலைப் பகுதிகளிலும் கிராம மக்களிடையேயும் காளைகள் இன்னும் அன்றாட வாழ்க்கையில் மிக முக்கிய பங்கு வகிக்கின்றன.

தமிழ் மக்கள் கறுப்பு நிறத்தை மிகவும் மதிக்கிறார்கள். இது அவர்களின் பல கூறுகளிலும், பழமொழிகளிலும் கவிதைகளிலும் பிரதிபலிக்கிறது. அதேபோல, பிராகுயி மொழி, இலக்கியத்திலும் கறுப்பு நிறத்தின் முக்கியத்துவத்தை கொண்டாடும் நூற்றுக்கணக்கான பழமொழிகள் உள்ளன. உதாரணத்திற்கு, பிராகுயி பழமொழி 'மோனா ஹனெய்னா' என்பதன் அர்த்தம் 'கறுப்பு இனிமையானது'. இது அவர்கள் கலாச்சாரத்தில் கறுப்பு நிறத்தின் மதிப்பை விளக்குகிறது. பிராகுயி மொழியில் கறுப்பிற்கு 'சோசோ' என்று அழைக்கப்படுகிறது. இது ஓர் மென்மையான கறுப்பு நிறத்தைக் குறிக்கிறது. பழமையான பிராகுயி மக்கள் இலக்கியமும் கறுப்பு நிறத்தைப் போற்றும் கவிதைகளையும் கொண்டுள்ளது. இது காதலையும் பாசத்தையும் குறிக்கும் பொருத்தங்களுடன் இணைக்கப்படுகிறது. இந்த கலாச்சாரப் பகிர்வு தமிழ், பிராகுயி மரபுகளுக்கு இடையே உள்ள தொடர்பை எடுத்துக் காட்டுகிறது.







இந்த பகிர்ந்த பண்பாட்டுத் தரத்தால் தமிழ், பிராகுயி பாரம்பரியங்கள் இடையே உள்ள இயல்பான தொடர்பை வெளிப்படுத்துகிறது.

படைக் கலப் பயிற்சி முறைகள், போர்க் கோட்பாடுகள், தற்காப்புக் கலைகள் ஆகியவற்றில் தமிழ்ப் பண்பாடு நீண்ட பெருமைமிக்க வரலாற்றைக் கொண்டுள்ளது. தமிழ்ப் படைவீரர்கள் தருமம், ஒழுக்கம், நீதி ஆகியவற்றை கடைபிடித்தார்கள். அவர்களது போர்த்திறமைக்காக பரவலாக பாராட்டப்பட்டுள்ளனர். இதேபோல், பிராகுயி மக்களும் தமிழர்களின் போர் மரபுகள், ஒழுக்கம், போர்த்திறன் ஆகியவற்றைக் கடைப்பிடித்தனர்.

தமிழரின் தற்காப்புக் கலைகளில் சிலம்பம் முதன்மையான இடத்தைப் பெற்றிருக்கிறது. அதேபோல், பிராகுயி மக்கள் 'லோர் நலட்' என்ற போர் ஆயுதங்களையும் போர்முறைகளையும் பயன்படுத்தினர். தமிழ் வீரர்கள் வாள், ஈட்டி, அம்பு, வில், கத்தி ஆகிய பல ஆயுதங்களைப் பயன்படுத்தினர். இதேபோல், இவ்வாயுதங்கள் வரலாற்றில் பிராகுயி போர்வீரர்களாலும் பயன்படுத்தப்பட்டன. தமிழ், பிராகுயி அரசர்கள் தலைவர்கள் பெரும்பான்மையான போர்களில் குதிரைகளைப் பயன்படுத்தினர்.

தமிழ் இலக்கியத்தில் பல போர் கதைகள், வீரர்களின் வாழ்க்கைக் குறிப்புகள் நிறைந்திருக்கிறது. அதேபோல், பிராகுயி இலக்கியத்திலும் வீரர்களின் மனத்திடம், சாதனைகள், வீரம் ஆகியவற்றைப் பாராட்டும் பல போர்க் கதைகள், பாடல்கள் ஆகியவை காணப்படுகின்றன. இந்த பாடல்களைப் பெண்கள் தங்கள் தனிப்பட்ட தபல்கள் (டிரம்கள்) மூலம் பாடி கதை சொல்லும் மரபும் உள்ளது. இவை பிராகுயி வீரர்களின் சாதனைகளையும் வீரத்தையும் போற்றுகின்றன.

பிரபலமான பிராகுயி போர் வீரர்களில் மிர் உமர் ஷஹீத் பிராகுயி, மிர் பிஜார் பிராகுயி, மிர் அப்துல்லா கான் பிராகுயி, நசீர் கான் நூரி பிராகுயி, மிர் மிஹ்ராப் கான் பிராகுயி (ஆங்கிலேயர்களால் தூக்கிலிடப்பட்டவர்), நூரா மெங்கல் பிராகுயி, மிர் அலி தோஸ்ட் பிராகுயி சபர் கான் ஆகியோர் உள்ளனர். இக்கதைகள் தமிழ், பிராகுயி மரபுகளுக்கிடையேயான ஆழ்ந்த கலாச்சாரத் தொடர்புகளை வெளிப்படுத்துகின்றன.



**பிராகுயி மக்களின் பாரம்பரிய இசை, நடனக் கலைகளை விளக்க முடியுமா? அவை தமிழ்நாட்டின் பாரம்பரிய இசை, நடனக் கலைகளுடன் எப்படி ஒப்பிடப்படுகின்றன?**

*பிராகுயி மொழியின் வரலாறு சுமார் 15,000 முதல் 25,000 ஆண்டுகள் பழமையானதாகும். இதனால் இதை பேசும் மக்களும் அதேபோன்று மிகப் பழமையானவர்கள். வாத் பகுதியின் பாலிமாஸ் மலைகளில், ஒரு குறிப்பிடத்தக்க ஓவியம் 5 முதல் 15 பேரைக் கொண்ட பூர்வ பிராகுயி மக்கள் குழுவாகச் சுற்றியடித்து நடனமாடும் காட்சி ஒன்றைக் காட்டுகிறது. சிவப்பு நிறத்தில் உருவாக்கப்பட்ட இந்தக் கலைப் படைப்புகள் பிராகுயி இசை, நடனத்துடன் தொடர்புடைய மிகப்பழமையான நிகழ்வுகளை அடையாளம் காட்டுகின்றன.*

*பிராகுயி மொழியில், நடனம் 'சாப்ப்' என அழைக்கப்படுகிறது. 'சாப்ப்' என்ற சொல்லின் மூலப்பொருள், பூர்வ திராவிட அல்லது தமிழ் சொல்லான 'சாப்' என்பதிலிருந்து பெறப்பட்டது. சுவாரஸ்யமாக, இந்த 'சாப்ப்' என்ற சொல் இன்னும் தமிழ் உள்ளிட்ட பல திராவிட மொழிகளில் பயன்படுத்தப்படுகிறது, இது பிராகுயி, தமிழ் கலாச்சாரங்களுக்கிடையிலான நீண்டகால மொழியியல் தொடர்பைக் காட்டுகிறது.*

Clapping Hands

| | | |
|---|---|---|
| Tamil | : | Cappani |
| Kota | : | Capat |
| Kannada | : | Capparisu, Cappali, Cappale |
| Tulu | : | Cappali |
| Telugu | : | Cappata |
| Naiki | : | Chapat |

*இந்த எல்லா மொழிகளிலும், 'சாப்ப்' என்ற சொல்லின் மையப் பொருள் 'கை தட்டுதல்' என்பதை குறிக்கிறது. ஆனால், பிராகுயி மொழியில், 'சாப்ப்' என்பது தனித்துவமாக 'நடனம்' என குறிப்பிடப்படுகிறது. குறிப்பாக, இந்த அர்த்தம் பாகிஸ்தானின் மற்ற எந்த மொழியிலும் இல்லை. பாலோச்சியைத் தவிர, அங்கு இந்த சொல் பயன்படுத்தப்படுகிறது. ஆனால், பாலோச்சி மொழி 'சாப்ப்' என்ற சொல்லை பிராகுயி மொழியிலிருந்து எடுத்துக்கொண்டது.*

| | |
|---|---|
| Persian | Raqs, Raqseedan |
| Kurdish | Seh Ma |
| Pashto | Naza |
| Balochi | Chaap/Naach |

*பிராகுயி மொழியில் இந்தோ-இரானிய மொழியின் தாக்கம் இருப்பதால், இந்தோ-இரானிய மொழிச் சொற்கள் பயன்படுத்தப்படுகின்றன. பாலோச்சி மொழியில், Nach அல்லது Naach என்பது நடனத்தைக் குறிக்கும். இந்தச் சொல் பிராகுயி மொழியிலிருந்து பெறப்பட்டது. ஏனெனில் Naach என்பது திராவிட மூலங்களிலிருந்து தோன்றியது. இந்தச் சொல் இன்று பல திராவிட மொழிகளில் தொடர்ந்து பயன்படுத்தப்படுகிறது, உதாரணமாக:*

To Walk, Go, Pass, Proceed, Happen

| | | |
|---|---|---|
| Tamil | : | Nata, Natakkai, Natattu |
| Malto | : | Natakka |
| Kota | : | Narv, Nard, Nart |
| Toda | : | Nar |
| Kannada | : | Nada |
| Kodagh | : | Nada |
| Tulu | : | Nadapuni |
| Telugu | : | Nada, Nadaka |

*இந்த வார்த்தை 'நடத்துதல்,' 'செல்லுதல்,' 'கடந்து செல்,' அல்லது 'கால் மூலம் ஏதேனும் செயல்பாடு செய்' போன்ற பொருள்களைக் குறிக்கிறது. பிராகுயியில் 'நட்' என்ற சொல் 'கால்' எனப் பொருள்படும். இது அதிலிருந்து பெறப்பட்டது. இதன் விளைவாக, உருது, சிந்தி, ஹிந்தி போன்ற மொழிகள் 'நட்' ஐ 'நாட்' என்ற வடிவத்தில் ஏற்றுக்கொண்டன. இதிலிருந்து 'நடனம்' என்ற வார்த்தை தோன்றியது. இன்று, பாகிஸ்தான், இந்தோ-யூரோப்பிய மொழிகளில், 'நாச்' என்ற வார்த்தை 'நடனம்' என்பதற்குப் பொதுவாகப் பயன்படுத்தப்படுகிறது. இது 'பூர்வ திராவிட' அல்லது 'பூர்வ தமிழ்' மூலங்களுடன் ஒத்துப்போகிறது. பிராகுயி மொழியிலிருந்து இந்த வார்த்தையை பாலோச்சி, சிந்தி, உருது, பிற மொழிகள் ஏற்றுக்கொண்டன.*

*பிராகுயி நாட்டுப்புற பாடல்களில், 'லே', 'லா', 'டே' போன்ற சிறப்பான சொற்கள் பயன்படுத்தப்படுகின்றன. அவையும் திராவிட மூலம் கொண்டவை. இசையில் அடிப்படை ஒலிகள் 'Sa', 'Re', 'Ga', 'Ma', 'Pa', 'Da', 'Ni', 'Sa' ஆகியவை மிகப் பெரிய முக்கியத்துவம் பெற்றவை. இந்த சொற்களும் பூர்வ பிராகுயி அல்லது பூர்வ தமிழ் பாரம்பரியத்தைச் சேர்ந்தவை.*

*பிராகுயி இசைப் பாரம்பரியங்களில் இசைக்கருவிகள்; குறிப்பாக தேங்காயம், சிறிய தேங்காயம் காணப்படும். இவற்றின் தாள ஒலியான 'டாம் டாம்' பூர்வ திராவிட மூலத்தில் ஆழமாக ஊன்றி உள்ளது.*

### பிராகுயி சமூகத்தால் கொண்டாடப்படும் முக்கிய திருவிழாக்கள் எவை?

பூர்வ திராவிட அல்லது பூர்வ பிராகுயி திருவிழாக்கள், பிராகுயி மக்கள் படிப்படியாக இஸ்லாமுக்கு மாறிய பின்னர் நிறுத்தப்பட்டன. இன்று, கொண்டாடப்படும் திருவிழாக்கள் இஸ்லாமிய பாரம்பரியங்களுக்கு உட்பட்டவை. அதாவது ஈது உல் அத்ஹா, ஈது உல் பித்ர், ஷாபே பாரத், முஹர்ரம், பிற திருவிழாக்கள்.

### பிராகுயி மொழி பேசும் பகுதிகளின் பாரம்பரியத்தில் ஹரப்பா நாகரிகத்தின் தாக்கம் எவ்வாறாக இருந்தது?

ஹரப்பா, மோகன்ஜதாரோ, மெஹர்கர் ஆகிய தொன்மை நாகரிகங்கள், பிராகுயி மக்களுக்கு மிகவும் முக்கியமானவை. இந்த நாகரிக மையங்களைப் பூர்வ பிராகுயி மக்களின் முன்னோர்கள் நிறுவினர். பிராகுயி மொழி, பூர்வ திராவிட அல்லது பூர்வ தமிழ் மொழியில் இருந்துதான் வந்தது. ஏனெனில் அது பூர்வ தமிழ் மொழியின் ஒரு வகை.

### பிராகுயி பேசும் பகுதிகளில் ஹரப்பா நாகரிகத்துடன் தொடர்புடைய முக்கிய தொல்பொருள் கண்டுபிடிப்புகள் உள்ளனவா?

நிச்சயமாக! இந்தோ-சிந்து நதியருகே உள்ள நாகரிகப் பகுதிகளை அல்லது நாகரிக மையங்களை, குறிப்பாக பிராகுயி அதிகமாக வாழும் பகுதிகளில், இன்றும் காண முடிகிறது. சில எடுத்துக்காட்டுகள்: ராணா குண்டை (கி.மு. 4300) லோரலை மாவட்டம், பலோச்சிஸ்தான்; ரெஹ்மான் தேரி (கி.மு. 4000); சோஹர் அணை (கி.மு. 3800-2300) நால், குஜ்தார் மாவட்டம், பலோச்சிஸ்தான்; அம்ரி-நால் (கி.மு. 3800–2000), குஜ்தார் மாவட்டம், பலோச்சிஸ்தான்; பாதனி அணை (கி.மு. 3500–1800), கச்சி, பலோச்சிஸ்தான்; வகிர் 2 (கி.மு. 3500–1800), குஜ்தார், பலோச்சிஸ்தான்; டிக்ரி அணை (கி.மு. 3500–1800), அவாரான் மாவட்டம், பலோச்சிஸ்தான்; நௌஷாரோ (கி.மு. 2700–1800), கச்சி மாவட்டம், பலோச்சிஸ்தான்; நிந்தோ வாரி (கி.மு. 2300–2000), கலாட், பலோச்சிஸ்தான்; குல்லி கலாச்சாரம் (கி.மு. 2500–2000), கொல்வா, பலோச்சிஸ்தான்

இந்தத் தொல்பொருள் ஆராய்ச்சி மையங்களில் வாழ்ந்த மக்கள் பூர்வ பிராகுயி, பூர்வ திராவிட அல்லது தமிழ் மக்களாக இருந்தனர். இப்பகுதிகளில் கண்டெடுக்கப்பட்ட தரவுகள், சிற்பங்களால் அலங்கரிக்கப்பட்ட செராமிக் பானைகள், இன்றைக்கும் பூர்வ பிராகுயி, தமிழ் பேசும் சமூகங்களில் காணப்படுகின்றன.

### ஹரப்பா நாகரிகத்திலிருந்து பிராகுயி மொழியில் மொழியியல் தாக்கத்திற்கான ஆதாரங்கள் உள்ளனவா?

ஹரப்பா நாகரிகம், பொதுவாக சிந்து நதியருகே உள்ள நாகரிகம் (Indus Valley Civilization-Ivc) என்று அழைக்கப்படும். அதன் மொழி, பண்பாட்டுத் தன்மைகளுக்காக ஆழமாக ஆய்வு செய்யப்பட்டுள்ளது. ஜி.ஆர். ஹண்டர், எம். விட்சல், அஸ்கோ பார்போலா, கிளைட் வின்டர்ஸ், ஜி.கே. பணிக்கர், பி.எஸ். சுப்ரமணியம், பெருமெரி கே, இராவத்தம் மகாதேவன், அன்சுமாலி பட்டா முகோபேன்டி உட்பட பல பிரபலமான அறிஞர்கள் சிந்து நதியருகே உள்ள நாகரிக மொழியை பூர்வ பிராகுயி, பூர்வ திராவிட அல்லது தமிழ் என்று அடையாளம் கண்டுள்ளனர்.

1972ஆம் ஆண்டில் கராச்சியில் நடைபெற்ற 'சிந்து த்ரூ செஞ்சுரீஸ்' (Sindh Through Centuries) கான்ஃபரன்சில் முனைவர் அஸ்கோ பார்போலா, சிந்து சமவெளி நாகரிக எழுத்து முறையை புரிந்துகொள்ள பூர்வ பிராகுயி மொழியை அறிந்துகொள்ளாமல் முடியாது என்று வலியுறுத்தினார். சிந்து சமவெளி நாகரிக மொழி பூர்வ பிராகுயி மொழியாக இருக்க வாய்ப்பு, மற்ற திராவிட மொழிகளுடன் ஒப்பிடுகையில் அதிகம் என்று அவர் உறுதியாகச் சொன்னார். இந்த முக்கியமான கருத்தை ஒதுக்கி, சிந்து அறிஞர்கள் பார்போலாவின் பார்வைகளை பெரிதும் புறக்கணித்து, சிந்து சமவெளி நாகரிக எழுத்து முறையை புரிந்துகொள்ள முரண்பாட்டான முறைகளைத் தழுவியுள்ளனர்.

### பிராகுயி பேசப்படும் பகுதிகளில் ஹரப்பா நாகரிகம் வர்த்தகம், வணிகத்தில் எந்த பங்கைக் கொண்டது?

சிந்து சமவெளி நாகரிகம் (Indus Valley Civilization - IVC), பொதுவாக ஹரப்பா நாகரிகம் என அறியப்படுகிறது. இது பல மொழி, மதம், கலாச்சாரங்களைச் சேர்ந்த மக்கள் ஒருங்கிணைந்ததாக வாழ்ந்த நகர நாகரிகம் ஆகும். இதன் பெரும்பான்மையான மக்கள் விவசாயத்திலும் வணிகத்திலும் ஈடுபட்டிருந்தனர். இயற்கை மத வழிபாடுகளில் மையமாக இருந்த இந்த முன்னேறிய, அமைதியான நாகரிகம் பூர்வ திராவிட, பூர்வ தமிழ், அல்லது பூர்வ பிராகுயி என அறியப்படுகிறது. மேலும், பூர்வ சிந்தி, பூர்வ கோண்டி, பூர்வ குருக், பூர்வ மால்டோ குழுக்களும் சிந்து சமவெளி நாகரித்தில் பெரும்பான்மையானவர்களாக இருந்தனர்.

இந்த நாகரிக மக்கள் ஓமன், ஈரான், பாபிலோன், நைனிவே, சுமர், துர்க்மெனிஸ்தான், மத்திய கிழக்கு, இலங்கை, பிற நாடுகளுடன் வணிக, மத தொடர்புகளை கொண்டிருந்தனர். அரிசி, வாசனைத் திரவம், நகைகள், பேரீச்சை, துணிகள், பிராணிகள், இரும்புக் கருவிகள், பானங்கள் போன்ற பொருட்கள் நிலம், கடல் வழியாக ஏற்றுமதி செய்யப்பட்டன. இன்று கூட, பூர்வ பிராகுயி, திராவிட அல்லது தமிழ் சொற்கள், சுமேரியன், பாபிலோனியன், இந்தோ-யூரோப்பியன், ஃபீனீசியன்,

செமிட்டிக் மொழிகளில் காணப்படுகின்றன. ஆனால், இவை பெரும்பாலும் தவறாக திராவிட வழிமுறையாக இல்லாதவை என வகைப்படுத்தப்படுகின்றன. ஆனால், அது உண்மையில் பூர்வ திராவிட அல்லது தமிழ் மூலமானது.

உர் (Nasria) என்ற பழம்பெரும் நகரம், இன்று இராக் நாட்டில் அமைந்துள்ளது. ஹசரத் இப்ராஹிம் பிறந்த இடமாக குறிப்பிடப்படுகிறது. உர் என்ற வார்த்தை கிராமம், நகரம், அல்லது மனிதர்கள் வாழும் இடம் என்று பொருள்படுகிறது. மேலும் இது பிராகுயி மொழியில் உரா என நகரம், வீடு, அல்லது கிராமம் என்று உள்ளது. இந்த தொடர்பு பூர்வ பிராகுயி மக்கள் அங்கு 4,000 முதல் 4,500 ஆண்டுகளுக்கு முன்பு குடியேறியிருக்கின்றனர் எனக் குறிக்கிறது.

சுமேரியன் ஆவணம் சிந்து சமவெளி நாகரிகம் ஒரு வர்த்தக மையமாக இருந்த மெலுஹா நாகரிகத்தை அல்லது நாட்டைப் பற்றிய குறிப்புகளை கொண்டுள்ளது. சிந்தி மொழியியல் அறிஞர்கள், மெலுஹா என்ற சொல் மலாஹ் என்ற அரபுச் சொல்லுடன் தொடர்புடையது எனக் கூறுகின்றனர். இதற்குத் தோணி வலிப்பவர் அல்லது கடல் பயணி எனப் பொருள். ஆனால், சிந்து சமவெளி நாகரிகத்தின் பூர்வ திராவிட அல்லது பூர்வ பிராகுயி தன்மையைப் பொறுத்தவரை, மெலுஹா மிகவும் பூர்வ பிராகுயி அல்லது திராவிட மூலமுடையது. மெலுஹா என்ற சொல் மெலஹ்ட்டோ, மலஹா, மெலுகா, மெலுகா, மெலுஹா போன்ற பல வடிவங்களில் காணப்படுகிறது. மூல வடிவமான மெலுகா அல்லது மெலுகா, இரண்டு திராவிட அடிப்படை வேர்கள் மல (மலை), கா (பெயர்ச்சொல்) ஆகியவற்றின் இணைப்பாகும்.

திராவிட மொழிகளில்:

| | | |
|---|---|---|
| Tamil | : | Iya, K |
| Kannar | : | Da, Ya |
| Telugu | : | Ni, Va |
| Malayalam | : | Tta, Yam |
| Brahui | : | Ka, Kin, Na |

சொற்கள் உரிச்சொல்லைக் குறிக்க பின்னொட்டுளாகப் பயன்படுத்தப்படுகின்றன. மெலுகா என்ற சொல் 'மலை மனிதர்,' 'மலைவாசி,' அல்லது 'மலைக்காரர்கள்' என்பதைக் குறிக்கிறது.

இன்றும், மலைப்பகுதிகளில் அல்லது தாழ்வான பகுதிகளில் மலியூசுப், மல்கான் முகமது போன்ற பெயர்களைக் கொண்ட பல குடியிருப்புகள் வீடுகள் ஆகியவை காணப்படுகின்றன. மெலுகா என்ற சொல்லின் 'கா' பின்னொட்டு பிராகுயி மொழியில் பெரும்பாலும் ஒலியியல் மாறுபாடாக 'ஹா' அல்லது 'க' ஆக மாறுகிறது. கிலிருந்து ஹ-க்கு இந்த ஒலி மாற்றம் பிராகுயி மொழியின் பொதுவான மொழியியல் அம்சமாகும், உதாரணமாக:

Kuluk- Hulk / Chulk    Means    To Shake

Taka- Taho    Means    Air, Wind

சுமேரிய சொல்லான மெலுகா அல்லது மெலுஹா உண்மையில் பிராகுயி சொல்லான மெலுஹாவின் ஒலியியல் மாறுபாடாகும். இந்தச் சொல் சிந்து வெளி நாகரிகத்தைக் (IVC) குறிக்க பயன்படுத்தப்பட்டது. மெலுஹா என்பது பூர்வ திராவிட, பூர்வ தமிழ் அல்லது பூர்வ பிராகுயி சொல்லாகும்.




## ஹரப்பா நாகரிகத்தின் தொல்பொருள்கள் அல்லது சின்னங்கள் பிராகுயி கலாச்சாரத்தில் இன்னும் முக்கியத்துவம் பெற்றவையாக உள்ளனவா?

நிச்சயமாக! சிந்து சமவெளி நாகரிக தொல்லியல் ஆய்வாளர்கள் தொல்லியல் இடங்களில் கண்டுபிடித்த பாண்டங்கள், முத்திரைகள் மகத்தான கலாச்சார முக்கியத்துவத்தை பெற்றுள்ளன. அவற்றின் மேல் பொதுவாகக் காணப்படும் இரண்டு முக்கியமான உருவங்கள் காளை, மீன் ஆகும். காளை, நில நாகரிகத்தைச் குறிக்கிறது; மீன், நீர்நிலை நாகரிகத்தைப் பிரதிபலிக்கிறது.

இன்று, மீன் பொதுவாக மச்சி (Machhlee) என அழைக்கப்படுகிறது. ஆனால், பூர்வ பிராகுயி காலத்தில், பூர்வ தமிழ் வார்த்தையான மின் (Min) மீனிற்குப் பயன்படுத்தப்பட்டது. பிராகுயி நாட்டின் புகழ்பெற்ற மெங்கல் பழங்குடி, அல்-மின் (Al-Min) என்னும் சொற்களை, அதாவது மீனவர்கள் அல்லது மீன் வேட்டையாளர்கள் எனக் குறிக்கப் பயன்படுத்தியது. காலப்போக்கில், ஒலி வேறுபாட்டால், அந்தச் சொல் மெங்கல் (Mengal) ஆக மாறியுள்ளது.

மேலும், இந்தத் தொன்மையான இடங்களில் கண்டுபிடிக்கப்பட்ட மண்பாண்டங்கள், மலையர்கள், பிராகுயி மக்களின் வீடுகளில் இன்னும் பயன்படுத்தப்படுகின்றன. இதன் மூலம், தலைமுறை தலைமுறையாக பண்பாட்டுத் தொடர்ச்சி இருக்கிறது என்பதை அறிகிறோம்.

## ஹரப்பா நாகரிகம் – பிராகுயி மொழி, கலாச்சாரத் தொடர்புகளுக்கான தற்போதைய ஆராய்ச்சித் தலைப்புகள் அல்லது திட்டங்கள் எவை?

உண்மையாகவே உலகின் பலகல்விப் புலங்களிலிருந்து ஆய்வாளர்கள், பிராகுயி மொழி, சிந்து சமவெளி நாகரிகம் அல்லது ஹரப்பா நாகரிகத்திற் கிடையேயான தொடர்பை ஆராய்ந்து வருகின்றனர். அஸ்கோ பார்போலா, அன்சுமாலி பட்டு, அஜீஸ் கிங்ரேன், ஓமர் கான் போன்ற அறிஞர்கள் இந்தப் பணியில் ஈடுபட்டிருக்கின்றனர்.

1972 ஆம் ஆண்டு, கராச்சியில் நடைபெற்ற Sindh Through Centuries Conference நிகழ்ச்சியில், முனைவர் அஸ்கோ பார்போலா, சிந்து சமவெளி நாகரிக எழுத்தை புரிந்துகொள்ள பிராகுயி மொழியின் ஆய்வு அவசியம் எனக் கூறினார். மேலும், சிந்து சமவெளி நாகரிக மொழி பிராகுயி மொழியாக இருக்க பிற திராவிட மொழிகளைவிட வாய்ப்பு அதிகமாக இருப்பதாக வலியுறுத்தினார். ஆனால், இந்த முக்கியமான அறிக்கை சிந்து அறிஞர்களால் கவனிக்கப்படாமல், அவர்கள் சிந்து சமவெளி நாகரிக எழுத்துகளைத் தவறான முறையில் விளக்க முயற்சித்தனர்.

## பிராகுயி பேசும் மக்களின் மூதாதைத் தொடர்புகளை சிந்து சமவெளி நாகரிகத்துடன் (Harappan Civilization) இணைக்க மரபியல் ஆய்வுகள் நடத்தப்பட்டுள்ளனவா? தமிழர்களின் மரபியல் ஆய்வுகளுடன் இவை எப்படி ஒப்பிடப்படுகின்றன?

பிராகுயி பேசும் மக்களின் மரபியல் தொடர்பு மிகவும் சிக்கலான, ஆர்வமூட்டும் ஒரு பொருளாகும். இவர்களின் மொழி பூர்வ திராவிட அல்லது தமிழ் ஆக இருப்பினும், இவர்களின் மரபியல் அடையாளம் பிரதானமாக திராவிடம் ஆக இல்லை. பிராகுயி மக்களின் DNA, ஆசிய மக்கள் தொகையுடன் நெருங்கிய ஒற்றுமையைக் கொண்டுள்ளது.

பிராகுயி மக்களின் மிடோக்காண்ட்ரியல் DNA (Mtdna), தென் ஆசிய மக்களில் பொதுவாகக் காணப்படும் M Haplogroup என்பதைக் கொண்டுள்ளது. மேலும், பிராகுயி மக்களில் U Haplogroup உள்ளது; இது ஈரான், மத்திய கிழக்கு, கஃப்கார் பகுதிகளின் மக்களிடத்தில் காணப்படுகிறது. அதற்கு மேலாக, பிராகுயி DNA, R1a, R2 Haplogroups-ஐ கொண்டுள்ளது. இது சிந்து, ஈரானிய, பாலோச்சி மக்களிடமும் காணப்படுகிறது. திராவிட ஆண்களில் அதிகம் காணப்படும் H Haplogroup, பிராகுயி மக்களிடத்தும் காணப்படுகிறது.

பிராகுயி, திராவிட மக்கள், மரபியல் குரோமோசோம்களை பகிர்ந்து கொள்கின்றனர். இது, சிந்து சமவெளி நாகரிகம், பூர்வ திராவிட நாகரிகமாக இருந்தது என்பதற்கான ஆதாரமாக உள்ளது. பிராகுயி மக்கள் பூர்வ திராவிட அல்லது பூர்வ தமிழ் என்பதால், சிந்து சமவெளி நாகரிக மக்கள் பூர்வ பிராகுயி மக்கள் என உறுதியாகக் கூறலாம்.

## பிராகுயி கலாச்சாரத்தில் சிந்து சமவெளி நாகரிகத்துடன் தொடர்புடைய ஏதாவது இயற்கை கதைகள் அல்லது பாரம்பரியம் உள்ளதா? தமிழினக் கதைகள், பாரம்பரியங்கள் இதோடு எப்படி ஒப்பிடப்படுகின்றன?

சிந்து சமவெளி நாகரிகம் அல்லது ஹரப்பா நாகரிகம் தொடர்பான எழுத்தில் உள்ள ஆதாரங்கள் இதுவரை கண்டுபிடிக்கப்படவில்லை. இதனால் அவர்கள் பாரம்பரிய வழக்கங்கள் அல்லது இலக்கிய மரபுகள் குறித்துத் தெளிவாகக் கூற முடியாது. ஆனால், சிந்து சமவெளி நாகரிக மக்களின் மொழிகள், பூர்வ திராவிட, பூர்வ தமிழ், அல்லது பூர்வ பிராகுயி என்பது உறுதியாகக் கூறலாம். முக்கியமாக, தமிழ் இலக்கியத்தில் காணப்படும் கூறுகள், பிராகுயி பாரம்பரியக் கதைகளிலும் உள்ளன. இது படர்ந்த கலாச்சார, மொழித் தொடர்பை வெளிப்படுத்துகிறது.

**ஹரப்பா நாகரிகத்தின் மத, விழா வழக்கங்கள், பிராகுயி, தமிழ் சமூகங்களின் வழக்கங்களுடன் எப்படி ஒப்பிடப்படுகின்றன?**

*சிந்து சமவெளி நாகரிகத்தில், அம்மன் தெய்வ வழிபாடு முக்கியமாக இருந்தது. காலப்போக்கில், இது துர்கா, பார்வதி, காளி மாதா போன்ற தெய்வங்களை வணங்குவதாக மாறியது. காளி மாதா, போரையும் சக்தியையும் குறிக்கும் தெய்வமாகக் கொண்டாடப்பட்டது. சிந்து சமவெளி காலத்தில், பின்னர் திராவிட, வேத மதங்களில், சக்தி தெய்வமாக பரவலாக மதிக்கப்பட்டது.*

*சிந்து சமவெளி நாகரிக மக்களும் பாம்புகளை வணங்கினர். இன்று கூட, பிராகுயி பகுதிகளில், குழ்தார் மாவட்டத்தில், நாகஹூ என்ற மலை உள்ளது. இது பழமையான திராவிட மக்களின் பாம்பு வழிபாட்டுக்கான மையமாக இருந்தது. நாக்பட் சமுதாயம், பாம்பு வழிபாட்டின் மரபைத் தொடர்ந்து கொண்டுள்ளது. பழமையான காலங்களில், பல மனிதக் குழுக்கள் தனித்துவமான மத நம்பிக்கைகளைக் கொண்டிருந்தனர். அவற்றைக் குலச்சின்னங்கள் மூலம் வெளிப்படுத்தினர். உதாரணமாக, தலைமுடியில் அணியப்படும் துர்பான் பாம்பு வழிபாட்டின் சின்னமாக இருந்தது. துர்பானின் உயர்ந்த சிறிய பகுதி, பாம்பின் முகத்தைப் போன்றது; சுழன்ற பகுதி, பாம்பின் வயிற்றைப் போன்றது; கடைசிப் பகுதி, பாம்பின் வால் போல உள்ளது. நாக்பட் மக்களின் பழமையான மதச் சின்னமாக இருந்தது. பின்னர், துர்பான் அணிவது தோன்றியது என்பதை இது காட்டுகிறது.*

*பிராகுயி மக்கள், பாரம்பரியமாக துர்பான்களை அணிந்து வந்தனர். பின்னர் பாலோச்சி மக்களும் இதைப் பின்பற்றினர். காலப்போக்கில், துர்பான் மதச் சிறப்புச் சின்னமாக (டோடமாக) ஆனது. பிறகு, தலைக்கவசம், தனிப்பட்ட மரியாதையின் சின்னமாக மாறியது. இது இன்று வரை தொடர்கிறது. துர்பான் கட்டுவது, பூர்வ திராவிட மத டோடமாக உள்ளது. பிராகுயி மக்கள் இஸ்லாமுக்கு மாறியபோது, அவர்கள் பழமையான திராவிட அல்லது தமிழ் மத வழக்கங்களையும் விழாக்களையும் மறந்தாலும் அந்த வழக்குகளின் சுவடுகள், அவர்களின் கலாச்சாரம், பாரம்பரியம், சிந்தனை முறைகளில் இன்னும் காணப்படுகின்றன.*

*mail to:* **paramesh.india2812@gmail.com**

**முடிவுரை**

## நசீர் ஷாகிர் பிராகுயி

நான், திரு. வெங்கடாசலம், அவரது பெருமைக்குரிய குழுவிற்கு, பிராகுயி, தமிழ் மக்களின் பழமையான தொடர்புகளைப் பற்றிய என் கருத்துக்களை பகிர வாய்ப்பு அளித்ததற்காக, ஆழ்ந்த நன்றி தெரிவித்துக்கொள்கிறேன். பிராகுயி சமூகத்தில் ஒரு உறுப்பினராக, தமிழ்நாட்டின் மொழியியல் நிறுவனங்களும் அரசாங்கமும் தமிழ் பிராகுயி வளர்ச்சிக்கும் பாதுகாப்புக்கும் உறுதியாப நடவடிக்கை எடுக்க வேண்டுமென, வலியுறுத்த விரும்புகிறேன். அப்போதுதான் உள்ளூர் பாலோச்சி அரசியல் சதிகளால், பூர்வ தமிழ் கிளையினை அழிவிலிருந்து பாதுகாக்கமுடியும்.

## பரமேஸ்வரன் வெங்கடாசலம்

இந்த நேர்காணலில் பாகிஸ்தான் பிராகுயி ஆராய்ச்சி நிறுவன இயக்குநர் அவர்களுடன், பிராகுயி மொழி, திராவிட மொழிகள், குறிப்பாக தமிழ் முதலான திராவிட மொழிகளுக்கு இடையேயான ஆழமான மொழி, கலாச்சாரத் தொடர்புகளைப் பற்றிய பயணம் மேற்கொண்டோம். முனைவர் பிராகுயியின் நிபுணத்துவம், இந்த மொழிகளின் பண்புகள், வரலாற்று மூலங்களை வெளிச்சம் போட்டு, இந்தியாவில் திராவிட மொழி பேசுபவர்களிடையே ஒரு ஆழமான புரிதலை உருவாக்க உதவியது.

மொழித் தொடர்புகளைத் தாண்டி, தமிழ்நாடு, பிராகுயி சமூகத்திற்கிடையேயான கலாச்சார பரிமாற்றங்கள் உருவாகும் வாய்ப்பைப் பதிவு செய்தது. இந்தத் தொடர்புகள், மேலும், ஹரப்பா நாகரிகத்துடன் உள்ள சாத்தியமான வரலாற்றுத் தொடர்புகள் குறித்து நாங்கள் உரையாடியதால், வரலாற்றுக்கு ஒரு புதிய பரிமாணத்தைக் கொண்டு வந்தது. குடியேற்ற முறைமைகள், கலாச்சார வளர்ச்சி பற்றிய நமது அறிவினை மேம்படுத்தியது.

மொழியின் வளர்ச்சி பற்றி தனித்துவமான கல்விப்புலம் சார்ந்த பார்வைகளையும் புதிய சிந்தனைகளையும் கொண்டு வந்த இந்த பேச்சு, வரலாறு, மொழியியல், கலாச்சார ஆய்வுகள் மீது ஆர்வத்தை ஏற்படுத்தும். பிராகுயி மொழியின் பாதுகாப்பு, மேம்பாடு ஆகியவை பற்றிய உரையாடல்கள், செயல்பாடுகள் மேற்கொள்ளப்பட வேண்டும் என்ற விழிப்புணர்வை ஏற்படுத்தும்.



# காய்த்ரி சுவாமிநாதன் கவிதைகள்

## 1. ஒற்றை மௌனத்தின் ஓவியம்

மலைச்சிகரத்தின் ஓரத்தில்,
மௌனமாயிருந்தேன் நானொரு குரங்கு,
தூரத்தில் நகரும் வாகனங்கள்,
நெருங்காத மனிதர்களின் ஓசை.

மழை இல்லாத மேகங்கள் மேல்
நான் வைக்கிறேன் என் நினைவுகளை.
விண்ணை நோக்கிய என் பார்வை –
கண்ணீரில்லாத கண்ணில் கவிதைகள்.

பரந்த பசுமை என் மேடை,
புகைப்படம் போல நகரம் எனக்குள்.
மனிதன் எழுதிய வரலாற்றை விட,
இயற்கை எழுதிய ஓர் உணர்வு நிறைந்த நாவல்
நான்.

தொலைவில் இருக்கிற உங்களுக்குத் தெரியுமா?
நான் சிரிக்கவில்லை – நினைக்கிறேன்.
நீங்கள் தேடும் அமைதியை,
நான் சுமக்கிறேன் இந்த பாறை மேல்.

கையில் இல்லாத வலைபேசி,
ஆனாலும் உலகம் என்னுள் நுழைகிறது.
ஒவ்வொரு இலைக்கும் சொல்லும் மொழி,
ஒவ்வொரு காற்றுக்கும் தரும் பாட்டினை
என் நெஞ்சில் பதித்துக் கொள்கிறேன்.

நீங்கள் கேட்காமல் போன இசையை,
நான் தினமும் கேட்கிறேன்.
நீங்கள் மறந்துக்கொண்டிருக்கும்
தாயின் காதலை,
இந்த மரங்களில் நான் காண்கிறேன்.

நான் ஒரு குரங்கேதான்,
ஆனால் இன்று,
இந்த நிமிடத்தில்
ஒரு கவிஞனும் கூட.

## 2. மறந்த மரத்தின் நினைவுகள்

பனித்துளி மிதக்கும் மலைநிழலில்
மௌனமாக நின்றது ஒரு மரம்.
விண்வெளிக்கு விரல் காட்டும்
வாடிய கிளைகள்,
மனதுக்குள் பேசாத பக்கங்கள் போல...

ஒரு காலத்தில் இதன் இலைகள்
காற்றோடு நடனமாடின,
கிளைகளில் பறவைகள் கீதம் பாடின.
இப்போது, அவையெல்லாம் ஓர் ஓரமாக்கப்பட்டது
நினைவுகளின் சுவாசமாக மட்டுமே.



ஆனால் பார்த்தாயா?
அந்த மரத்தின் மூச்சுக்குள்ளே
சிறு இலை ஒன்று துடிக்கிறது.
மீண்டும் ஒரு பசுமை,
மீண்டும் ஒரு ஆசை.

இது மரம் மட்டும் இல்லை,
இது நம் எல்லோரின் பயணமும்.
வாடிய வாழ்க்கையிலும்
மீண்டும் ஒரு புது கனி
கனிவதற்கான சாத்தியங்கள்
முளைக்கின்றன.

இது ஒரு நினைவுப்படம் –
தொலைந்த நேரங்களின் சத்தமில்லா சாட்சி.
இது ஒரு எதிர்ப்பார்ப்பு –
உதிர்ந்த வேரிலும் வாழ்வைத் தேடுவதுப் போல.

காய்ந்த மரம் பேசுகிறது,
"நான் இறந்துபோகவில்லை,
நான் காத்திருக்கிறேன்–
ஒரு புது பருவத்தை நோக்கி ."

## 3. அந்திப் புகைச்சுவடு

மறுநாளின் வாசல் திறக்க,
மழலைத் தூக்கத்தில் உலகம் மூழ்கும் முன்,
மலைமடியில் புரண்டுக் கிடக்கிறது சூரியக் கனவு.
கதிரவனின் கடைசி சுவாசம் போல,
மெல்ல அசையும் அவன் ஒளிக்காற்று
வானம் முழுதும் கவிதை வாசிக்கிறது.

கருவிழி வண்ணமாக மேகங்கள்,
மஞ்சள்நிறக் குத்துகளுடன்
கண்ணாடிக் கவசங்கள் போல்
விண்ணைத் துளைக்கின்றன.
மாலையாயிரம் மணித்துளிகள்
ஒவ்வொரு வண்ணப் படுகையில் நனைய,
உன் ஒளிப்படக்கருவி
ஒரு வர்ணச்சாயல் காவியமாகிப் போகிறது.

"மறையும் முன் ஒரு முறை பார்த்துவிடு"
என்றுபோல் சூரியன் சொல்ல வந்ததா?
அவனது எளிமையான ஒளிப்புனல்
உலகத்தையே வாட்டாமல்,
நம்மை மட்டும் வாட்டுகிறது –

அந்தக் கணம் ஒரு கதையா?
அல்லது கடவுள் வரைந்த ஓவியமா?

முகமூடி அணிந்த மலைக்கோட்டை,
அதன் மீது படர்ந்திருக்கும் அவன் சிறைச் சிறகு.
அவனோ ஓர் அரசனாகவே தெரிகிறான் –
இரவில் அரசமரத்தில் அமர்ந்த சூரியன்!

ஒவ்வொரு கிளைக்கும், ஒவ்வொரு கிளிக்கும்
இரவின் வாசனை நுழையும் வழி இது!
மனது முழுக்க வீசும் காற்றின் திசையில்
நீ எடுத்த இந்தப் படம்,
நாளைய நினைவுகளுக்கு ஒரு தீபஒளி போல!

நீர் ஒளி, நிலம், மேகம், மரம்
எல்லாம் ஒரே சுமையில் புனைந்திருக்கும்
உன் பார்வையின் பிரதிபலிப்பு –
கவி கவிதை எழுதினால் இப்படித்தான் இருக்கும்!

புகைப்படக் கவிஞனே,
இது ஒரு புகைப்படமல்ல –
இது நேரம் நிறைந்த நிமிட சங்கதி!
ஒரு அகால ஞாபகத்தின் அழகு!

## 4. நெஞ்சுக்குள் நின்ற நெல்

காலடி தடங்களில் கதை சொல்லும் களம் இது...
காற்று பேசும், வேர்கள் பாடும்,
வயல் நிலம்
இதழ் மீதாய் பொற்கொடி பூத்து நின்றது!

பசுமை எனும் வார்த்தைக்கு
உண்மையான வடிவம் தேடினேன்...
உன் மேனி முழுதும் நெற்கதிராய் வந்தது!

தலையில் பனிக்கூடு போட்ட மலை,
தலையில் சிந்தை சுமக்கும் பெண்ணைப் போல்,
தனிமையில் இருந்தும் பன்மையைப் பேணியது.

தூக்கிப் போட்ட பனைமரங்கள்,
தாயின் விரல்போல்
வானத்தைத் தொட முயல்கின்றன...
அந்த வானமே
என்னைத் தடவித் தந்த பூங்காற்றாய் வீசுகிறது!



வயல்வெளி ஓர் கவிதை என்றால்,
அதன் முதல் வரி நீ...
மற்ற எல்லா வரிகளும்
உன் அடிவயிறு
மண்வாசனை கொண்டு எழுதப்பட்டது.

அங்கு ஒரு சிறு பூச்சி
நெல் கதிரில் உறங்கியது,
அதன் கனவிலும் கூட
மழை நிலத்தின் இதயத் துடிப்பே...

ஒரு காலத்தில் நான் இங்கு நடந்து சென்றேன்,
இப்போது என் விழிகளில் நீ நடக்கின்றாய்;
பசுமையில் தவழும் உன் அடையாளம்
என் உள்ளத்தின் சுவரில்
ஓவியமாகவே பதிந்திருக்கிறது.

## 5. பசுமைத் தாயின் புனித மடியில்

பசுமைத் தருணம் தழுவிக் கிடக்கும்
பழங்குடி நிலத் தேன் வீசும் வயல்கள்,
பசிபயிரின் புன்னகை மீதொரு பக்கம்
பனிக்குடை போர்த்திக் கிடக்கும் மலைமகள்!

மரம்குழம்பும் தென்றல் வீசும்
மண்ணின் வாசனை மூச்சாய் வரும்;
என் பார்வையிலே பூத்திருக்கின்றன
எத்தனை உள்மன அலைகள்!

முதலைக் களத்தின் ஓரங்கில்
மூடி நின்ற ஓர் சிறு பனைவீடு,
அங்கே வாழ்வது போல
என் நினைவுகளும்
ஓர் கூந்தல் நிழலில் உறங்குகின்றன!

மண்வாசனை மாறாத என் நாட்டுத் தாய்,
உன் மடியில் மழையை போலவே
என் கண்ணீர் நனைந்து விழும்...
அந்த நெஞ்சினில் தான்
நான் மீண்டும் மீண்டும் பிறக்கிறேன்!

பயிர் வளர்க்கும் ஓர் பாட்டி கையில்
முழங்கும் சங்கத்தைக் கேட்கும் போதெல்லாம்,
மண்வாசனை பேசும் மொழியிலே
மூள்கிறது என் மனத்தின் தேசாந்திரம்!

மறைக்க முடியுமா இந்த மண் மௌனம்?
மழையை கேட்டுப் பேசும் தாவரங்கள்,
வானம் தொடும் அந்த ஏரியின் பின்
தாய்மை பேசும் ஒவ்வொரு துளிக்குள் நான்!

அழகை மட்டும் புகைப்படம் பிடிக்கவில்லை,
அதன் உள்பொருளையும் வாழ்வுருவாக்குகிறேன்...
ஏனெனில் இது எனது பார்வையல்ல –
இது என் உயிரின் கவிதை.

## 6. இருள் நிழலில் இரட்டைப் பறவை

இருள் நிறத்தில் பிறந்த இரு உயிர்கள்,
மின்மினிப் பனிக்காற்றின் முனைமீது
ஒட்டிக்கிடந்தன...
தங்களுக்கே உரிய ஒரு வானத்தைச் சாய்ந்து,
தொலைவில் தெரியாத ஓர் உறவுக்காக,
ஓர் சிறகின் சத்தம் பேசின.

ஒன்றின் பார்வை மேல்,
மற்றொன்றின் பார்வை கீழ்,
உயிரின் இசையைப் புனைவதுப் போல,
தொடர்வோட்டம் இல்லாத
ஓர் கவிதையைப் போலவே,
மௌனத்துக்குள் இசை போலிருந்தது அவை.

மரம் ஒன்றின் உச்சியில் –
இடம் பகிர்ந்த பறவைகள்,
திசைகள் திசைகளாகப் பறந்து வந்த கதைதான்
இவரது வாழ்க்கை.
நாம் காணும் ஒவ்வொரு கிளையிலும்
அவைகளின் கனவு உறங்கிக் கொண்டிருக்கிறது.

தொலைவிலும் பாசம் இருக்க முடியும்,
பார்வையிலும் பந்தம் இருக்கு,
பிறைமுகம் போலவே, இரண்டாகத் திகழும்
இவைகள்,
ஒன்றை ஒவ்வொரு முறையும் தேடுவதுபோல் –
மௌனமாகவே, மெதுவாகவே... பறக்கின்றன.

வானத்துக்கும் பூமிக்குமிடையே
இருந்து விரியும் ஓர் காதல் சாயலில்,
என் ஒளிக்கருவியாகப் போயின
உங்கள் பார்வையில் பேசத் தொடங்கின.

## 7. சேர்ந்து சாப்பிடும் செம்பருத்தி புறாக்கள்

தேன் சிந்தும் காலை நேரம்,
தெருவோரத் தொலைக்காட்சிச் சத்தம்,
மண் மேல் விழும் பருத்திக் கனங்கள் போல
ஒரு வட்டமாகச் சேர்ந்திருக்கும் – புறாக்கள்!

இருள் போன பின்னே இளம் ஒளி,
இசை போல இசையும் அடிக்கடி,
அன்புடன் பகிரும் ஒரு கொழும்பு அரிசி,
அவர்கள் நட்பிலே ஏன் இவ்வளவு ரசனை?

இங்கு போட்டி இல்லை,
இங்கு வீரம் இல்லை,
இங்கு மட்டும் தான் –
நிச்சயம் அமைதிக்கு வீரம் உண்டு!

அறுதிப் பிழை இல்லாத இயற்கை அலகுகள்,
வட்டத்தில் உருவான கவிதையின் உருவம்,
பசியின் பேரழகான பிணைப்பு –
இது தான் புறாக்களின் பாச மொழி!

வந்து சேரும் அடுத்த புறாவும்
வட்டத்தில் தானே இடம் பெறும்;
சிறு கணம் கூட விரட்டப்படாமலே –
இது தான் உண்மையான "சமத்துவம்".

விண்ணில் பறந்தாலும்,
நிலத்தில் சாப்பிடும் பொழுது –
இந்தக் கூட்டம் ஒன்று:
அழகான, அமைதியான, பாசமான!

## 8. காட்டின் கருங்கூழாயம்

தென்றல் தடுமாறும் காட்டுப் பாதையில்
நான் நடந்தேறும்போது,
தூரத்தில் ஒரு மனிதன்
நிறைய செம்மறி ஆடுகளுடன்
பசுமை கம்பளத்தில் கனிந்து கொண்டிருந்தான்.
அந்தக் காட்சி,
என் கண்களுக்கு ஒரு மரபுக் கதைபோல்
மண்ணின் வாசனையோடு
மொழியாத மௌனச்சேர்த்தை.
ஆடுகளின் கொம்புகள்,
இயற்கையின் சிற்ப ஆளுமை போல
ஒவ்வொன்றும்
வண்ணமயமான வியப்பை கற்பித்தன.
அந்த செம்மறிகள்
நான் நிற்கும் இடம் வரை வந்து
எனக்குள்ளே பேச்சின்றி பேசினவைகள்!
அவைகள் சத்தமின்றி கூறியது
பசுமையின் பனிச்சுருள் மொழி.
இத்தனை சிறப்பும்,
ஒரு கணநேர பார்வையின் பொக்கிஷம்!
இது என் தேசாந்திரி பயணத்தின்
பதுங்கிய கவிதைச் சிறுகதை.

## 9. அந்திப் பரிசல்

அந்திப் பொழுதின் அலைச்சலில்
வானம் கனிந்த கவிதை ஒன்று.
வண்ணத் தீயில் உருகும் ஒளியொடு
இலைகள் கூட இமைகள் மூடின.
சுடர் வீசும் பசலை நிறங்களில்
நிழலே ஒரு ஓவியம் போல் நின்றது.
மௌனத்தின் இசை கேட்டதும்
காற்று கூட தன்னை மறந்தது.

தூரத்து மலைசாயலுக்குள்
ஒரு பாவம் மனதைத் தொடும்.
நீயோ ஒரு ஓரமான நினைவு,
நிழலாய் என் நெஞ்சில் நிறைந்தாய்.

## 10. மஞ்சள் பொழுதுகளின் மரம்

எந்த ஊரின் வழியாக பறந்தாலும்,
அந்த ஒரு மரத்தை நான் தவிர்க்க முடியாது...
வெள்ளைக் காற்றிலே குலுங்கும்,
மஞ்சள் கவிதைகள் உதிரும் கொன்றை மரம்.

அந்த மரத்தில்
ஒரு பூ எனக்காகத்தான் மலர்கிறது போல,
நான் வந்த உடனே
சிரிப்பதுப்போல மலர்கிறது...
என் பறவைக் கண்கள்
அதைத் தவிர்க்கமுடியாதொரு அழகு.

அது பேசுமா?
அவள் நிசப்தமாகப் பேசுகிறாள்...
"வந்துட்டியா?"
"இன்றைக்குப் பறப்பதற்கு என்ன வழி?"
அவளோட மொழி காற்றின் நடையில் கற்பிக்கிறது.

நான் பறந்த பல வானங்களில்,
அவளோட கிளைகளில்தான் எனக்கு ஓர் தங்குமிடம்...
காலங்கள் மாறியும்,
அவளோட முகம் மாறவில்லை.
அவள் சிரிப்பும் மஞ்சளும் ஒன்றாகவே இருக்கின்றன.

நான் தேசாந்திரம் ஆனாலும்,
அவளோட அருகில் மட்டும்
நான் வேர்கள் விட்ட பறவை...
மரத்தின்போல வாழ முடியாமலிருந்தாலும்,
அந்த மலரின் நினைவிலே
நான் நிறைந்திருக்கிறேன்.

*mail to:* **gayathriswaminathan132@gmail.com**

# விழுதாகி வேருமாகி

இந்த நூலை நான் 20 வருடங்களுக்கு முன் வன்னிக்குள் நின்றபோது வாசித்திருக்கின்றேன். 600 பக்கங்களுக்கு மேல் நீளும் நூலென்பதால் அதையன்று முழுமையாக வாசிக்கவில்லை. ஆனால், கடந்த 20 வருடங்களாக இந்த நூலைத் தேடிக் கொண்டிருந்தேன்.

● **இளங்கோ**

இப்போது வாசிக்கக் கிடைத்திருந்தது. விடுதலைப்புலிகளின் பெண்கள் அணியாகிய (2ம். லெப்.) மாலதி படையணியின் தோற்றமும் வளர்ச்சியும் பற்றிக் கூறுகின்ற இந்த நூல், 1996 -2001 வரையான போராட்டக் காலத்தைப் பதிவு செய்கின்றது.

1995, சூரியகதிர் -01 மூலம் யாழ்ப்பாணத்தைக் கைப்பற்றிய இலங்கை இராணுவம், 1996இல் வடமராட்சி/தென்மராட்சியைக் கைப்பற்ற சூரியக்கதிர்-02 நடவடிக்கையை எடுக்கின்றது. இந்தக் காலப்பகுதியிலே விதுஷா தலைமையிலான தனியே பெண்களைக் கொண்டமைந்த 'மாலதி படையணி' புலிகளால் கட்டியமைக்கப்படுகின்றது. மாலதி என்பவர் களத்தில் சாவடைந்த புலிகளின் முதல் பெண் போராளி. அவர் 1987இல் கோப்பாயில் இந்திய இராணுவத்துடனான மோதலில் களச்சாவடைந்திருந்தார். அவரின் பெயரிலே புலிகளின் பெண்கள் அணி தொடங்கப்பட்டது.



மாலதி படையணி, தமது முதல் களப்பலியை தென்மராட்சியில் கொடுக்கின்றது. ஒரு குறிப்பிட்ட காலம்வரை மரபு இராணுவத்தைப் போன்று இலங்கை இராணுவத்தின் முன்னேற்றத்தை தடுத்து நிறுத்த போராடிக் கொண்டிருந்த மாலதி படையணி வன்னிக்குள் உள்ளெடுக்கப்படுகின்றனர். விரும்பிய கொஞ்சப் பேர் மட்டும் கொரில்லாப் படையாக தென்மராட்சிப் பகுதிக்குள் உலாவத் தொடங்குகின்றனர்.

இவ்வாறு தொடங்கும் மாலதி படையணியின் களங்கள் வன்னிக்குள் விரிகின்றன. இதன் பின்னரே 1996ஆம் ஆண்டு இலங்கை இராணுவத்தின் முல்லைத்தீவு முகாம் புலிகளால் தகர்க்கப்படுகின்றது. அது ஓயாத அலைகள் -01 எனப் பெயரிடப்படுகின்றது. அந்த முகாம் தாக்குதலில் பங்கு பற்றிய மாலதி படையணி, பின்னர் A9 நெடுஞ்சாலையை, வவுனியாவிலிருந்து யாழ்ப்பாணத்தை இணைக்க வைக்கத் தொடங்கிய 'ஜெய சுக்குறு' (வெற்றி நிச்சயம்) நடவடிக்கையில் பல்வேறு முனைகளில் நின்று புரிந்திருக்கின்றது.

அவர்கள் மணலாற்றிலிருந்து மன்னார் வரை, புளியங்குளம் (கடும் சண்டை நடந்த அந்த இடம் அவர்களின் மொழியில் புரட்சிக்குளம்), ஒட்டுசுட்டான், மன்னன்குளம் என்று நாம் கற்பனையே செய்து பார்க்க முடியாத கொடும் களங்களில் முன்னணியில் நின்றிருக்கின்றனர்.

இந்த நூலின் முக்கியம் என்பது புலிகள் ஓயாத அலைகள்-01, 02 என்று முல்லைத்தீவு, கிளிநொச்சி பெரும் இராணுவ முகாங்களைத் தகர்த்ததையோ, அல்லது ஓயாத அலைகள் -03 என்று வன்னி பெரும் நிலப்பரப்போடு ஆனையிறவை வென்றதையோ, ஓயாத அலைகள் -04 எனப்பெயரிட்டு சாவகச்சேரி அரியாலை, நாகர்கோயில் என முன்னேறி செம்மணிப் பாலத்தடியில் நின்று இலங்கை இராணுவத்தின் யாழ் இருப்பை இறுக்கியதோ பற்றியதல்ல.

போர் என்பது எப்படி யதார்த்தத்தில் நடக்கின்றது என்பது பற்றிய நேரடி அனுபவங்களுள்ள போராளிகள் எழுதிய பதிவுகள் என்பதால்தான் இந்த நூல் மிக முக்கியமான நூலாக இருக்கின்றது. ஒவ்வொரு அத்தியாயத்திலும் நீங்கள் ஒரு நாயகியைக் காண்பீர்கள், சிலவேளைகளில் ஒரு அத்தியாயத்திலே பல வீரநாயகிகளைக் காண்பீர்களென்று இந்த நூலில் சொல்வதைப் போல பல போராளிகளின் வீரத்தை/ தியாகத்தைப் பார்க்கின்றோம்.

ஒரு படையணியின் தோற்றத்தை, களத்தில் வெற்றி பெற்றதை/ முன்னேறும் எதிரியோடு எதிர்த்துப் போரிட்டதை மட்டுமின்றி இதை வாசிக்கையில் இந்தப் போரின் கொடுமைகளையும் நாம் பார்ப்பதுதான் என்னளவில் முக்கியமானது. நாங்கள் கடந்த காலத்தை ஒருபோதும் மாற்றிவிட முடியாது. ஆனால், இன்னொரு போர் எந்தப் பொழுதிலும் எங்களுக்குத் தேவையற்றது என்பது ஒரு முன்னுதாரணமாக இதைப் பார்க்கலாம்.

எப்படி 96இல் யாழ் மாவட்ட சாவகச்சேரியில் இருந்து போராளிகள் துரத்தப்பட்டார்களோ, அதை மாற்றி சில வருடங்களில் ஓயாத அலைகள் -04 உடன் சாவகச்சேரிக்குள் நுழைந்து நிலங்களை மீண்டும் கைப்பற்றத் தொடங்குகின்றார்கள். ஒருவகையில் அது அவர்களின் நீண்டநாள் கனவு. ஆனால், தொடர்ச்சியான இராணுவ முன்னேற்றங்களால் பேரழிவுடன் மீளவும் யாழை விட்டு பின்வாங்கிச் செல்வதோடு இந்த நூல் முடிகின்றது. இதை வாசித்து முடிக்கும்போது எப்படி ஒரு போர் நடக்கின்றது என்ற பயங்கரம் நம் முகத்திலறைந்து திகைக்க வைக்கும்.

இன்றும் போரை ஒரு வெற்றிக்களிப்பாகக் கொண்டாடுகின்றவர்களும், அதுபோல புலிகளின் என்றாலே எல்லாவற்றையும் வன்மமாக்கின்ற தரப்பும், பொறுமையுடன் இதை வாசிக்க வேண்டுமெனப் பரிந்துரை செய்வேன். ஏனெனில், வரலாற்றை மிகையாகப் புகழ்ந்தோ அல்லது இருட்டடிப்புச் செய்தோ நாம் கற்றுக்கொள்வதால் எதுவும் பிரயோசனம் இருக்கப் போவதில்லை. அப்படியான 'கற்றல்கள்' நமது தப்பித்தல்களுக்கும் தனிப்பட்ட விருப்புகளுக்கும் உதவுமே தவிர, வரலாற்றைத் தெளிவுறக் கற்பதற்கு உதவப்போவதில்லை.

வரலாறு என்பதை நாம் நினைத்தபடி மாற்றியமைக்க முடியாது என்பதற்கு இந்த நூலே நல்லதொரு உதாரணம். இந்த நூலில் விதுஷா, துர்க்கா, பால்ராஜ், தீபன், கருணா என்று பல தளபதிகளின் பேச்சுக்கள் மேற்கோள் காட்டப்பட்டிருக்கும். கருணாவின் தலைமையில் இருந்த கிழக்கு மாகாணத்தைச் சேர்ந்த ஜெயந்தன் படையணியின் தீரத்தாலே பெரும் எடுப்பில் நடத்தப்பட்ட ஜெயசுக்குறு சமர் முறியடிப்பு பல முக்கிய களங்களில் நிகழ்ந்தது என்பதை நாமறிவோம். ஜெயசுக்குறு சண்டையின் பின் புலிகளே ஒப்புக்கொண்ட உண்மை இது. இப்போது கருணா, புலிகளின் ஆதரவாளர்க்குத் 'துரோகி'யாகிவிட்டார் என்கின்றபோதும், அன்றைய வரலாற்று உண்மையை/ கருணாவின் மேற்கோள்களை, வரலாற்றின் எந்தப் பக்கத்திலிருந்தும் எடுத்துவிட முடியாது என்பதற்கு இந்த நூலே ஒரு சாட்சியாக நிற்கின்றது.

இந்தநூலின்ஒவ்வொருபக்கங்களிலும்போராளிகளைப் பற்றிய பல நுண்ணிய அவதானங்கள் வந்தபடியே




**விழுதாகி வேருமாகி**

ஆசிரியர்: **பெண் போராளிகள் (தமிழீழ விடுதலைப் புலிகள்).**

விலை: **ரூ. 450**

வெளியீடு: **தமிழர் தாயகம், 1/70 சி பூந்தமல்லி நெடுஞ்சாலை, சென்னை.**

மின்னஞ்சல்: tamilarthayagam@gmail.com

இருக்கும். ஒரு போராளி வாசிப்பதில் அவ்வளவு ஆர்வமுடையவர். களத்தில் கொடுக்கப்பட்ட சாப்பாட்டைச் சுற்றி வருகின்ற பேப்பரையே கவனமாகப் பிரித்தெடுத்து வாசித்துப் பார்க்கின்றவர். எப்போதும் அவரது காற்சட்டைப் பொக்கெட்டுக்குள் ஒரு புத்தகம் இருக்கும் என்ற விபரிப்பு இருக்கும். இப்படி நம் நினைவுகளை விட்டகலாத பல போராளிகள் இந்த நூலில் ஒவ்வொரு அத்தியாயங்களிலும் வந்தபடியிருக்கின்றனர்.

இயக்கம் குறித்தும், அவர்கள் போராட்டத்தை நடத்திய விதம் குறித்தும் விமர்சனங்களை எவ்வளவு



தீர்க்கமாக வைக்கின்றோமோ, அதையளவு இந்தப் போராளிகள் ஒவ்வொருவரின் பங்களிப்பையும் மறுதலிக்காது நாம் ஒவ்வொருபொழுதும் நினைவுகூரத்தான் வேண்டும்.

எவரெவரோ இன்றைக்கு இந்தப் போராட்டத்தை 'குத்தகை'க்கு எடுத்தமாதிரி போலிப் பெருமிதங்களில் எழுதியும்/பேசியும் கொண்டிருக்கும்போது, இந்த உண்மையான போராளிகளின் இரத்தமும் சதையுமான வாழ்க்கையை நாம் ஒவ்வொருவரும் வாசித்தல் அவசியம் என்பேன்.மேலும் சிங்களம் உள்ளிட்ட வேறு மொழிகளில் இது மொழியாக்கப்பட்டு வருகையில் இந்தப் போராளிகள் பற்றிய பல எதிர்மறையான எண்ணங்கள் அவர்களிடையே உதிர்ந்து போகவும் கூடும்.

இறுதியாக இதற்கு முன்னுரை எழுதிய மாலதி படையணியின் தளபதியான விதுஷா சொல்வதைக் குறிப்பிட்டு இதை முடிக்கலாமென நினைக்கின்றேன்: "எழுதுமட்டுவாளிலிருந்த எமது முன்னணிக் காவலரண் பகுதி. நேரம் 4.30 ஆகிக் கொண்டிருந்தது. முன்னரங்கின் அருகிலிருந்த மைதானத்துக்கு ஒவ்வொரு அணிகளும் வந்து சேர்ந்து கொண்டிருந்தன. எல்லோரும் கலகலப்பாகக் கதைத்துச் சிரித்தபடி... சிலர் விளையாட, சிலர் சூட்டுப் பயிற்சிக்கென ஆயத்தமானார்கள். போர்க்காலத்தில் சிறு ஒலியைக் கூட எழுப்பமுடியாத, தலைநிமிர்த்தி நடக்க முடியாத பகுதி அது. இது போர் நிறுத்தக் காலம் என்பதால் பதுங்கிச்சூடு, எறிகணை வீச்சு என்ற எந்தவித நெருக்கடியுமின்றி முன்னரங்கப் பகுதியே கலகலப்பாக இருக்கின்றது.

ஒரு பனங்குற்றியில் அமர்ந்தவாறு எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டிருந்த என் மனம் திடீரென எங்கோ போனது. இந்த மைதானத்தில் நின்றிருக்க வேண்டிய பலரைக் காணவில்லை. அவர்கள் துயில் நிலங்களில் அமைதியாக இருக்கின்றார்கள். இவர்கள் புதிய தலைமுறையினர். இவர்களை உருவாக்கிவிட்டவர்களும் உருவாக்கியவர்களும், அவர்களை உருவாக்கியவர்களும் எனப் பலர், காலம் தமக்கிட்ட பணியை முடித்துத் தம்முடைய கனவுகளையும் எதிர்பார்ப்புகளையும் எம்மிடம் தந்த நிறைவோடு உறங்குகின்றார்கள். மைதானத்தில் படையணிப் போராளிகளின் சத்தங்களும் அவர்களது சுடுகலன்கள் எழுப்பிய ஒலிகளும், நெடுஞ்சாலையில் விரைந்து கொண்டிருந்த ஊர்திகளின் இரைச்சல்களும் என்னை இந்த உலகுக்கு இழுத்து வரமுடியாமல் தோற்றுப் போயின."

இதைவிட இந்தப் போர் தந்த துயரங்களைச் சொல்லிவிட முடியாது. இதற்கப்பால் அவர்களுக்கென்று தளராத நம்பிக்கையும் பெரும் கனவுகளும் இருந்தன. அதுவே அவர்களைத் தொடர்ந்து போராடச் செய்திருந்ததையும் நாம் ஒப்புக்கொள்ள வேண்டும். ●

*mail to:* **elanko@rogers.com**

# திருவாளர் குமார்

(நியாயம் எங்கே செல்கிறது? அல்லது செல்லுபடியாகிறது)

● மிருணாள் ராஜாராம் தமிழில்: அழகையா அருணாச்சலம்

அன்று வானம் மேக மூட்டமாயும் சாயம் போன படுக்கை விரிப்பு போலவும் இருந்தது. அவ்வப்போது லேசான மழைத்துளிகள் வானத்திலிருந்து விழுந்து கார்க் கண்ணாடியை அடித்துக் கொண்டிருந்தன. அவனது மண்டையை நச்சரித்துக் கொண்டிருந்த நினைவுகள் அவனை கார்க் கண்ணாடிக்கான வைபரைக் கூட தட்டிவிட முடியாமல் செய்து கொண்டிருந்தன. ஒருநாள் கூட பணிக்கு குறிப்பிட்ட நேரத்திற்கு முன்பு சென்றிராத அவன் அன்று சீக்கிரமாய் சென்று கொண்டிருந்தான். இன்று அவன் மண்டைக்குள் இதுவரை வராத நினைவுகள். அவனது சந்தேகம் சரியாயிருந்தால் அவன் ஊகிக்கும் விஷயமாகத்தான் அன்று நடக்கப்போகும் நிகழ்வு அமையும்.

அவனுக்கு 43 வயதாகிறது. அவனது குடும்பம் பேசப்படுமளவிற்கு தகுதி வாய்ந்தது அல்ல. இரு நெருங்கிய நண்பர்களை மட்டுமே வார இறுதி நாட்களில் அவன் சந்திப்பான். நிறைய விஷயங்களில் அவன் தனித்து நிற்கும் குணமுடையவன். ஒருசில வார்த்தைகளை மட்டுமே பேசும் பழக்கம் கொண்டவன். ஆனால், அவன் பேச ஆரம்பித்து விட்டானானால் அவனைச் சுற்றி உள்ளவர்கள் அவனைக் கவனிக்கத் தவறமாட்டார்கள். தனிமை அவனது வாழ்வில் பெரும்பான்மையான ஒன்றாயிருந்தது. கடந்த சில வருடங்களில் காணப்பட்ட அறிகுறியால் அவனது வாழ்க்கை எந்தவித மாற்றமுமின்றி இப்படியே ஓடிவிடும் என்று தோன்றுகிறது. இதுவரை யாருடனும் நெருக்கம் கொண்டிராத அவன் நீண்ட நெடுநாள் பந்தத்தை ஒரு பெண்ணுடன் கொண்டிருந்தான். ஆனால், அவள் கடைசியில் அவனை விட வயது முதிர்ந்த ஒருவனுடன் ஓடி விட்டாள். தற்சமயம் வேண்டாத திருமணம் ஒன்றை செய்து இரண்டு குழந்தைகளுடன் இருக்கிறாள்.

காரை அதற்கான இடத்தில் குமார் நிறுத்திய போது மணி ஒன்பது. மழை இப்பொழுது பெரும் துளிகளாய் அவனது காரின் கூரைப் பகுதியையும் பேனட்டையும் ஓங்கி ஓங்கி அடித்துக் கொண்டிருந்தது. அவன் குடையைப் பிடித்துக்கொண்டு பலமாடிக் கட்டடமான தன் அலுவலக நுழைவாயிலிற்கு குறுநடை போட்டு வேகமாய்ச் சென்றான். தனது உடை நனைந்து விடாமல் பார்த்து பார்த்து நடந்தான். அவனைக் கண்டுகொள்ள அங்கு யாருமில்லை. அன்றைய தினசரியைப் படித்துக் கொண்டிருந்த வயதான பாதுகாவலர் மட்டும் அங்கிருந்தார். அவரது வழக்கமான சலாமை ஏற்றுக்கொண்ட குமார் தனது அலுவலகத்திற்குள் விரைந்து, கதவைத் தனக்குப் பின்னால் சாத்திக்கொண்டு தன் இருக்கையில் அமர்ந்தான்.

அவனது இப்போதைய பணி அழைப்பு ஏதும் வரும்வரை இப்படியே காத்திருப்பதுதான். சென்ற வருடங்களில் மூத்த அதிகாரிகளுக்காக காத்திருந்து அவர்களின் மதிப்பார்ந்த அறிவுரைகளை கவனிப்பதுதான் அவனது வழமையாயிருந்தது. சென்ற வாரம் வந்த இ-மெயிலின்படி - சேர்மன், வைஸ் சேர்மன் மற்றும் இரண்டு பேர் இவனுடன் இன்று கலந்துரையாட இருக்கின்றனர். அது எதைப் பற்றியது என்பதை அவனது உள்ளுணர்வு அவனுக்கு சொல்லிற்று. தீடீர் அழைப்புக்கான காரணம் எப்போதுமே தெரியப்படுத்தப்படுவது கிடையாது. எனவே அவன் ஏதோ மோசமான ஒன்றாக அது இருக்கக்கூடும் என ஊகித்துக்கொண்டான்.

ஓக் மரச்சட்டத்தினுள் வைக்கப்பட்டிருந்த அவனது மறைந்த தந்தையாரின் படம் அவனது பெரிய மேஜையின் ஓர் ஓரத்தில் இருந்தது. அந்தப் படம் அவர் கேமராவைப் பார்க்க தற்செயலாக திரும்பிய போது யாரோ சிலரால் எடுக்கப்பட்டது. வித்தியாசமானதொரு சிரிப்பு அவர் முகத்திலிருந்தது. அவர் போட்டோவிற்காக போஸ் தரச்சொல்லி அவர் அப்படி தந்திருந்தால் கூட இதுபோல் அது அமைந்திருக்காது. தவிர குடும்ப விழாக்களின் போது எடுக்கப்படும் குரூப் போட்டோக்களில் நிற்பதைக்கூட அவர் விரும்புவதில்லை. தற்சமயம் இந்த அலுவலக



மேஜையிலிருக்கும் நிழற்படம் கூட ஒரு குடும்ப விழாவின் போது அவரது உறவினர் ஒருவரின் ஆர்வமிகுதியால் எடுக்கப்பட்டதுதான்.

சீனியர் குமார், கௌரமிக்க ஒரு அரசு ஊழியர். அவரது அரசு உத்யோக வாழ்வில் அவர் சண்டை போட்டது அவருக்கு ஏமாற்றத்தைத்தான் அளித்திருந்தது. கறைபடிந்த, அதிகாரமிக்க மக்களோடு அவர் நடத்திய போராட்டம் அவரது ஆயட்காலத்தில் பத்து வருடங்களைக் குறைத்திருந்தது. ஏற்கனவே அவருக்கு அற்பாயுசுதான். அவர் அடைந்தது வெற்றி என்றாலும் அதற்கு அவர் இழந்த சக்திக்கு அந்த வெற்றி ஈடாகா என்பது அவரது மனைவியின் அபிப்ராயம். அவர் மிகவும் இறுக்கமானவர் மற்றும் நீதிமான். 'உண்மை' மட்டுமே முழுமையானது என்று அவர் தன் மகனிடம் கூறுவதுண்டு. அவரது சிறந்த பணியும் நடத்தையுமானது கேலிக்குள்ளாகி அவரை அது ஆக்ரமித்திருந்தது. அதனால் அவர் மிகச்சிறப்பானவராகத் திகழ இயலவில்லை. 'நீ என்னவாக இருக்க விரும்புகிறாய்? நவீன கால மீட்பர் ஆகப் போகிறாயா?' என்பது மாதிரியான சொற்கள் அவரை நோக்கி அம்பென எய்யப்பட்டன. குறை காண்பதிலேயே குறியாயிருப்பவர் என சிலர் அவரை பெயரிட்டனர். யோக்யனாக இருப்பதுவும் நன்னெறிகளில் ஒழுகுபவனாக இருப்பதுவும் குறை என பிறரால் ஓதப்படுவது நியாயமா? நற்கொள்கைகளை கைக் கொள்வதால் அதிக அளவில் நண்பர்களைவிட பகைவர்களையே அடைய முடியும் என்பதை அவர் கண்டு கொண்டார். தன்னைத்தானே ஏமாற்றிக் கொள்ளுதல், பாசாங்கு செய்தல் ஆகியவை இல்லையென்றால் நிரந்தரமாக எந்த பணியிலும் ஒட்டிக் கொண்டிருப்பது அவரைப் பொருந்தளவில் கடினம்.

குமாரை அவ்வளவு எளிதில் யாரும் விலைக்கு வாங்கிவிட முடியாது. அவர் சற்று வித்தியாசமான நபர். கொள்கைப்பிடிப்பு உள்ளோர் எப்பொழுதுமே இறுக்கமான குணமுள்ளவர்களாக இருப்பார்கள். மேலும், அவர்களைச் சுற்றி சிடுமூஞ்சித்தனமும் இருளும் ஒருங்கே அமைந்திருக்கும். ஆனால், அவர்கள் சட்டத்திற்கு புறம்பானவர்களாயிருக்க மாட்டார்கள். யாருக்கும் தளராத அணுகுமுறையானது அவரை தன் உள்ளார்ந்த லட்சியத்திற்கு உண்மையாக இருக்க வைத்திருந்தது. நாளாவட்டத்தில் இவரின் இந்த போக்கிற்காக வேலைச்சூழல் இவரை ஏற்று மதிக்கலானது.

பத்து மணியானதும் பணியாளர்கள் அலுவலகத்தில் குமைய ஆரம்பித்தனர். அவனது அலுவலக கதவிற்கு எதிராய் முகத்தை நீட்டி வைத்துக்கொண்டு நின்ற அவனைப் பார்த்த அவன் பெண் உதவியாளர், தன் கைகளை அசைத்து நல்வரவு கூறினாள். அப்போது அவளது சிரிப்பில் கவலைத்துளியை அவன் கண்டான். அவளது சிறிய அறையில் பையை அவள் வைத்தவுடன் அவளை அவன் உள்ளே வரும்படி அழைத்தான்.

"அன்னெட்டி! இன்று எல்லாவற்றையும் அப்படி அப்படியே போடு. நான் ஒரு முக்கிய தொலைபேசி அழைப்பிற்காகக் காத்திருக்கிறேன்" என்று அவன் தன் வழக்கமான தொனியில் கூறினான்.

“அப்படி வரும் அழைப்புகளை தங்களுக்கு நேரடியாக வரும் படி செய்யவா?” என்றாள் அவள்.

“ஆம், அப்படியே செய்; அதுவே சரியாயிருக்கும்” என்றான் அவன்.

10.30 மணிக்கு அவனது தொலைபேசி சிணுங்கியது. அது சேர்மனின் உதவியாளரிடமிருந்து வந்த அழைப்பு.

“சேர்மன் உங்களுக்காக, கூட்ட அரங்கில் காத்துக் கொண்டிருக்கிறார்” என்றான் அவன்.

தொலைபேசியை அதனது இடத்தில் வைத்த பின்பு குமார் அவனது சாம்பல் நிற ‘டை’யை சரி செய்தான். பின் தலைமுடியையும் அவ்வாறே செய்தான். சில நொடிகளில் அவன் தன் கால் தடங்களை சுறுசுறுப்புடன் பதித்து தாழ்வாரத்தின் வழியாக கீழிறங்கிறான். வித்தியாசமான ஏதோவொன்று அவனை அப்பொழுது இடைமறித்தது. ஹாலுக்கு செல்லும் வழியில் அநேக கண்கள் அவனை நோக்கியிருந்தன. அவர்கள் நிச்சயமாக அவன் ஊகித்து வைத்திருக்கும் விஷயத்தை அறிந்திருக்க முடியாது.

அவனது உயர் அதிகாரிகள் அமர்ந்திருக்கும் அந்த அறைக் கதவைத் தட்டினான். சேர்மன் எழுந்து நின்று குமாரின் கைகளைப் பிடித்து குலுக்கினார். அங்கு உதவி சேர்மனின் மகள் அவளது தந்தைக்குப் பதில் வந்திருந்தாள். இது அவனுக்கு ஆச்சரியத்தை ஏற்படுத்தியது. அவனுக்கு ஏற்கனவே அறிமுகமாகி இருந்த மற்ற இரு போர்டு உறுப்பினர்களும் தங்கள் தலைகளை இவனைப் பார்த்து அசைத்தனர்.

“மிஸ் ஜாப் ரியாவை தாங்கள் ஏற்கனவே சந்தித்திருக்கிறீர்களா?” என்றார் சேர்மன். “ஆம் ஐயா!” என்றான் குமார். அவள், அவனிடம் தன் கைகளைத் தந்த போது அதைப் பிடித்து குலுக்கினான் அவன்.

அவளது தந்தை உடல்நலமில்லாதவராக இருப்பதால் அவளே அவருக்குப் பதில் இங்கு காரியங்களை ஆற்றுவார் என்று தன் பேச்சை சேர்மன் தொடர்ந்தார்.

ஏனைய போர்டு உறுப்பினர்கள் மிஸ்டர் அகமது, தாஸ் ஆகியோரை குமாருக்கு சேர்மன் அறிமுகம் செய்தார்.

அவர்களிருவரும் தங்களின் காலை வணக்கத்தை குமாருக்கு செலுத்தினர். அவரது முந்தைய கூட்டங்களில் அவர்களுடன் இங்கு குமார் இருந்துள்ளான். எனினும் சேர்மனின் அறிமுக அனுசரணையை அவன் மறுக்க முன்வரவில்லை. கூட்டத்தில், “திருவாளர் குமார் இந்த அலுவலக சிறந்த ஊழியர்களில் ஒருவர்” என சேர்மன் கூறினார். அந்த அறிவிப்பை குமார் நம்பினானா அல்லது நடக்கப்போகும் கலந்துரையாடல் சுமுகமாகப் போக வேண்டும் என்பதற்காக அவ்வாறு சொல்லப்பட்டதா என்பதை யாராலும் ஊகிக்க முடியாது. “நீ இங்கு பணி செய்ய ஆரம்பித்து எவ்வளவு நாட்களாகி இருக்கும்; அய்ந்தாறு வருடங்கள் இருக்குமென நம்புகிறேன்” என்றார் சேர்மன்.

“வரும் ஆகஸ்ட்டுடன் எட்டு வருடங்கள் ஆகிறது அய்யா” என்றான் குமார்.

“ஓ! அது மிகவும் ருசிகரமானது. நீ இங்கிருப்பது எங்களுக்கெல்லாம் மிக்க மகிழ்ச்சியை அளிக்கிறது.”

இந்தப் பேச்சு மூவருக்கும் பிடித்திருந்தது. அதனால் அதை ஆமோதித்து குரல் எழுப்பினர். அவன் நிற்கும் திசையைப் பார்த்து, மிஸ்கேப்ரியா, “இருக்கை ஒன்றில் அமருங்கள்” என்றாள். நாராயணனுக்கு அடுத்தபடியாக அரங்கத்தில் பேசியது அவளே! பின் நான்கு பேருக்கும் குறுக்காய் அவன் அமர்ந்தான். பழக்கப்பட்டவர்களுக்கு எல்லாக் கூட்டத்தையும் போல தான் இந்த கூட்டமும்! ஆனால், இது இன்று சற்று கடினமானது. மோசமான வானிலை பற்றி சில கொடூர வார்த்தைகளை உதிர்த்து விட்டு சேர்மன் நேரடியாக விஷயத்திற்கு வந்தார்.

“குமார்! கம்பெனி சிக்கலில் உள்ளது என்பதை நீ அறிவாய். சென்ற 15 நாட்கள் நமக்கு சாதகமாக இல்லை. தொடர்ச்சியாக நடைபெற்ற சில நிகழ்வுகளை நான் குறிப்பிடுகிறேன் என்பதை நீ தெரிந்து கொண்டிருப்பாய் என நான் நம்புகிறேன்” என்றார் சேர்மன். தன் முகத்தை சோகமாக வைத்துக்கொண்டு,

“நான் இந்தச் சூழலை நன்கு அறிவேன், நாராயணன் ஐயா! இப்போதைய பொருளாதாரச் சூழலில் இம்மாதிரி துரதிர்ஷ்டமான நிகழ்வுகள் நம்மை முடக்கிப்போட்டு விடக் கூடாது.”

இப்பொழுது மிஸ் கேப்ரியாவின் பேச்சுக்கான சுற்று வரப்போகிறது. எனவே, மேற்கூறிய வாக்கியம் முடிந்தவுடன் அவரின் அடுத்த வாக்கியத்திற்கான தேடுதல் பார்வையை அவள் வீசினாள்.

“நீ இந்தத் துறையின் தலைமையில் இருப்பதனால் இங்கு நிகழ்ந்ததாகச் சொல்லப்படும் விஷயங்களை ஆராய உனது ஒத்துழைப்பு தேவைப்படுகிறது.” இவ்வாறு சேர்மன் தன் பேச்சை தொடர்ந்தார்.

குமார் சற்றும் தயக்கமின்றி, “நான் உங்கள் பேச்சை ஆதரிக்கவில்லை. என்ன மாதிரியான ஒத்துழைப்பை என்னிடமிருந்து நீங்கள் எதிர்பார்க்கிறீர்கள்?” என்றான்.

“எதையாவது பேசினால் அது மோசமான விளைவுகளை கம்பெனிக்கு கொண்டு வந்துவிடும். ஸ்டாக்கின் விலை பெரியஅளவில் தாக்கமடையும். அது நமது போட்டியாளர்களுக்கு பலத்த லாபத்தை அடைய வழிவகுக்கும் என்பதை நாம் மறந்து விடக்கூடாது” என்று போர்டு உறுப்பினரில் ஒருவர் கூறினார்.

பின், தன் தலையை முன்னுக்கு நீட்டிக்கொண்டு சேர்மன் கூறினார்: "இந்த விஷயத்தில் சம்பந்தப்பட்ட பார்ட்டி கம்பெனியில் மிகுந்த செல்வாக்குடையவர். எனவே அவரது ஆசாபாசங்களை பூர்த்தி செய்ய நாம் கடமைப்பட்டவர்கள் இல்லையா குமார்?" என்றார் சேர்மன்.

குமார் அமைதியாக புன்னகை பூத்தவாறு அமர்ந்திருந்தான். மிஸ் கேப்ரியா, தன் புருவத்தை உயர்த்திக் கொண்டு, "தாங்கள் இதை ஒரு தமாஷாக எண்ணுகிறீர்களா?" என்றாள். அவளது பரிகாசமானதும் மங்கலானதுமான பார்வை அவனது முகத்தை விட்டு ஒருதடவை கூட விலகவில்லை. அலுவலக வட்டாரத்தில், அவள், அவளது அப்பாவைப்போல் இரக்கமற்றவள் என்றும் இரக்க உணர்ச்சி அற்றவள் என்றும் கூறிக்கொள்வார்கள். அதனால் அவளது அச்சுறுத்தும் பாவனை மனிதர் எவரையும் ஆட்கொள்ள வல்லது.

"இல்லை மேடம்! நான் அப்படி இல்லை. சேர்மன் வேண்டுமானல் அப்படி இருக்கக் கூடும்" என்றான் குமார்.

சேர்மன் முகம் சுளித்தார். எப்பொழுதுமே அவரை மரியாதைக் குறைவாக யாரும் அழைக்க மாட்டார்கள். அவரது பதவிக்கு முன்பாக மிஸ்டர் போடாமல் யாரும் அவரை அழைத்தால் அது அவருக்கு பிடிக்காது. "அன்பு மகனே, கம்பெனியில் நடக்கும் விஷயங்களை ஒன்றுவிடாமல் எப்போதும் அக்கறையுடன் பார்த்து வரக்கூடியவன் நான்! எனவே கேலிப் பேச்சை நான் ரசிக்கவில்லை" என்றார் சேர்மன். "நீ எதையேனும் கேட்க விரும்பினால் என்னிடம் கேள். ஆனால், என்ன கேட்கப் போகிறாய் என்பதில் தெளிவாய் இரு!"

அனைவரும் இதுபற்றி தங்களுக்குள் ரகசிய குரலில் பரிமாற்றம் செய்துகொண்டனர். பின் இரண்டாவது போர்டு உறுப்பினர் கூறினார்: "இந்த விஷயத்தை விசாரிக்க ஒரு தனிக்கமிட்டி போடப்பட்டுள்ளது. அதில் நம்மில் யாரும் கிடையாது. ஆனால், ஒன்று தெரியவேண்டும். தாங்கள் நம் பக்கமாக இல்லையா, என்று."

"விசாரணையின் போது உங்களிடம் விரிவான முறையில் கேள்விகள் கேட்கப்படும். அப்போது சில முக்கியமான தகவல்களை நீங்கள் தரமாட்டீர்களா" என்று கேப்ரியா கேட்டாள். குப்பையை கிளருவதில் அவளே முதலாம் நபராயிருந்தாள்.

"தனிக் கமிட்டியிடம் என் அந்தரங்கம் குறித்த உண்மைகளை மறைத்து பொய் சொல்லச் சொல்கிறீர்களா மேடம்?"

"குமார், நாங்கள் உங்களை பொய் சொல்லச் சொல்லவில்லை. தகவல்கள் எதையும் முன் கூட்டியே நீங்களாகவே சொல்லக்கூடாது என்பது தான் எங்களது கோரிக்கை" என்றார் சேர்மன். கேப்ரியாவின் பேச்சை குறுக்கீடு செய்த சேர்மனின் பேச்சில் எல்லோரும் பார்க்குமளவிற்கு சினம் தோன்றியிருந்தது. "மிஸ்டர், நாராயணன், நான் அதைச் செய்ய விரும்பவில்லை" என்றான் குமார். அவனது 'விரும்பவில்லை' என்ற வார்த்தையில் அழுத்தமிருந்தது.

"இம்மாதிரிப் பேர்வழிகளுக்கு விளக்கமாகச் சொல்வது அர்த்தமற்றது. உனது மனநிலையை மாற்ற வேறு வழியை நாடுவோம்" என வேறொரு போர்டு உறுப்பினர் கூறினார். "அதனால் நீங்கள் அதுகுறித்து தீவிரமாக இருக்க தேவையில்லை."

இடையே இடையே பேசுபவர்களின் போக்கு திடீரென புதிய வடிவம் கொண்டது. பேரம்பேசுவது போல் அவர்களின் குரல் தொனித்தது.

"உனது பங்கிற்கு நீ நன்றாகத்தான் ஆடிவிட்டாய், குமார்!" என்றார் சேர்மன்.

"அடையாள பூர்வமாக"! என்றான் குமார்.

"என்ன சொன்னாய்?" என்றார் சேர்மன் பதிலுக்கு.

"எனக்கு எதைப்பற்றியும் கவலை இல்லை" என்றான் குமார்.

சேர்மன் அவரது கோபக் கனல் எதறிக்கும் பேச்சைத் தொடர்ந்தார். "நீ என்னதான் வேண்டுமென்கிறாய்? பணமா அல்லது பதவி உயர்வா? நீ இந்த பெரும் வாய்ப்பை நன்கு பயன்படுத்த எண்ணுகிறாய் இல்லையா? உனது விலையைச் சொல்லிவிடு, அதை நீ பெற்றுக்கொள்ளலாம். அதற்குப் பதிலாக இப்போது ஏற்பட்டிருக்கும் இந்த நெருக்கடியிலிருந்து எங்களை விடுவி!"

"ஒவ்வொரு மனிதனும் அவனுக்கான விலையைக் கொண்டுள்ளான் என்பது உறுதியான ஒன்றுதானே." இது இரண்டாம் போர்டு உறுப்பினர்.

"உன்னைப்போல் வளரும் பருவத்தினன் நல் ஒத்துழைப்பு வழங்கி லாபம் அடைவது நன்றாயிருக்கும். எல்லாமே வெள்ளையும் கருப்புமாய் இருக்காது. ஒரு நல்ல காரியத்திற்காக நாம் கொஞ்சம் விட்டுக்கொடுத்துப் போனால் அது புத்திசாலித்தனமாக இருக்கும்." மிஸ் காப்ரியா இவ்வாறு கூறினாள்.

"இல்லை, நீங்கள் தரப்போவதாக சொல்லப்படும் எந்த ஒரு சலுகையும் எனக்கு வேண்டாம். அவற்றை விடவும் மதிப்பு வாய்ந்த ஒன்றை நான் விரும்புகிறேன்" என்று அரை மனதாக குமார் கூறினான். இவ்வாறு கூறியபொழுது அவன் சிரித்த சிரிப்பில் நம்பிக்கை இழந்திருந்தது. அவன் சேர்மனை நோக்கியே இந்த வார்த்தைகளை உதிர்த்தான். அறையிலிருந்து

மற்றவர்களைக் கண்டுகொள்ளாமலேயே இவ்வாறு பேசினான்.

"இந்த உலகத்தில் பணத்தையும் அதிகாரத்தையும் விட உயர்ந்தது என்று ஒன்றுமில்லை மிஸ்டர்" என்றார் முதலாம் போர்டு உறுப்பினர். சிலர் அதைக்கேட்டு நகைத்தனர்.

குமார் அமைதி காத்தான்.

"இதுவரை கொள்கை மட்டுமே உன்னை இந்த அளவுக்கு கொண்டு வந்திருக்கிறது. வெற்றியானது சட்டத்தை இப்பொழுதும் எப்பொழுதும் வளைத்துக் கொண்டுதானிருக்கிறது" என்றார் சேர்மன். "அதை விரைவாக நீ அறிந்துகொள்வது நலம்" என்று மேலும் அவர் தன் உரத்த குரலில் கூறினார். அவரது குரலில் வெறுப்பு மேலோங்கியிருந்தது.

பேச்சுவார்த்தை சூடாகப் போய்க் கொண்டிருந்தபோது, நிர்வாகம் தனக்களித்திருந்த சாம்பல்நிற அலுவலக உடை உடுத்தியிருந்த அலுவலக உதவிப் பையன் அந்த அறையினுள் பிரவேசித்தான். அவனை அனைத்துக் கண்களும் ஒரு சேரத் துழாவின. அவன் கையிலிருந்த ட்ரேயில் டீயும் பிஸ்கட்டுமிருந்தன.

"எங்களுக்கு இப்போதைக்கு எதுவும் வேண்டாம், நீ வெளியே போய்விடு" என்று அந்த பையனைப் பார்த்து வரக்கூடாத விலங்கு எதுவோ உள் நுழைந்தது போலவும் அதை அவசரமாக விரட்டுவது போலவும் சேர்மன் கூறினார்.

அவன் பயத்தில் தட்டுத் தடுமாறி வெளியே சென்றான். அடுத்த ஒரு மணி நேரத்திற்கு அவர்கள் குமாரை தங்கள் வழிக்கு கொண்டுவர முயன்றனர். அது தோல்வி அடைந்ததும் அவன் மீது அழுத்தம் தர சில உபாயங்களை கையாண்டனர். குமார் எதற்கும் அசையவில்லை. முன்பாக அவனை மிரட்டிப் பார்த்தார்கள், லஞ்சம் தர முயற்சித்தார்கள். அது தற்சமயம் பழங்கதையாய் போய்விட்டது. கடைசியில் அவர்கள் துண்டை விரிக்க தயாரானர்கள். குமார் தனது விருப்பமின்மையைத் தெரிவித்தது அவர்களுக்கு ஈடு செய்யமுடியா இழப்பாய் போயிற்று. கம்பெனியில் அவனது எதிர்காலம் தற்போது என்னவென்று முடிவாயிற்று. சேர்மன், "குமாரின் சேவை இந்தக் கம்பெனிக்கு இனி தேவையில்லை" என்றார். "அவனுக்கு ஒரு மாத ஊதியம் வழங்கப்படும். ஒரு மாத நோட்டீஸ் அவன் தரவேண்டியதில்லை. இன்று மாலைக்குள் அவனது அலுவலக அறையை அவன் காலி செய்ய வேண்டும்" என்று மேலும் கூறினார். ஒப்பந்தப்படி இல்லாது அவன் வேலையிலிருந்து நீக்கப்படுவதை அவன் எதிர்த்தான். அவன் கம்பெனிக்கு எதிராய் வழக்கு தொடர முடியும். ஆனால், இப்போதைய சூழலில் அது அவனுக்கு அப்பாற்பட்டதாய் தோன்றியது. அவர்களது இழிய செயலுக்கும் நிலைமைக்கும் தன்னைத் தாழ்த்திக்கொள்ள வேண்டாம் என நினைத்தான். தன் மனக் கொதிப்பிற்கு ஆளானவர்களையும் அந்த அறையையும் விட்டு அவன் வெளியேறினான்.

பின் அவனது அறையை தன் கனத்த மனதுடன் அவன் காலி செய்தான். இந்தச் செய்தியைக் கேட்ட அவனது உதவியாளர் அனெட்டிகண்ணீர் சிந்தி அழுதாள். இன்னும் சில சக ஊழியர்களும் உணர்ச்சி பொங்க அவன் அறையினுள் நுழைந்தனர். கம்பெனி ஊழலை மறைக்கப் பார்க்கிறது எனப் புகார் அளிக்கக் கோரி குமாரை அவர்கள் கேட்டுக்கொண்டனர். ஆனால் குமார், அதைப் பற்றி சிந்திக்கவில்லை. தற்போதைய சூழலுக்கு அவன் இன்னும் வந்த பாடில்லை. அவனுக்கு பரிந்து பேசும் ஏனைய ஊழியர்களும் தங்களது கம்பனி விசுவாசத்திற்கு பின்னாளில் பதில் சொல்ல நேரிடும். எனவே அவர்களைப் பற்றிய சிந்தனை குமாரிடம் மேவியது. வரப் போகும் நாட்களில் அவர்கள் தன் மேல் கொண்டிருக்கும் அக்கறை என் மனதில் நின்று நிலவும்! பின் அவன் தன் பொருட்களடங்கிய பெரிய மரப்பட்டியை எடுத்துக்கொண்டான். தன் தந்தையாரின் படத்தை அமைதியாக உற்று நோக்கினான். குமார் அன்றைய தினம் அருமையானதும் அழகானதுமான உடையைத் தரித்திருந்தான். இப்படி விசேச உடை உடுப்பது அவனுக்கு வழக்கமில்லை என்றாலும் அன்று அவன் தன்னை குற்றவாளியாக ஆக்கப் போகிறார்கள் எனத் தெரிந்தே அப்படி உடை அணிந்திருந்தான் போலும்! மின் தூக்கியை மட்டுமே பார்த்துக் கொண்டு அவன் தன் நடையைக் கட்டினான். அவன் பின்னால் ஒரு கூட்டமே சென்றது. அதில் அவனது இளவயது உதவியாளரும் இருந்தாள். தன் வருமானத்தை மட்டுமே வைத்து தன் குடும்பத்தை நடத்தி வரும் ஆபிஸ் பையனும் அங்கிருந்தான். குமாருடன் ஆலோசனை மற்றும் உதவி கேட்க வந்தவர்கள் சிலரும் அக்கூட்டத்திலிருந்தனர். கூடியிருந்த கூட்டத்தினரை கடைசியாக ஒரு முறை குமார் திரும்பிப் பார்த்தான். மற்றப்படி ஒரு வார்த்தை கூட பேசவில்லை. அநேகரின் கண்களில் கண்ணீர் இருந்தது. அவர்களது இதயத்தில் குமார் எப்பொழுதும் வீற்றிருப்பான். ஆனால், அவர்களது பார்வை தற்சமயம் அவனை மிகவும் பாதிப்புக்குள்ளாக்குகிறது.

அவனது உணர்ச்சித் தழும்பலை மறைக்க அவன் அவர்களிடம் தன் முகத்தைக் காட்டாது, மின்தூக்கி அறையினுள் நேராக நுழைந்து அதன் கதவுகள் மூடிக்கொள்வதைக் கண்டான். ●

*mail to:* **alagiaha@gmail.com**



# மு. முபாரக் கவிதைகள்

1

உடல்நலமில்லாத
ஒவ்வொரு முறையும்
மருத்துவமனைக்கு அழைத்துச்செல்லும் போது,
அரசு மருத்துவமனைக்கு
அழைத்து
சென்றிருக்கலாமே என்பார்.

விலை உயர்ந்த ஆடைகளை வாங்கி வரும்போது
எனக்கெதற்கு இத்தனை
விலையில் என்பார்.
எங்கேனும் வெளியே அழைத்து சென்றால்
பேருந்தில் போகலாமே
கார் எதற்கென கடிந்துகொள்வார்.

எனக்காக
சம்பாதித்ததை
செலவழித்து விட்டு உனக்கு என்ன செய்வாய் என
கேட்டுக்கொண்டேயிருப்பார்,
மருத்துவமனைக்கு அழைத்து சென்றால்
எனக்கு செலவாகி விடுமேயென
வலிகளை சொல்லாமல் மரணமடைந்த அப்பா!

2

மழை பற்றிய
கவிதையொன்றை எழுதத் தொடங்குகிறேன்
மழை வந்துவிடுகிறது.

பறவை பற்றிய
கவிதையொன்றை
எழுதத் தொடங்குகிறேன்
பறவை வந்து விடுகிறது.

வண்ணத்துப்பூச்சி பற்றிய
கவிதையொன்றை
எழுதத் தொடங்குகிறேன்
வண்ணத்துப்பூச்சி வந்து விடுகிறது.

இறைவனைப் பற்றிய
கவிதையொன்றை
எழுதத் தொடங்குகிறேன்,
குழந்தையொன்று வந்து வாசலில் நிற்கிறது!

*mail to:* **ammubarak2011@gmail.com**

# சிவாவும் ஹரியும் பழைய புத்தகங்களும்

2024ஆம் ஆண்டு ஜனவரி மாதத்தில் சென்னையில் நடைபெற்ற புத்தகக் காட்சிக்கு நானும் விட்டல்ராவும் சேர்ந்து செல்வதாகத்தான் முதலில் திட்டமிட்டிருந்தோம். அதற்கு இசைவாக பயணச்சீட்டுகள் கூட பதிவு செய்து வைத்திருந்தேன்.

● பாவண்ணன்

எதிர்பாராத விதமாக அந்தத் திட்டம் நிறைவேறவில்லை. ஒரு புத்தக வெளியீட்டு விழாவில் கலந்துகொள்வதற்காக ஒரு வாரம் முன்னாலேயே சென்னைக்குச் செல்லும் வேலை வந்துவிட்டது. முதலில் பதிவு செய்த பயணச் சீட்டுகளை ரத்து செய்துவிட்டு, மீண்டும் தனியாக பயணச் சீட்டு பதிவு செய்துகொண்டு போய் வந்தேன். விட்டல்ராவ் மட்டும் தொடக்கத்தில் திட்டமிட்ட வகையிலேயே கண்காட்சிக்குச் சென்று ஐந்தாறு நாட்களுக்குப் பிறகு திரும்பினார்.

கண்காட்சிக்குச் சென்ற அனுபவங்களைப் பற்றியும் சந்தித்த மனிதர்களைப் பற்றியும் ஒவ்வொரு நாளும் தொலைபேசி வழியாகவே கொஞ்சம் கொஞ்சமாகச் சொன்னார் விட்டல்ராவ். நேருக்கு நேராக அமர்ந்து முழுவீச்சில் அத்தனையையும் கேட்கவேண்டும் என்று நினைத்தேனே தவிர, அதற்கான நேரத்தை ஒதுக்கி அவர் வீட்டுப் பக்கம் செல்ல சரியான ஒரு வாய்ப்பு அமையவில்லை. ஏதேதோ புற வேலைகள் காரணமாக அலைந்து கொண்டிருந்தேன். ஒரு வாரத்துக்குப் பிறகுதான் ஒரு மாலைப்பொழுதில் அவருடைய வீட்டுப் பக்கமாகச் செல்லும் வேலை வந்தது. அந்த வேலையை வேகவேகமாக முடித்துவிட்டு, அங்கிருந்து நேராக அவருடைய வீட்டுக்குச் சென்றுவிட்டேன்.



அவருடைய வீட்டின் முன்கதவுகள் எப்போதும் திறந்தே இருக்கும். அவர் வீட்டில் இருக்கிறார் என்பதற்கு அதுதான் அடையாளம். தட்டவேண்டிய அவசியமில்லாமல் அதைத் திறந்துகொண்டு உள்ளே சென்றேன். சுற்றுச் சுவருக்கும் வீட்டுச் சுவருக்கும் நடுவில் உள்ள இடைவெளியில் ஒரு பதினைந்து அடி தொலைவு நடந்தால் கிழக்கே பார்த்த வீட்டுக் கதவைப் பார்க்கலாம். அந்தக் கதவு திறந்திருக்க, சுவரருகில் போடப்பட்டிருந்த சாய்வு நாற்காலியில் அமர்ந்தபடி விட்டல்ராவ் கைபேசி வழியாக யாரோ ஒருவரோடு பேசிக் கொண்டிருந்தார்.

என்னைப் பார்த்ததும் நிமிர்ந்து பார்த்து கண் பார்வையினாலேயே எனக்கு நல்வரவு கூறி, அருகிலிருந்த நாற்காலியின் பக்கம் கையைக் காட்டி உட்காரும்படி சொன்னார். அவர் குறிப்பிட்ட நாற்காலியில் அமர்ந்து அருகிலிருந்த செய்தித்தாளை எடுத்துப் புரட்டத் தொடங்கினேன்.

தொலைபேசி உரையாடலில் விட்டல்ராவ் அதிகமாக எதுவும் பேசவில்லை. மறுமுனையிலிருந்து உரையாடியவர் சொல்வதை மட்டும் காதில் வாங்கியபடி "ம் ம்" என்று சொல்லிக்கொண்டே தலையாட்டிக் கொண்டிருந்தார். நடுநடுவில் "ஆமாம்மா, ஆமாம்மா" என்றார். ஐந்தாறு நிமிடங்களுக்குப் பிறகு அந்த உரையாடல் நிறைவடைந்தது. விட்டல்ராவ் கைப்பேசியை மேசை மீது வைத்துவிட்டு புன்னகை படிந்த முகத்துடன் திரும்பினார். அந்தப் புன்னகையில் ஒருவித நிறைவு, மகிழ்ச்சி, கொண்டாட்டம், நெருக்கம், பரவசம் எல்லாவற்றையும் பார்க்க முடிந்தது.

"யாரு சார் இவ்ளோ நேரமா பேசினாங்க? பழைய காலத்து கூட்டாளியா?" என்று கேட்டேன். "இல்லை இல்லை" என்று தலையசைத்தார் விட்டல்ராவ்.

"அப்ப, எழுத்தாளரா?"

"ம்ஹூம்."

"சொந்தக்காரரா?"

"ம்ஹூம்."

"பேத்தியா?"

"இல்லை இல்லை."

அவருக்கும் எனக்கும் பொதுவாகத் தெரிந்த எல்லாப் பெயர்களையும் அவரிடம் சொல்லிவிட்டேன். அந்தப் பட்டியலிலேயே இல்லாதவராக இருந்தார் அவர். யாராக இருக்கக்கூடும் என கண்டுபிடிப்பது பெரிய சவாலாக இருந்தது.



“உங்க முகம் பளபளன்னு மின்னுற அளவுக்கு யாரோ பேசியிருக்காங்கன்னு மட்டும் எனக்குத் தெரியுது. ஆனா யாருனு கண்டுபிடிக்கமுடியலை.”

சில கணங்களுக்குப் பிறகு பழைய புன்னகை மாறாத முகத்துடன், “பேசினவங்க பேரோ முகமோ எதுவுமே எனக்கும் தெரியாது பாவண்ணன். இப்பதான் முதன்முதலா பேசறாங்க” என்றார்.

“அப்படியா?” என்று ஆச்சரியத்தோடு நான் அவரைப் பார்த்தேன். பிறகு “யாராவது புது வாசகரா?” என்று கேட்டேன்.

அதைக் கேட்டு அவருக்கு சிரிப்பு வந்துவிட்டது. ‘இனிமேல்தானா எனக்கு புதுசா வாசகர்கள் வரப்போறாங்க?” என்று கேட்டார். தொடர்ந்து, “சமீபத்துல புத்தகக் காட்சிக்குப் போயிருந்தேன் இல்லையா? அப்ப இந்து தமிழ் நாளிதழ்ல வேலை பார்க்கக்கூடிய ஒரு இளைஞரைச் சந்திக்கக்கூடிய வாய்ப்பு கிடைச்சது. அருண்பிரசாத்னு பேரு. இதுக்கு முன்னால ரெண்டுமூனு தரம் டெலிபோன்ல மட்டும் பேசியிருக்காரு. அவரையும் நான் கண்காட்சியிலதான் முதன்முதலா பார்த்தேன். அவரோடு பேசிட்டிருந்த சமயத்துல, ஒரு காலத்துல சென்னையில பல இடங்கள்ல செல்வாக்கோடு இருந்த பழைய புத்தகக் கடைகள் பத்தி ஒரு பேச்சு வந்தது. அதைப்பத்தி அவரு நிறைய கேள்வி கேட்டாரு.”

“அதைப் பத்தித்தான் நீங்க உங்க வாழ்விலே சில உன்னதங்கள் புத்தகத்துல ஏற்கனவே நிறைய எழுதியிருக்கீங்களே சார்.”

“ஆமாமாம். அந்தப் புத்தகத்துல அந்த மாதிரியான கடைகளைப் பத்தி ஏராளமா எழுதியிருக்கேன். நானும் அதைத்தான் அந்தத் தம்பிகிட்ட சொன்னேன். அவரும் அந்தப் புத்தகத்தைப் படிச்சதா சொன்னாரு. அதுல இடம்பெறாத கடைகளைப் பத்தி சொல்லுங்க சார்னு கேட்டாரு. அவ்ளோ சுலபமா அவரு என்னை விடறதா தெரியலை. பொழுது போகறதே தெரியாம நெறய நேரம் அதைப் பத்தியே பேசிட்டிருந்தோம். அந்த நேரத்துல ஞாபகத்துக்கு வந்த ஒரு பழைய புத்தகக் கடையைப் பத்தி நான் சொன்னேன். புத்தகத்துல சொல்லாத ஒரு கடை. அவரும் எல்லாத்தையும் பொறுமையா கேட்டுகிட்டாரு. கடைசியா கௌம்பற சமயத்துல இப்ப நீங்க சொன்னதையெல்லாம் ஒரு கட்டுரையா எழுதிக் கொடுக்க முடியுமான்னு கேட்டாரு. சின்ன வயசுப்புள்ள ஆசைப்பட்டுக் கேட்கும்போது என்னால மறுக்க முடியலை.”

“புத்தகத்துல சொல்லாத கடையா? அப்ப எனக்கும் தெரியாத கடையாதான் இருக்கும். சொல்லுங்க சொல்லுங்க. நானும் கேட்டுக்கறேன்.”

“அந்தக் கடையை சிவா புத்தகக் கடைன்னு நாங்க சொல்வோம். மவுண்ட்ரோடுல கீதா ஓட்டலை ஒட்டி ஒரு சின்ன அறைக்குள்ள புத்தகங்களை வச்சிகிட்டு ஒருத்தர் கடை நடத்திட்டிருந்தார். அவரு பேரு சிவா. அதனால அந்தக் கடைக்கு சிவா புத்தகக் கடைன்னு பேரு. பொதுவா அந்த மாதிரியான கடைங்களுக்கு போர்டு இருக்காது.”

“சரி.”

“ரொம்ப அபூர்வமான புத்தகங்கள்லாம் சிவா பழைய புத்தகக் கடையில கிடைக்கும். நான் அந்தக் கடையில பல முறை பல புத்தகங்கள் வாங்கியிருக்கேன். அந்த அனுபவங்களைத்தான் அருண்பிரசாத்கிட்ட சொன்னேன். அதையே ஒரு கட்டுரையாகவும் எழுதிக் கொடுத்தேன். அருண்பிரசாத்துக்கும் அந்தக் கட்டுரை ரொம்ப பிடிச்சிருந்தது. பத்திரிகையிலயும் அந்தக் கட்டுரை உடனடியா வந்துடுச்சி.”

“அந்தக் கட்டுரையை படிச்சவருதான் இப்ப பேசினாரா?”

“படிச்சவர் இல்லை. சிவா புத்தகக் கடையை இப்ப நடத்திட்டிருக்கிறவரு. சிவாவிடைய மனைவி.”

ஒருகணம் திகைப்போடு நான் அவரையே பார்த்தேன். இப்படியும் நடக்கும் என்றெல்லாம் என்னால் யோசித்துக்கூட பார்க்கமுடியவில்லை. “என்ன சார் சொல்றீங்க?” என்று மெதுவாகக் கேட்டேன்.

“ஆமாம் பாவண்ணன். சிவா மனைவிதான் பேசினாங்க. ரெண்டுமூனு நாளா கடைக்கு நிறைய புது கஸ்டமர்ஸ் வந்திருக்காங்க போல. அந்தப் புத்தகம் இருக்குதா, இந்தப் புத்தகம் இருக்குதான்னு புத்தகத்துடைய பேரைச் சொல்லி கேட்டு வாங்கிட்டு போயிருக்காங்க. ஆரம்பத்துல இது எல்லாமே வியாபாரத்துல இயற்கைன்னு நெனைச்சிருக்காங்க. ஆனா வரக்கூடிய ஆட்கள் எல்லாருமே புதுசா இருந்ததாலும் அவுங்க கேட்டு வாங்கிட்டு போன புத்தகங்கள் எல்லாமே ஆர்ட் அன்ட் கல்ச்சர் சம்பந்தப்பட்டதா இருந்ததாலும் அவுங்களுக்கு ஏதோ ஒரு சந்தேகம் வந்திருக்கு.”

“வரத்தானே செய்யும். அதுதானே இயற்கை.”

“ஆமாம். அதுக்கப்புறம் ஆர்ட் சம்பந்தமா புத்தகம் கேட்டு வந்த ஒரு கஸ்டமர்கிட்ட நேரிடையாவே இந்தப் புத்தகம் இந்தக் கடையில கிடைக்கும்னு உங்களுக்கு எப்படித் தெரிஞ்சிதுன்னு கேட்டிருக்காங்க. அப்ப அவரு உடனே இந்த மாதிரி இந்து பத்திரிகையில இந்தப் புத்தகக் கடையைப் பத்தி விட்டல்ராவ்னு ஒருத்தரு கட்டுரை எழுதியிருக்காரு. அவர் அந்தக் காலத்துல என்னென்ன புத்தகங்களை இந்தக் கடையில வாங்கினாருங்கற விவரத்தையெல்லாம் அந்தக் கட்டுரையில எழுதியிருக்காரு. அதைப் பார்த்த பிறகுதான் இப்படிப்பட்ட ஆர்ட் அண்ட் கல்ச்சர், போட்டோக்ராபி தொடர்பான புத்தகங்களை இங்க வாங்கலாம்ன்னு தெரிஞ்சிகிட்டு வந்தேன்னு சொன்னாராம். அந்த அம்மாவுக்கு ஒரே ஆச்சரியம். சந்தோஷம். நம்ம கடையைப் பத்தி யாரு எழுதியிருக்காங்க, என்ன எழுதியிருக்காங்கன்னு தெரிஞ்சிக்க ஆர்வம் வந்துடுச்சி. அக்கம்பக்கம் பேப்பர் வாங்கற ஆளுங்ககிட்ட கேட்டு எப்படியோ அந்தப் பத்திரிகையில வந்த கட்டுரையை கண்டுபிடிச்சி படிச்சிட்டாங்க. அவுங்களுக்கு ரொம்ப சந்தோஷம். அதுக்கப்புறம் பத்திரிகை ஆபீஸ்க்கு போன் போட்டு எப்படியோ என்னுடைய போன் நெம்பரயும் கேட்டு வாங்கிட்டாங்க.”

“அவுங்கதான் இவ்ளோ நேரமா பேசிட்டிருந்தாங்களா?”.

“ஆமாமாம். சிவாவை எப்படி தெரியும், அவருக்கும் எனக்கும் எப்படிப்பட்ட தொடர்புன்னு ஏதேதோ கேட்டாங்க. சிவா இப்ப இல்லையாம். செத்துப் போயிட்டாராம், கேக்கறதுக்கு எனக்கே சங்கடமா இருந்தது. செத்துப்போன கணவரைப் பத்தி தெரிஞ்சிக்கணும்ங்கற ஆசை அவுங்களுக்கு. அவுங்க மனசு நெறயற மாதிரி நாலு வார்த்தை பேசினேன். நான் சொன்னதைக் கேட்டு அந்த அம்மாவுக்கு ரொம்ப ரொம்ப சந்தோஷம். சென்னைக்கு வரும்போது அவசியம் ஒருமுறை நம்ம கடைக்கு வரணும் சார்னு சொன்னாங்க. நானும் சரினு சொல்லியிருக்கேன். ஒரே ஒரு சின்ன செய்தி, அதனோடு சம்பந்தப்பட்டவங்களுக்கு எவ்ளோ சந்தோஷத்தைக் கொடுக்குது பார்த்தீங்களா? இப்படிப்பட்ட சந்தோஷத்தை கண் நிறைய பார்த்துப் பார்த்து மனசை நிறைச்சிக்கறதுலதான் எழுத்தாளனுடைய சந்தோஷம் இருக்குது. உண்மையிலயே இன்னைய நாள், என்னுடைய சிறந்த நாட்கள்ல ஒன்னுன்னு சொல்லலாம்.”

அந்த நிறைவில் அவர் முகம் கனிந்திருந்தது. மனிதர்களை மிக எளிதாக நெருக்கமாக இணைத்துவிடும் எழுத்தின் ஆற்றலை நினைத்து மகிழ்ச்சியாக இருந்தது. அப்படிப்பட்ட எழுத்தோடு நாமும் ஏதோ ஒரு வகையில் தொடர்பு கொண்டிருக்கிறோம் என்னும் எண்ணமே பெருமையாக உணரச் செய்தது.

சூழல் மௌனத்தை நோக்கிக் குவிவதைத் தடுக்கும் விதமாக, “சரி சார், இப்ப எனக்குச் சொல்லுங்க. அந்தச் சிவா யாரு? சிவாவை நீங்க எப்படி தெரிஞ்சிகிட்டீங்க? அவருடைய பழைய புத்தகக் கடையில இப்படிப்பட்ட புத்தகங்களை வாங்கலாம்ன்னு உங்களுக்கு எப்படி தெரிய வந்திச்சி?” என்று கேள்விகளை அடுக்கினேன்.

“இருங்க இருங்க. கேள்விகளை மொத்தமா அடுக்காதீங்க. ஒவ்வொரு பதிலா சொல்றேன்” என்று புன்னகைத்தபடி கையை உயர்த்தினார் விட்டல்ராவ். நானும் கேள்வி கேட்பதை நிறுத்திவிட்டு அவரைப் பார்த்தேன்.

“சிவா யாருன்னு சொல்றதுக்கு முன்னால நான் ஹரின்னு ஒருத்தரைப் பத்தி சொல்லணும். அதுக்கப்புறம்தான் சிவாவைப் பத்தி சொல்லமுடியும். ஹரி இல்லாம சிவா கிடையாது.”

“நீங்க சொல்றது ரொம்ப இன்டரிஸ்டிங்கா இருக்குது சார். அது யாரு ஹரி? இதுவரைக்கும் கேக்காத பெயரா இருக்குது. சொல்லுங்க.”

“சொல்றேன் சொல்றேன்” என்றபடி அணிந்திருந்த கண்ணாடியை எடுத்து அருகில் இருந்த ஒரு துணியால் அழுத்தித் துடைத்தார். விழியோரங்களில் கசிந்து ஒட்டிக் கொண்டிருந்த நீர்த்துளிகளையும் துடைத்துவிட்டு தொண்டையைச் செருமி குரலைச் சரிசெய்துகொண்டார்.

“ஆதம்பாக்கத்துல நாங்க இருந்த சமயத்துல வழக்கமா ஒரு சூப்பர் மார்க்கெட்லதான் எங்களுக்குத் தேவையான எல்லாப் பொருட்களையும் வாங்குவோம். பொருள் ரொம்ப தரமானதா இருக்கும். நம்பி வாங்கலாம். விலையும் ரொம்ப நியாயமா இருக்கும். அதனால அந்தக் கடையிலயே வாடிக்கையா வாங்கிட்டிருந்தோம். ஒரு இளைஞர்தான் அந்தக் கடையை நடத்திட்டிருந்தார். அவரு வயசு இருபத்தஞ்சிலேர்ந்து முப்பதுக்குள்ளதான் இருக்கும். அந்தக் காலத்துல என் வயசுல பாதி இருக்கும்ன்னு வச்சிக்குங்களேன்.”

“எந்த வருஷம் சார்?”

“அப்ப ரெண்டாயிரம் இன்னும் தொடங்கலை. இன்னும் ஆறேழு மாசம் பாக்கி இருந்திச்சி. அந்த மாதிரியான காலகட்டம்.”

“அப்படின்னா, நீங்க வேலையிலேர்ந்து ரிட்டயராகறதுக்கு ரெண்டுமூனு வருஷங்களுக்கு முந்தைய சமயம்னு சொல்லலாமா?”

“தாராளமா சொல்லலாம். அந்தக் காலத்துல எப்பவும் நானும் என் மனைவியும் சேர்ந்துதான் அந்த மார்க்கெட்டுக்குப் போவோம். பல நேரங்கள்ல அந்த இளைஞர்தான் பணம் வாங்கற இடத்துல இருப்பாரு. பொருளை வாங்கிட்டு அவருகிட்ட பணத்தை எண்ணிக் குடுத்துட்டு வந்துடுவோம். அந்த இளைஞர் எப்பவும் சிரிச்ச முகத்தோடு இருப்பார். புன்னகையோடு பணத்தை வாங்கிட்டு சில்லறை கொடுப்பாரு. தொடர்ச்சியா நான் அந்தக் கடைக்கு வர்ரதை கவனிச்சிட்டு ஒரு தரம் எந்த டிப்பார்ட்மெண்ட்ல சார் வேலை செய்றீங்கன்னு கேட்டாரு. நானும் டெலிபோன்ஸ்ல இருக்கேன்னு பதில் சொன்னேன். சிரிச்சிகிட்டே தலையை ஆட்டிகிட்டாரு. அவ்ளோதான். அதுக்கு மேல எதுவும் பேசலை. அந்த அளவுக்குத்தான் எங்க பழக்கம் அந்தக் காலத்துல இருந்தது. அவரு பேரைக்கூட நான் தெரிஞ்சிகிட்டதில்லை.”

“சரி.”

“ஒருநாள் ஆபீஸ்க்கு லீவ் போட்டுகிட்டு நான் திடீர்னு கேமிராவை தூக்கிகிட்டு கல்பாக்கத்துக்குப் பக்கத்துல சட்ராஸ்க்குக் கௌம்பி போயிட்டேன். அந்தக் காலத்துல அப்பப்ப அப்படி பித்து பிடிச்சிடும்.”

“சட்ராஸா?”

“ஆமாம். மெட்ராஸ் மாதிரி சட்ராஸ். அந்தக் காலத்துல வெளிநாட்டுக்காரன் வச்ச பேரு.”

“ரொம்ப விசித்திரமா இருக்குதே? நான் கேள்விப்பட்டதே இல்லை. என்ன சார் பேரு இது?”

“கல்பாக்கத்துக்குப் பக்கத்துல கடற்கரையை ஒட்டி சதுரங்கப்பட்டனம்னு ஒரு இடம் இருக்குது பாவண்ணன். பதினேழாம் நூற்றாண்டுல அந்த இடம் டச்சுக்காரங்ககிட்ட ஒரு துறைமுகமா இருந்திருக்குது. அவுங்க அந்த இடத்துல செங்கல்லால ஒரு பெரிய கோட்டை கட்டினாங்க. டேனிஷ்கோட்டைன்னு சொல்வாங்க. அந்தக் கோட்டைக்குள்ள அவுங்க விக்கறதுக்காக கொண்டுவந்த பொருட்களையும் வாங்கிய பொருட்களையும் பாதுகாப்பா வச்சிக்க ஒரு பெரிய கிடங்கு கட்டி வச்சிகிட்டாங்க. ஒரு நூறு வருஷ காலம் அவுங்க பயன்பாட்டுல அந்தக் கோட்டை இருந்திருக்குது. பத்தொன்பதாம் நூறாண்டு தொடக்கத்துல இங்கிலீஷ்காரங்களுக்கும் டச்சுக்காரங்களுக்கும் நடுவுல ஒரு சண்டை நடந்திச்சி. அப்ப கோட்டை இங்கிலீஷ்காரங்க கைக்கு போயிடுச்சி. சண்டையில இடிஞ்சது கொஞ்சம், கால ஓட்டத்துல இடிஞ்சது கொஞ்சம். அதுபோக, மிச்சம் இருக்கிற கோட்டைப் பகுதிகள் இப்ப சுதந்திர இந்தியாவில தொல்லியல் துறையுடைய கட்டுப்பாட்டுல இருக்குது. தானியக்கிடங்கு, பார்வையாளர் மாடம், நடனக்கூடம், நுழைவாயில் பீரங்கி, சுற்றுச்சுவர் எல்லாம் அப்படி அப்படியே இருக்குது. அதனுடைய பழைய அழகு இன்னும் போகலை. ஒரு நாள் முழுக்க அந்த இடத்தை சுத்திச்சுத்தி பார்த்தேன். என்கிட்ட அப்ப ஆஷிகா 2000னு ஒரு கேமிரா இருந்தது. ஜூம் அட்டாச்சிடு கேமிரா. வளைச்சி வளைச்சி எல்லா இடங்களையும் பல கோணங்கள்ல படம் எடுத்தேன்.”

“சரி.”

“ட்ரிப் முடிஞ்சி திரும்பி வந்த பிறகு எனக்குத் தெரிஞ்ச ஸ்டுடியோவுல கேமிராவைக் கொடுத்து க்வாலிட்டியோட இருக்கிற படங்களை ப்ரிண்ட் போட்டுத்தரச் சொன்னேன். அந்த ஸ்டுடியோகாரர் ரொம்ப கலை ரசனை உள்ளவர். அவரே அழகான படங்களை மட்டும் தேர்ந்தெடுத்து ப்ரிண்ட் போட்டு புதுசா ஒரு ஆல்பத்துக்குள்ள அடுக்கிவச்சி குடுத்தாரு.”

“சரி.”

“அந்த ஆல்பத்தை வாங்கி பைக்குள்ள வச்சிகிட்டு, அப்படியே வீட்டுக்கு சில சாமான்களை வாங்கறதுக்காக அந்த சூப்பர் மார்க்கெட்டுக்குப் போயிருந்தேன். என் கையில போட்டோ ஆல்பத்தைப் பார்த்துட்டு, அந்தக் கடைக்காரர் தம்பி என்ன சார் ஆல்பம் இது? ஏதாவது வீட்டு விசேஷமான்னு கேட்டுகிட்டே ஆல்பத்தைப் பார்க்க கை நீட்டுனாரு. வீட்டு விசேஷம்லாம் இல்லை, சும்மா ஒரு சுற்றுலா போய்வந்தேன். அங்க எடுத்த படங்கள்னு சொல்லிகிட்டே தயக்கத்தோடு ஆல்பத்தை அவருகிட்ட கொடுத்தேன்.”

“என்ன சொன்னாரு?”

“டேனிஷ்கோட்டை படத்தைப் பார்த்ததுமே சட்டுனு ரெண்டடி முன்னால வந்து என் கையை புடிச்சிகிட்டாரு. அவர் முகம் திடீர்னு பளபளன்னு மலர்ந்துபோயிடுச்சி. சத்ராஸ்க்கு போயிருந்தீங்களா சார்னு கேட்டாரு. அவருக்கு எப்படி அந்தப் பேரு தெரிஞ்சதுன்னு நான் திகைச்சிபோய் நின்னுட்டேன். அதுக்குள்ள அவரு ஒவ்வொரு படத்தையும் தொட்டுத் தொட்டு அவருக்கு தெரிஞ்ச வரலாற்று விஷயங்களையெல்லாம் சொல்ல ஆரம்பிச்சிட்டாரு. நான் அப்படியே ஆச்சரியத்துல்ல உறைஞ்சிபோய் நின்னுட்டேன். ஒரு மார்க்கெட் நடத்தற இளைஞருக்கு இவ்வளவு வரலாற்று ஞானம் இருக்குதேனு நினைச்சி சந்தோஷப்பட்டேன்.”

“சரி.”

“இதெல்லாம் உங்களுக்கு எப்படித் தெரியும்னு நான் அவருகிட்ட மெதுவா பேச்சு கொடுத்தேன். அவரு சிரிச்சிகிட்டே எனக்கும் இந்த மாதிரி வரலாற்றுப் பெருமை உள்ள பழைய ஊர்களை, கோட்டைகளை தேடித்தேடிப் பார்க்கறதுல ஆர்வம் உண்டு சார். என்கிட்டயும் ஒரு கேமிரா இருக்குது 35எ.எம்.எஸ். ஆல்.ஆர் கேமிரா. நானும் இப்படி கோட்டை கோட்டையா சுத்தி ஏராளம படம் எடுத்து ஆல்பம் போட்டு வச்சிருக்கேன்னு சொன்னாரு. அதுக்கு முன்னால நாங்க ரெண்டு பேரும் பல முறை பார்த்திருந்தாலும் அன்னைக்குத்தான் முறையா ஒருவருக்கொருத்தர் அறிமுகமானோம். அப்பதான் நானும் அவருகிட்ட எழுத்தாளர்னு சொல்லிகிட்டேன். அந்த இளைஞர் பேருதான் ஹரி.”

“நல்ல விஷயம் தெரிஞ்ச நண்பர்தான்.”

“ஆமாம். அதுல சந்தேகமே இல்லை. அதுக்கப்புறம் நாங்க அடிக்கடி பார்த்துகிட்டோம். என்னுடைய புத்தகங்களையெல்லாம் அவரு கேட்டு வாங்கிப் படிச்சாரு. அவருடைய போட்டோ ஆல்பங்களையெல்லாம் நானும் வாங்கிப் பார்த்தேன். என்னுடைய ஆர்வமும் அவருடைய ஆர்வமும் ஒத்துப்போனதால, எங்களுக்கு நடுவுல ஒரு நல்ல புரிதல் உருவாச்சி. நாங்க ரெண்டு பேரும் ஒன்னா வெளியே போனா, அப்பாவும் புள்ளையும் போல இருக்குதுன்னு சொல்வாங்க. அதுக்கேத்த மாதிரி அவரு எப்பவும் என்னை நயினா நயினான்னுதான் கூப்புடுவாரு.”

“அந்த அளவுக்கு ஆர்வம் இருக்கறவரு மார்க்கெட் வேலையில எப்படி இறங்கினாரு?”

“எனக்கும் அந்த சந்தேகம் இருந்தது. ஆனா ஹரியே ஒருநாள் எல்லா விஷயங்களையும் தெளிவா சொன்னாரு. ஆந்திராவை பூர்வீகமா கொண்ட குடும்பத்துல பொறந்தவரு அவரு. நிஜாம் காலத்துல ரொம்ப செல்வாக்கோடு வாழ்ந்த குடும்பம். அந்தக் குடும்பத்துக்கும் நிஜாம் அரசாங்கத்துக்கும் இடையில ஏதோ ஒரு பிரச்சினை. அதனால் அந்தக் குடும்பத்தைச் சேர்ந்த அண்ணன் தம்பி ரெண்டு பேரும் ரஷ்யாவுக்குப் போயிட்டாங்க. அண்ணன் பேரு சர்வேசம், தம்பி பேரு விஸ்வேசம். அந்தக் குடும்பத்துல அப்படி பேர் வைப்பாங்க போல. சுதந்திரத்துக்குப் பிறகு சமஸ்தானங்கள் எல்லாம் இந்தியாவோடு இணைஞ்ச பிறகுதான் அவுங்க இந்தியாவுக்குத் திரும்பி வந்தாங்க. ஹரி அந்தக் குடும்பத்துல பொறந்தவரு. ஹரியுடைய அண்ணன் ஆந்திராவுல பெரிய ஐபிஎஸ் ஆபீசர். ஹரி காலேஜ்ல ரெண்டு எம்.ஏ. டிகிரி வாங்கியவர். தெலுங்குல ஒரு எம்.ஏ., இங்கிலீஷ்ல ஒரு எம்.ஏ. அவருக்கு இருந்த தகுதிக்கு, அவரு நெனைச்சிருந்தா எங்கனா காலேஜ், யுனிவர்சிட்டின்னு வேலை தேடி போயிருக்கலாம். ஆனா அவருக்கு அதுல விருப்பமில்லை. அமைதியா சம்பாதிக்க ஒரு வழி கிடைச்சா போதும்னு நெனச்சி இந்த மார்க்கெட்ட தொடங்கி நடத்தினாரு. அவருடைய சொந்த தாய்மாமா கூட தமிழ்நாட்டுல கலெக்டரா இருந்தாரு. சந்திரமோகன்னு பேரு. ஜெயலலிதா சி.எம்.மா இருந்த சமயத்துல அவுங்களுடைய செயலாளரா வேதா இல்லத்துலயே சில காலம் தங்கியிருந்தவரு. அதுக்கப்புறம் திருவள்ளூர் கலெக்டரா மாற்றல் வாங்கிகிட்டு போயிட்டாரு.”

“ஹரியுடைய கதைக்குப் பின்னால இவ்வளவு பெரிய வரலாறா? ஆச்சரியமா இருக்குது சார்.”

“இன்னும் ஆச்சரியப்பட நிறைய விஷயங்கள் இருக்குது பாவண்ணன். அவரும் நானும் பழக ஆரம்பிச்சதும், ஒவ்வொரு வார இறுதியிலயும் சுற்றுலா பொறப்பட்டு போகலாம்ன்னு புதுசு புதுசா திட்டம் போட ஆரம்பிச்சிட்டோம். செஞ்சி, சந்திரகிரி, காஞ்சிபுரம், ஹம்ப்பின்னு மனம் போன போக்குல போய் ரெண்டு மூனு நாள் தங்கி, கேமிராவுல படம் புடிச்சிகிட்டு திரும்பி வந்தோம். அவரு சுட்டிக் காட்டுற படத்தை நான் எடுப்பேன். நான் சுட்டிக் காட்டுற படத்தை அவரு எடுப்பாரு. திரும்பி வந்ததும் உடனே ஸ்டுடியோவுக்கு போய் கேமிராவைக் கொடுத்துட்டு வந்திருவோம். நல்ல படங்களை ஸ்டுடியோகாரரே பிரிண்ட் போட்டு ஆல்பம் போட்டு வச்சிருப்பாரு. நாங்க அதை வீட்டுல சேர்த்து வச்சிக்குவோம்.”

“சரி.”

“ஒருமுறை நானும் அவரும் காஞ்சிபுரத்துல கோயில் சிற்பங்களைப் பார்க்கறதுக்காக பஸ்ல போயிருந்தோம். அன்னைக்குத்தான் ஜெயலலிதா ஆட்சியில கலைஞர் கைதான நாள். அது எதுவும் தெரியாமலேயே பஸ் ஏறிப் போயிட்டோம். நாங்க காஞ்சிபுரத்துக்கு போன பஸ்தான் கடைசி பஸ். எல்லா இடங்கள்லயும் கடையடைப்பு. ஊருக்குள்ள நடமாட்டமே இல்லை. எங்க பார்த்தாலும் மயான அமைதி. எப்படியோ ஒரு லாட்ஜ் கண்டுபிடிச்சி தங்கினோம். அவரே எங்கிருந்தோ எங்களுக்கு சாப்பாடு ஏற்பாடு செஞ்சிக் குடுத்தாரு.

ரெண்டுமூனு நாள் அங்கயே தங்கிட்டோம். அந்த ரெண்டு நாளும் சிற்பங்களைப் பார்த்து படம் எடுத்ததுதான் நாங்க செஞ்ச ஒரே வேலை. ஹரிக்கும் எனக்கும் மறக்கமுடியாத அனுபவம் அது.''

''சரி.''

''ஒருநாள் நான் கடைக்கு போயிருந்த சமயத்துல ஹரி ஏதோ ஒரு புத்தகத்தை வச்சிகிட்டு படிச்சிட்டிருந்தாரு. கிட்ட போய் என்ன ஹரி படிக்கிறீங்கன்னு நான் கேட்டேன். உடனே அவரு இந்தா நயினா, நீங்களே பாருங்க நயினான்னு என்கிட்டயே அந்தப் புத்தகத்தைக் கொடுத்திட்டாரு. கையில வாங்கியதுமே தெரிஞ்சிட்டுது. பழைய தாஜ் மேகசைன். தாஜ் ஓட்டல்காரங்க அப்படி ஒரு பத்திரிகையை வழவழ தாள்ல அந்தக் காலத்துல கொண்டுவந்தாங்க. கலை, ஓவியம், சிற்பம் தொடர்பான ஆய்வுக்கட்டுரைகள் அதுல ஏராளமா இருக்கும். பல முக்கியமான ஆய்வாளர்கள் எழுதுவாங்க. உலக வரலாற்றை தெரிஞ்சிக்கறதுக்கு வசதியா வெவ்வேறு பொருளடக்கம் சார்ந்து பலவேறு புகைப்படங்கள் கொண்ட சிறப்புப்பகுதியை அவுங்க கொண்டு வருவாங்க. நம்ம தமிழில காணக் கண்கோடி வேண்டும்ன்னு ஒரு சொல்லு உண்டு இல்லையா? உண்மையிலயே அப்படிப்பட்ட புத்தகங்களை பார்க்கறதுக்கு கண்கோடி வேண்டும்னுதான் சொல்லத் தோணுது.''

''சரி.''

''அந்தப் புத்தகம் புது புத்தகம் மாதிரியாவும் தெரியலை, பழைய புத்தகம் மாதிரியாவும் தெரியலை. எங்க வாங்கினீங்க ஹரின்னு தயக்கத்தோடு கேட்டேன். அதுக்கு அவரு சண்டே மார்க்கெட்ல வாங்கனேன் நயினான்னு சொன்னாரு. சண்டே மார்க்கெட்னு பொதுவா சொன்னா எப்படி ஹரி? இடத்துடைய பேரைச் சொல்லுங்கன்னு கேட்டேன். அப்பதான் அவரு மவுண்ட் ரோடுல கீதா ஓட்டல் பக்கத்துல இந்தியா ஏர்லைன்ஸ் ஆபீஸ்க்குக் கீழ மூலையில இருக்கிற பழைய புத்தகக் கடையில வாங்கினேன்னு விவரம் சொன்னாரு. அங்க போய் சிவா பழைய புத்தகக் கடைன்னு யாரைக் கேட்டாலும் வழியைச் சொல்லிடுவாங்கன்னு சொன்னாரு.''

''துப்பறியும் கதை மாதிரி ஒவ்வொரு தகவலும் சுவாரசியமா இருக்குது சார்.''

''ஒருநாள் ஹரியும் நானும் ஒன்னா சேந்து அந்தக் கடைக்குப் போனோம். சின்ன கடைதான். அதுக்கு நடுவுல நிக்கறதுக்குக் கூட இடமில்லாம எல்லா இடங்கள்லயும் புத்தகங்களை கட்டு கட்டி வச்சிருந்தாரு. ஹரி என்னை சிவாகிட்ட அறிமுகப்படுத்தினாரு. சார் எழுத்தாளர், அவரும் இனிமேல இங்க புத்தகம் வாங்க வருவாங்கன்னு சொன்னாரு. நானும் சிவாவும் ஒருத்தருக்கொருத்தர் வணக்கம் சொல்லிகிட்டோம். சிவா அப்படித்தான் எனக்கு அறிமுகமானாரு.''

''நல்ல நட்புகள் எல்லாம் அப்படித்தான் சார் அமையும்.''

''எங்களுக்கு கலை, பண்பாடு, புகைப்படம், சிற்பங்கள் சார்ந்த புத்தகங்கள் மேல ஆர்வம் இருந்ததால, அப்படிப்பட்ட புத்தகங்களையே தேடித்தேடி பார்த்தோம். ஏராளமான தாஜ் மேகசைன்கள் கட்டுகட்டா வச்சிருந்தாரு. அந்தக் காலத்துல தாஜ் மாதிரியே பிரபலமான ஓட்டல்காரங்க SOMA, CHOLA MARATTAN, LIFE, NAMASKAR-ன்னு பல பத்திரிகைகளைக் கொண்டு வந்தாங்க. வெளி மார்க்கெட்ல அதெல்லாம் கிடைக்கவே கிடைக்காது. ஒவ்வொரு பத்திரிகையிலும் பிரமாதமான கட்டுரைகளும் புகைப்படங்களும் இருக்கும். ஒவ்வொரு பத்திரிகையையும் பார்க்கப் பார்க்க பொழுது போவதே தெரியாது. ஏதோ ஒரு இடத்துலேர்ந்து சிவா அந்தப் பத்திரிகைகளை வாங்கி வந்து வித்தாரு. அதே மாதிரி INDIAN AIRLINES, AIR INDIA கூட அப்படிப்பட்ட பத்திரிகைகளை போட்டாங்க. என் மனைவியுடைய தங்கச்சி ஏர்லைன்ஸ்ல வேலை செஞ்சாங்க. அதனால நான் அந்தப் பத்திரிகைகளை ஏற்கனவே பார்த்திருந்தேன்.''

''அன்னையிலேர்ந்து சிவா கடைக்கு நீங்களும் வாடிக்கையாளரா மாறிட்டீங்களா?''

''ஆமாம். தாஜ் பத்திரிகை மேல எனக்கும் ஒரு மயக்கம் வந்துடிச்சி. நானும் பணம் இருக்கும்போதெல்லாம் ஒன்னொன்னா வாங்கி வாங்கி சேர்த்துவைக்க ஆரம்பிச்சேன். நான் ரெகுலரா வாங்கறேன்னு தெரிஞ்சதும் சிவா எனக்காகவே புதுசா வரக்கூடிய அந்தப் பத்திரிகைகள எடுத்து வச்சி கொடுக்க ஆரம்பிச்சாரு.''

''அவரும் பெரிய ரசனைக்காரருதான் போல.''

''நிச்சயமா. அதுல சந்தேகமே இல்லை. கல்கத்தா, டில்லி, பம்பாய், மெட்ராஸ்னு இந்தியாவுல பிரபலமான ஒவ்வொரு ஊருடைய வரலாற்றையும் புரிஞ்சிக்கிற மாதிரி அற்புதமான படங்களோடும் கட்டுரைகளோடும் தாஜ் பத்திரிகை வந்தது. அதையெல்லாம் சிவாதான் எனக்காக எடுத்து வச்சிருந்து கொடுத்தாரு. ஹரியுடைய அறிமுகம் கிடைக்கலைன்னா, நான் சிவாவை பார்த்திருக்கவே முடியாது. சிவா இல்லைன்னா அந்தப் பத்திரிகைகளையும் நான் பார்த்திருக்க முடியாது.''

விட்டல்ராவ் மிகவும் உணர்ச்சி வசப்பட்ட மனநிலையில் இருந்தார். அவரால் தொடர்ந்து பேசமுடியவில்லை. எப்படி உரையாடலைத் தொடர்வது என்று புரியாமல் எனக்கும் தவிப்பாக இருந்தது. சில கணங்களுக்குப் பிறகு பொதுவாக, ''எல்லாமே இயற்கையுடைய கருணைதான் சார். யாரை யாரோடு சேர்த்து வைக்கணும்ன்னு அதுக்கு

ஏற்கனவே தெரிஞ்சிருக்குது சார்'' என்றேன். எதையும் திட்டமிட்டு நான் அந்தச் சொற்களைச் சொல்லவில்லை. ஒரு வேகத்தில் இயல்பாகவே அவற்றைச் சொல்லிவிட்டேன். ஆனால், அச்சொற்கள் அவரை மீண்டும் சமநிலைக்குத் திரும்பிவரச் செய்துவிட்டன. ''நீங்க சொல்றது நூத்துக்கு நூறு உண்மை பாவண்ணன்'' என்றார்.

தொடர்ந்து, ''ஒருமுறை நான் தனியா சிவா கடைக்குப் போயிருந்தேன். அப்ப புதுசா வந்து எறங்குன ஒரு புத்தகக் கட்டை எனக்குக் காட்டினாரு சிவா. ஒரு பத்து புத்தகம் கொண்ட பெரிய கட்டு. ஒவ்வொன்னையும் அழகா பைண்டிங் செஞ்சி வச்சிருந்தாங்க. உங்களுக்குத் தேவைப்படுமா பாருங்கன்னு சொன்னாரு'' என்றார்.

''என்ன பத்திரிகை?''

''அந்தக் கட்டுலேருந்து ஒரு புத்தகத்தை எடுத்துப் பிரிச்சி பார்த்தேன். எல்லாமே 'லைஃப்' பத்திரிகையுடைய ஸ்பெஷல் இஷ்யூஸ். அந்தக் காலத்துல 'நேஷனல் மேகஸைன் அவார்ட்' வாங்கிய பத்திரிகை 'லைஃப்'. அந்தப் பத்திரிகையுடைய கொள்கையே புகைப்படம் வழியாக இருபதாம் நூற்றாண்டை ஆவணப்படுத்தறதுங்கறதுதான். அந்த மேகசைன், எழுபதுகள்ல 'த ஸ்பிரிட் ஆஃப் இஸ்ரேல் த இயர் இன் பிக்ச்சர்ஸ்', 'ரிமார்க்கபள் அமெரிக்கன் வுமன்', 'வேர்ல்ட்வார் த்ரூ போட்டோஸ்'னு பலவிதமான தலைப்புகள்ல ஒரு பத்து 'ஸ்பெஷல் இஷ்யூஸ்' போட்டாங்க. ஒவ்வொன்னும் தனித்தனியா பார்க்கறதுக்கு ஒரு பெரிய புத்தகம் மாதிரி இருக்கும். பைண்டிங் செய்யபப்ட்ட அந்த ஸ்பெஷல் இஷ்யூஸ்ங்களைத்தான் யாரோ கொண்டுவந்து அங்க போட்டுட்டு போயிருக்காங்க.''

''பத்தும் ஸ்பெஷல் இஷ்யூஸ்தானா?''

''மொத்தத்துல பத்து ஸ்பெஷல் இஷ்யூஸ்தான் வந்திருந்தது. அதை வாங்கிப் படிச்சவங்க பாதுகாப்பா வச்சிக்கணும்ங்கற எண்ணத்துலதான் பைண்டிங்லாம் செஞ்சி வச்சிருக்காங்க. என்ன காரணத்தாலோ, எல்லாம் பழைய புத்தகக் கடைக்கு வந்து சேர்ந்துட்டுது.''

''சிவா என்ன சொன்னாரு?''

''புத்தகக்கட்டு முன்னால என்னை அழைச்சிம்போய் நிக்க வச்சிட்டு புடிச்சிருக்குதா பாரு சார்னு சொல்லிட்டாரு. ஒரு புத்தகத்தைப் பிரிச்சதுமே அதெல்லாம் ஸ்பெஷல் இஷ்யூஸ்னு எனக்குப் புரிஞ்சிட்டுது. ஒரே ஒரு புஸ்தகத்தை எடுத்துப் பிரிச்சிப் பார்க்க ஆரம்பிச்சேன். அதை மூடவே மனசில்லை. அவ்வளவு அற்புதமான படங்கள். ஆர்வத்துல ஒவ்வொரு புத்தகமா எடுத்து எடுத்து பிரிச்சி பார்த்தேன். எல்லாமே பொக்கிஷங்கள். முதல் உலகப் போர், இரண்டாவது உலகப் போர், ரஷ்யப் புரட்சி, பிரெஞ்சிப் புரட்சி தொடர்பான ஏராளமான படங்களும் கட்டுரைகளும் இருந்துச்சி. ஒவ்வொரு போட்டோவுக்குப் பின்னாலும் ஒரு வரலாறு.''

''என்ன முடிவெடுத்தீங்க?''

''எனக்கு எல்லா புத்தகங்களையும் எடுத்துக்கணும் போல இருந்தது. என்ன விலைக்கு கொடுப்பீங்க சிவான்னு கேட்டேன். ஒவ்வொரு பைண்டிங்கும் ஆயிரம் ரூபா. பத்து பைண்டிங்கும் சேர்த்து பத்தாயிரம் ரூபா கொடுத்துட்டு எடுத்துக்குங்க சார்னு சொன்னாரு சிவா. என்ன சிவா, பத்தாயிரம் ரூபா எனக்கு எப்படி கட்டுப்படியாகும் சிவான்னு கேட்டேன். சிவா, சிரிச்சிகிட்டே அதுக்குக் கொறைஞ்சி கொடுத்தா, எனக்குக் கட்டுப்படியாவாது சார்னு சொல்லிட்டாரு.''

''வாங்கினீங்களா, இல்லையா?

''என்னால எப்படி வாங்கமுடியும்? அவ்ளோ பணம் எங்கிட்ட அப்ப கிடையாது. எட்டாத பழத்துக்கு கொட்டாவி விட்டமாதிரி ஒவ்வொரு புத்தகமா எடுத்து எடுத்து பொரட்டிப் பார்த்துட்டு சரி, அப்புறமா வரேன் சிவான்னு சொல்லிட்டு வந்துட்டேன்.''

''அப்புறம்?''

''நான் எங்க போனாலும் அந்த லைஃப் ஸ்பெஷல் இஷ்யூஸ் ஞாபகமாவே இருந்தது. மறக்கவே முடியலை. அன்னைக்கு சாயங்காலம் சூப்பர் மார்க்கெட்டுக்குப் போன சமயத்துல ஹரிகிட்ட 'லைஃப் ஸ்பெஷல் இஷ்யூஸ்' பார்த்த விஷயத்தைச் சொன்னேன். அவரு அந்த நிமிஷமே கல்லாவை விட்டு எழுந்து வந்துட்டாரு. 'அற்புதமான பொக்கிஷத்தை பார்த்துட்டு வாங்காத வந்துட்டீங்களே நயினா. இப்பவே கௌம்புங்க நயினா, வேற யாராவது வாங்கிட்டு போயிட்டாங்கன்னா, நமக்கு கிடைக்காம போயிடும். உடனடியா போய் வாங்கிட்டு வந்துடலாம்'னு துடிச்சாரு ஹரி. 'என்ன ஹரி சொல்றீங்க, அவரு பத்தாயிரம் ரூபா சொல்றாரேன்'னு சொன்னேன். 'புரியுது நயினா, ஒரு தங்க நகையையோ வைர நகையையோ பணம் போட்டு வாங்கமாட்டமா. அந்த மாதிரி நினைச்சிக்குவோம். கௌம்புங்க'னு சிரிச்சிகிட்டே சொன்னாரு ஹரி. ஹரி வாங்கினாருன்னா அது நான் வாங்கின மாதிரிதான். அப்பப்ப வாங்கி நானும் படிக்கறதுக்கு வசதியா இருக்கும்னு தோணிச்சி. உடனே ஒரு ஆட்டோவை புடிச்சி சிவா கடைக்கு வந்துட்டோம். அந்த அளவுக்கு லைஃப் ஸ்பெஷல் இஷ்யூஸ் மேல ஹரிக்கு ஒரு ஆர்வம் இருந்தது.''

''நாம தேடறதன் வழியா நாம பெறுவது என்னங்கற அம்சம்தான் நம்முடைய ஆர்வத்துக்கான தூண்டுகோல்னு தோணுது சார். பணம்ங்கறது எப்பவும் ரெண்டாவது பட்சம்தான்.''

''உண்மைதான் பாவண்ணன். ஹரிக்கு அந்த மாதிரியான நோக்கம்தான். இதுல என்ன பிரச்சினைன்னா, நாம நேரிடையா அந்தப் புத்தகங்களை

சந்தா கட்டி வாங்கறது கஷ்டம். பல மடங்கு கூடுதலான பணம் கொடுத்தாதான் அது சாத்தியமாகும்.''

''ஆமாம் சார். நீங்க கடைக்குப் போய் சேருகிற வரைக்கும் அந்தப் புத்தகம் அங்கயே இருந்ததா? அதைச் சொல்லுங்க முதல்ல.''

''அவசரப்படாதீங்க. இருங்க இருங்க. ஒவ்வொன்னா சொல்றேன். ஆட்டோவுல போவும்போதே ஹரிகிட்ட ஒரு வார்த்தை சொன்னேன். நீங்க போனதுமே பத்தாயிரம் ரூபாயை தூக்கி குடுத்துடாதீங்க ஹரி. கொஞ்சம் பேசிப் பார்த்து விலையை முடிஞ்சவரைக்கும் குறைச்சிப் பார்ப்போம். எந்த அளவுக்கு விலை குறையுதோ, அந்த அளவுக்கு நமக்கு நல்லதுன்னு சொன்னேன். சரி நயினா, அப்படியே செய்யுங்கன்னு சொல்லிட்டாரு ஹரி.''

''அப்புறம்.''

''சிவா கடைகிட்ட போய் ஆட்டோவுலேர்ந்து எறங்கி கடைக்குப் போனோம். நல்ல வேளையா சிவா கடையிலயே இருந்தாரு. அவருக்குப் பக்கத்துல அந்தப் பைண்டிங் கட்டும் இருந்தது. எங்களைப் பார்த்ததும், 'நீங்க திரும்பி வருவீங்கன்னு தெரியும் சார்'னு அந்தக் கட்டை தூக்கி எங்க முன்னால வச்சாரு சிவா. ஒவ்வொரு பைண்டிங்கா எடுத்து பிரிச்சி பிரிச்சி பார்த்தாரு ஹரி. கொஞ்ச நேரம் கழிச்சி, வாங்கிக்கலாம் நயினான்னு சொல்ற மாதிரி தலையை அசைச்சாரு.''

''சரி.''

''இந்தப் புத்தகத்து மேல ஆசைப்பட்டுத்தான் இவரை அழைச்சிகிட்டு மறுபடியும் வந்திருக்கேன். எங்க ஆசை எப்படிப்பட்டதுன்னு நல்லா தெரிஞ்ச ஆளு நீங்க. வித்துக் கொடுக்கறேன்னு சொல்லித்தான் நீங்க யாரோ ஒருத்தவங்ககிட்டேர்ந்து இந்தப் புத்தகங்களை எடுத்து வந்திருப்பீங்கன்னு எங்களுக்கும் தெரியும். அவருக்கும் நீங்க பணம் கொடுக்கணும், அதுபோக உங்களுக்கும் கொஞ்சம் நிக்கணும். அதுதான் வியாபாரம். அதுவும் எங்களுக்கும் தெரியும். அதனால நாங்க வாங்கிக்கிற மாதிரி ஒரு நல்ல விலையைச் சொல்லுங்க. இப்பவே எடுத்துட்டு போயிடறோம். வெளியே ஆட்டோ கூட ரெடியா நிக்குதுன்னு சொன்னேன்.''

''என்ன சொன்னாரு சிவா?''

''அதான் ஏற்கனவே சொல்லிட்டேனே சார். ஒரே விலைதான். பத்தாயிரம் ரூபாய் கொடுத்துட்டு எடுத்துக்குங்கன்னு மறுபடியும் சொன்னாரு. பழைய பாட்டையே பாடாதீங்க சிவா, நான் ஒரு விலை சொல்றேன், கேளுங்க. அதான் நியாயமான விலைன்னு சொன்னேன். சிவா என்னையே உத்துப் பார்த்தாரு. ஒரே விலைதான் சிவா. அஞ்சாயிரம் ரூபா. பத்து பைண்டிங்கையும் மொத்தமா எடுத்துக்கறோம்னு அடிச்சி சொன்னேன். என்ன சார் ஒரேடியா பாதிக்குப் பாதி கேக்கறீங்கன்னு குரலை இழுத்தாரு சிவா. அதான் விலை சிவா. எங்களுக்கு அதுதான் கட்டுப்படியாவும்னு தீர்மானமா சொன்னேன். ஒரு நிமிஷம் எதையோ யோசிச்சி பார்த்தாரு சிவா. அப்புறம் த்ச்னு நாக்கு சப்பு கொட்டிகினே சரி சார், உங்கள மாதிரியானவங்ககிட்ட எப்படி சார் பேரம் பேசறது, பணத்தைக் கொடுத்துட்டு எடுத்துட்டு போங்க சார்னு சொல்லிட்டாரு.''



விட்டல்ராவ் உடன் பாவண்ணன்

''பரவாயில்லையே. பேரத்தை வெற்றிகரமா முடிச்சிட்டீங்க.''

''ஆமா. ஹரிக்கு ஆனந்தமோ ஆனந்தம். அடுத்த நிமிஷமே பர்ஸ்லேர்ந்து அஞ்சாயிரம் ரூபாயை எடுத்து சிவாகிட்ட கொடுத்துட்டாரு. ஒரே நிமிஷம்தான். பிசினஸ் முடிஞ்சிட்டுது. பத்து பைண்டிங்குகளையும் அதே ஆட்டோவுல ஏத்திகிட்டு கடைக்கு வந்துட்டோம். நானும் ஹரியும் மாறிமாறி அந்தப் புத்தகங்களைப் படிச்சி முடிக்க ஆறு மாசமாச்சி. அதுல பார்த்த ஒவ்வொரு புகைப்படமும் அற்புதமான படம். இன்னும் என் கண்ணுக்குள்ளயே இருக்குது.''

தொடர்ந்து சில கணங்கள் அமைதியாகவே நகர்ந்தன. ஒரு பெரிய புனைகதையை ஒருவர் சொன்னதைக் கேட்ட நிறைவு எனக்குள் ஏற்பட்டது. ஒவ்வொரு காட்சியையும் எனக்குள் நானே சித்தரித்துப் பார்த்துக்கொண்டேன்.

''சிவாவுடைய மனைவி ஏன் உங்ககிட்ட பேச ஆசைப்பட்டிருப்பாங்கன்னு இப்ப எனக்குப் புரியுது சார். உங்க கட்டுரை, சிவா மறுபடியும் உயிரோடு எழுந்து நடமாடற மாதிரியான ஒரு உணர்வை அவுங்களுக்குக் கொடுத்திருக்கும் சார். அந்த வேகம்தான் அவுங்களை பேச வச்சிருக்குது'' என்றேன்.

விட்டல்ராவ் புன்னகையுடன் தலையசைத்துக்கொண்டார். பிறகு, ''சென்னைக்குப் போகும்போது ஒரு முறை சிவா பழைய புத்தகக் கடைக்கு போய் வரணும் பாவண்ணன். அந்த அம்மாவையும் பார்த்துட்டு வரணும். ஹரியையும் பார்க்கணும்'' என்று சொன்னார்.

*mail to:* **writerpaavannan2015@gmail.com**

# காலியாகுதல்

கதர்க்கடை ஆயான் நேரே தொழுவுக்கே வந்துவிட்டார்.

● **வண்ணதாசன்** ஓவியம்: **ராஜ்குமார் ஸ்தபதி**

“நடராசு, நீ ஞாயித்துக் கிழமைண்ணா மாட்டைக் குளிப்பாட்ட வாய்க்காலுக்குப் புறப்பட்டிருவேன்னு தெரியும். அதான் வெயிலுக்கு முந்தியே வந்து உங்கிட்டே தாக்கல் சொல்லீரணும்னு தோணுச்சு.”

நடராஜனின் பக்கத்தில் போய் பசுவை நடுமுதுகில் தட்டிக் கொடுத்தார். பக்கவாட்டில் வளைவாக நீவிக் கொடுத்த கையை முகர்ந்து, “உன்னை மாதிரி யாரும் பசுமாட்டைப் பார்த்துக்கிட மாட்டாங்க. காமதேனுவைத் தொட்ட மாதிரி இல்லா இருக்கு வாசம். அதுக்கு மாதிரி இதுக்கு ரெக்கை ஒண்ணுதான் இல்லை” என்று கொஞ்சம் தள்ளிப் போய்க் கன்றுக்குட்டி பக்கம் நின்று அதன் முன் மண்டையைத் தடவிக் கொடுத்தார். “சங்கு மாதிரிச் சுட்டி வெள்ளை வெளேர்னு கறந்த பால் சிந்தினது கணக்கா கரெக்டா எங்கே விழுந்திருக்கு பாரு” என்று சிலாகித்தார். எப்படியாவது ஆரம்பித்து, எந்த இடத்திலாவது நின்று, சொர்ணம்மா இறந்து போனதைச் சொல்லிவிட்டால் போதும் என்று இருந்தது அவருக்கு.



நடராஜன், பசுவின் கழுத்தில் கிடத்த தும்பைக் கழற்றிவிட்டு வேறு நீளத் தும்பாகக் கட்டியபடியே, “நல்ல வேளை ரெக்கை இல்லை. இல்லாட்டா இதுவும் பறந்து போயிருக்கும்” என்றார். ஆயானுக்குச் சுளீர் என்றது. “அப்போ நடராசனுக்கு எல்லாம் தெரியுமா?”

நடராஜனுக்குக் கல்யாணம் பேசும் போது இருபது வருடங்களுக்கு முன்பு சொர்ணம்மாவைப் பற்றித் துப்புச் சொல்லி, கல்யாணத்தைப் பேசி முடித்தவரே அவர்தான். அப்புறம் எவ்வளவோ நடந்தது. நடராஜனுக்கு நடந்தது முழுவதையும் தெரிந்தே, அவரோடு வேலை பார்க்கிற, தூரத்துச் சொந்தமான பெருமாள் லட்சுமி அவரைக் கட்டிக்கொண்டாள். பிற்பாடு இங்கேயும் ஒரு மகன், சொர்ணம்மாவுக்கும் பெரியநாயகிபுரத்தில் ஒரு மகன். ஒரு குறையும் இல்லை.

ஆயான், தனக்கு ஒரு பொறுப்பு இருக்கிறதாகவும், நடராஜனிடம், ‘சொர்ணம்மா நேற்று ராத்திரி தவறிப் போனாள்; மாரடைப்பு என்று கேள்வி’ என்பதைச் சொல்லிவிட வேண்டும் எனவும் நினைத்தார்.

“எனக்கு விடியக் காலமே விஷயம் தெரியும் ஆயான். எங்க ஸ்கூல் ட்ரில் வாத்தியாருக்கு அந்த ஊர்தானே. அவர் உதயத்திலேயே ஃபோனில் கூப்பிட்டுச் சொல்லீட்டாரு. ‘இந்த மாதிரி ஆகிப் போச்சு. மகன் வந்துதான் எடுக்கணும். நாளை வரைக்கும் ஆகும் போல’ண்ணு.”

தொழுவிலிருந்து பசுவை அவிழ்த்து, அது இரண்டு எட்டு வைத்து, தொழுவின் கல் தளத்தில் குளம்புச் சத்தம் கேட்க ஆரம்பித்துவிட்டது. கதர்க் கடை ஆயானை லேசாக முட்டிக்கொண்டு கன்றுக்குட்டி நடராஜன் பக்கம் ஓடியது.

“நீயும் வருஷா வருஷம் எத்தனையோ பேருக்குப் பாடம் சொல்லிக் கொடுக்கிறவன். உனக்கு நான் சொல்ல வேண்டியதில்லை நடராசு. போய் ஒரு நடை எட்டிப் பார்த்துட்டு வந்திரு. உன்னை யாரும், ‘ஏன் வந்தே’ன்னு கேட்கப் போறது இல்லை. என்ன இருந்தாலும் தலையைக் குனிஞ்சு நீ கட்டின கயித்துக்குக் கழுத்தை நீட்டுனவா. நீ அடிக்கல, பிடிக்கல, கழுத்தப் பிடிச்சுத் தள்ளலை. பத்து நாளோ பதினைஞ்சு நாளோ, இங்கே இருக்கிற வரைக்கும் ஒக்கலிலே கூட இல்லை. உன் தோளிலேயேதான் வச்சிருந்தே. தரையில கூட நடக்க விடலை. ஒரு வேளை அவளுக்குத் தரையில நடக்கிறதுதான் பிடிச்சிருந்துதோ என்னமோ பெரியநாயகிபுரத்தைப் பார்க்கப் போயிட்டா.

“அது எல்லாம் கரையோடு கரையா, மணலோடு மணலா இருக்கட்டும். இதை ஒண்ணை மாத்திரம் செஞ்சுரு. நிம்மதியா தெக்கே போய்ச் சேருவா. அவ காலைத் தேய்ச்சுக்கிட்டு நடு வழியில எங்கேயும் நிக்கப் படாது” என்றவர் கொஞ்சம் வேகமாகப் போய் நடராஜனின் தோளில் கைவைத்து, “நல்லதுண்ணோ கெட்டதுண்ணோ நினைச்சு உனக்கு நான் செஞ்சதுக்கு எனக்கும் ஒரு நிவர்த்தி வேணும்லா. அதுக்காகவாது செய்யி” என்றார். அவருடைய விரல்



நடராஜனின் தோளின் காரை எலும்பில் பட்டது. அதை ஒட்டிய ஆழமான பள்ளத்தில் அவருடைய விரல்கள் விழுந்து தத்தளித்தன.

நடராஜன் பதில் ஒன்றுமே சொல்லவில்லை. புறவாசல் பக்கமாக வெளியேறி, உமா சோடா கலர் கம்பெனிக் காரர் தோட்டம் வழியாக அவருடைய புளிய மரங்கள், நெட்டலிங்க மரத்தையெல்லாம் தாண்டி, மூப்பனார் விறகுக்கடைப் பக்கம் வரும் வரையா கதர்க்கடை ஆயான் இவ்வளவும் சொல்லிக்கொண்டே வந்திருக்கிறார்.? நடராஜனுக்குக் கஷ்டமாக இருந்தது. அவ்வளவு வயதான மனிதரை இடைவிடாமல் இவ்வளவு நீண்ட நேரம் பேசியபடி பின்னாலே வர வைத்திருக்கிறோம். இதில் அவர் தப்பு என்ன இருக்கிறது?

ஆயான் என்று சொல்லாமல் உறவு முறை சொல்லி, "மாமா, நீங்களும் நானும் எதைச் சுருக்கமாப் பேசணுமோ அதை இவ்வளவு நீட்டமாப் பேசும்படி ஆகிப் போச்சு. ஊடையிலே ஊடையிலே ரெண்டு வார்த்தை நானும் பேசியிருந்தால் கூட, உங்களுக்கு மரியாதை கொடுத்த மாதிரி, நல்லா இருந்திருக்கும். ஏதோ சண்டைக்காரன் மாதிரி வாயைத் திறக்காம வந்துட்டேன். மூப்பனார் கடையிலே விறகு கீறுததுல மண்ணு அதிர்கிறதே இங்கே நம்ம காலுக்குக் கீழே வரைக்கும் இருக்கும்ணா எனக்கு எப்படி இருக்கும்?" நடராஜன் முகத்தில் தோல் எல்லாம் இழுத்துக் கட்டினது போல் ஆகியது.

"உங்க வயசு வேற. என் வயசு வேற. ஆனா இதில வயசு வித்தியாசம் பார்த்தா, என்னால நான் நினைக்கிறத உங்ககிட்டே சொல்ல முடியாது. இடுப்புல இருக்கிறதை அவுத்துப் போட்டுட்டு நிண்ணா தான் சரியா இருக்கும். இப்போ நான் மாட்டைக் குளிப்பாட்டப் போயிக்கிட்டு இருக்க வாய்க்காலுக்கு மேற்கே செங்கமால்காரர் வீட்டுத் தோட்டத்தில ஒரு

அரசமரம் நிக்கும் உங்களுக்குத் தெரியுமுல்லா?'' நடராஜன் கேட்கையில் வெறும் சைகையில் கீழே இருந்து மேலே வரை உயர்த்திக் காட்டி, ''மானம் வரைக்கும் லா இருக்கும், எது இலை எது பழம்னு தெரியாம'' என்று ஆயான் கண்ணை அகட்டினார்.

''நீங்க சொல்லுதீங்க அல்லவா மாமா. எது இலை எது பழம்ணு தெரியாம இருக்கும்ணு. அப்படித்தான் கல்யாணம் ஆனதில் இருந்து எங்க ரெண்டு பேரில ஆம்பிளை யாரு, பொம்பிளை யாருண்ணு தெரியாத மாதிரி ஒருத்தரோடு ஒருத்தரா, நானும் சொர்ணமும் இருந்தோம். இன்னும் கொஞ்சம் சேர்த்துச் சொல்லணும்னா இலை தெரியாத, பழம் தெரியாத அந்த மரத்தோட கிளையே தெரியாத மாதிரி உக்காந்து கிளி கிளியாச் சத்தம் போட்டுக்கிட்டு இருந்தோம். எல்லாம் லைட்டுப் போன மாதிரி ஆயிப் போச்சு திடீர்னு. இவ்வளவு வெளிச்சம் என்னத்துக்கு? இவ்வளவு இருட்டு என்னத்துக்கு? எனக்குப் புரியலை. மூச்சை முட்டுது.

''இத்தனைக்கும் ரொம்பச் சந்தோஷமாக இருக்கிற நேரத்தில் கூட, சொர்ணம் ஒளிவு மறைவு இல்லாம எல்லாம் சொல்லீருக்கா. சரவண முத்துங்கிற பெயரை சரவணத்தான் என்று சொல்லுவா. 'ஊர் முழுவதும் அவரைக் கொறுவா பண்ணையார் என்றுதான் சொல்லும். அவருக்கு மேல் உதடு பிளந்திருந்ததைத் தையல் போட்டும் சரியா வரலை. வாய் அதனால லேசாக் கோணின மாதிரி இருக்கும்.' இதைச் சொல்லும் போது சொர்ணம் வாயைக் கோணிக் காட்டியிருக்கிறாள்.

''அந்த மனுஷனுக்குச் சொர்ணம் என்றால் ரொம்ப இஷ்டமாம். சொர்ணத்தோட அப்பாதான், 'அவன் பண்ணையார்னா அவன் மட்டுக்கு. அதுக்காக எம் பிள்ளைய அவனுக்குக் கட்டிக்கொடுக்க மாட்டேன்'ன்னு சொல்லீட்டார் போல. எனக்குக் கல்யாணம் ஆகி வந்ததுக்குப் பிறகு நல்லாத்தான் இருந்தா. என் கிட்டே கூட சொல்லியிருக்கா, 'நம்ம ரெண்டு பேரும் போயி சரவணத்தானை ஒரு தடவை பார்த்துட்டு வருவோம்'னு. ரெண்டு கையையும் மாலை போட்டமாதிரி என் தோளில் போட்டுக் கொஞ்சிக்கிட்டே தான் இதைச் சொன்னா. நான் சரீண்ணு சொல்லியிருக்கேன். திடீர்னு ஒரு நாள், 'சரவணத்தானுக்கு உடம்புக்குச் சரியில்லையாம். போய்ப் பார்த்துட்டு வந்திருதேன்'னு சிரிச்சுக்கிட்டேதான் போனா. அப்புறம் திரும்பி வரவே இல்லை.

''அதுக்குப் பிறகு பெருமாவைக் கட்டினேன். குடும்பம் நடத்தினேன். பிள்ளையைப் பெத்தேன். எல்லாம் சரி. ஆனா அந்தக் கிளிச் சத்தத்தை மட்டும் மறுபடி கேட்கவே இல்லை.'' சொல்லும் போது நடராஜன் மரம் போல இருந்தார். முகத்தில் ஒரு இலை கூட அசையவில்லை.

''தப்பா நினைச்சுக்கிடாதீங்க. வீட்டுக்குப் போயி, பெருமா கிட்டே.. ஒரு தம்ளர் காப்பி வாங்கிக் குடிச்சிட்டு, நாலு வார்த்தை உக்கார்ந்து பேசீட்டுப் போங்க. வந்திருதேன்.'' மாட்டுக் கயிற்றைப் பிடித்து நிறுத்திச் சக்கையாகச் சிரித்தார். கொஞ்சம் முன்னால் போயிருந்த கன்றுக்குட்டி இந்தப் பக்கமாக மறுபடி வந்தது. மண்சுவரில் நட்டிருந்த சோற்றுக் கற்றாழையை நாருக்காக ஒடித்துப் போட்டிருந்தார்கள். குருத்து மடல் எல்லாம் இளம் பச்சையில் கிடந்தன. ஒவ்வொரு நுனியிலும் துரு நிற ரத்தம் போல முள்.

வாய்க்காலில் நிறையத் தண்ணீர். நல்ல ஓட்டமும் இழுப்பும். ''வாத்தியாரை எங்கே காணுமே. லேட் ஆயிட்டுதேண்ணு நினைச்சோம்'' என்று படிக்கல்லில் சோப்புப் போட்டுக்கொண்டே ஒயர்மேன் முத்தையா சொன்னார். நடராஜன் எதுவும் சொல்லவில்லை. சிரித்துக் கொண்டார்.

அவருக்கு வாய்க்கால் நிரம்பிப் போவது பிடித்திருந்தது. தண்ணீரின் நிறம் இளம் பச்சையில் பாலத்துக்குக் கீழ் இரண்டாகப் பிளந்து, பிளவில் லேசாக நுரைத்துச் செல்வதையே பார்த்தார். வழக்கமாக நகர்ந்து செல்லும் ஆகாயத் தாமரை மிதப்பு ஒன்றுகூட இல்லை. கரு நீலப் பூவுடன் சுருள் இலைகளுடன் சல்லி வேர்ப் பரப்பும் முட்டைக் காய்களுமாக இப்போது ஒன்று விரைந்து சென்றால் நன்றாக இருக்கும்.

கன்றுக்குட்டியை, மாட்டை எல்லாம் குளிப்பாட்டித் தந்திக் கம்பத்தில் கட்டிவிட்டு, ரொம்ப நேரம் வாய்க்காலில் குளித்தார். பாலத்தில் ஏறி விரால் அடித்தார். பெண்கள் படித்துறை வரை நீந்திப்போய்த் திரும்பி வந்தார். வாய்க்கால் தண்ணீரை வில் போல வாயிலிருந்து கொப்பளித்தார். கரையேறி வெயிலில் கொஞ்ச நேரம் நின்றார். ஈரம் குளிர்ந்த தோல் உலர்ந்து கொஞ்சம் கொஞ்சமாகச் சூடு ஏறும் போது அவருக்கு நன்றாக இருந்தது.

எதிரே ஐஸ் விற்கிறவர் தன் மீது லேசாகச் சைக்கிளைச் சாய்த்தவாக்கில் தள்ளிக்கொண்டு வந்தார். சொர்ணம்மாவும் அவரும் ஒருதடவை ஆற்றுக்குப் போய்விட்டு வரும் பாதையில் பால் ஐஸ் வாங்கிச் சாப்பிட்டுக் கொண்டு சைக்கிளில் வந்திருக்கிறார்கள். கொஞ்ச தூரம் நடராஜனைப் பின்னால் உட்கார்த்திவைத்தபடி சொர்ணம் தான் சைக்கிளை மிதித்துக்கொண்டு வந்தாள். ஒரே சிரிப்பு இருவருக்கும்.

புறவாசல் வழியாகத் தொழுவுக்கு வந்தவர் நன்றாக வெயில் அடிக்கும் இடமாகப் பார்த்து இரண்டையும் உரக்குழிப் பக்கத்து முருங்கை மரத் தூரில் கட்டிப் போட்டார். நொது நொது என்று முருங்கைப் பிசின் வடிந்திருந்தது. இடுப்பு வேட்டியை உதறிக் கொடியில் காயப்போடும்போது வீட்டுக்குள் வேற்று ஆட்கள் சத்தம் கேட்டது. யாரோ வந்திருக்கிறார்கள்.

பட்டாசலில்தான் உட்கார்ந்திருக்கிறார்கள். அங்கேதான் நின்று சாமி கும்பிடவேண்டும். வந்திருக்கிறவர்கள் யார் என்று தெரியவில்லை. இரண்டு

பேரும் புதிதாக இருந்தது. பொதுவாக, ''வாங்க'' என்று சொல்லிவிட்டு சாமி கும்பிட்டார். பக்கத்து அறைக்குப் போய் உடைமாற்றிக்கொள்ளப் போனார். லைட் போட்டுக்கொள்ளவில்லை. அது ஒரு இக்கட்டான நேரமாக இருந்தது. துவைத்த வேட்டியைக் கட்டிக்கொண்டு இருக்கையில் பெருமாள் லட்சுமி உள்ளே வந்தார். மிகக் குறைந்த வெளிச்சத்தில் அவர் உள்ளே வருவது தகடு போல இருந்தது.

''பெரியநாயகி புரத்தில இருந்து வந்திருக்காங்க. வந்து ரொம்ப நேரம் ஆச்சு'' என்று சொல்லிவிட்டு, ''செல்வமும் வந்திருக்கான். பவண்ட்டோ வாங்கிக்கிட்டு வரச்சொல்லி அனுப்பியிருக்கேன்.'' குரல் தணிவாக வந்தது. 'செல்வேந்திரன் எப்போ ஹாஸ்டலில் இருந்து வந்தான்?' என்று கேட்பதற்குள் பெருமா, இவர் களைந்த ஈரத் துண்டை வாங்கித் தோளில் போட்டபடி பின்வாசல் போயிருந்தார்.

சொந்த வீடு தான் என்றாலும் முன் பின் தெரியாத ஆட்கள் வந்திருக்கையில் யார் பக்கத்தில், யாருக்கு எதிரில் அமர்வது என்ற தடுமாற்றம் நடராஜனுக்கு வந்திருந்தது. இப்போது எல்லாம் துக்க வீடு என்றால் சாம்பல் அல்லது கருப்பு நிற உடைகளை அணிகிறார்கள். சாம்பல் நிற முழுக்கைச் சட்டை போட்டிருந்தவர் நடராஜனைப் பார்த்துப் பேச ஆரம்பித்தார்.

''உங்களை உங்க மிசஸ்ஸை எல்லாம் எனக்குத் தெரியும். நான் கூடல் முக்கு கவர்மெண்ட் ஹைஸ்கூலில் பீ.ட்டி அசிஸ்டெண்டா இருக்கேன்.'' தன்னுடைய பெயரை அவர் சொல்லிக் கொள்ளவில்லை. பக்கத்து நாற்காலியிலிருப்பவரைக் காட்டி, ''இவங்க பி.என். புரம் பண்ணையார் வீட்டில் இருந்து வந்திருக்காங்க'' என்றார். ''பெரிய நாயகிபுரம்'' என்று சொல்லிக்கொண்டே இரண்டாமவர் கும்பிட்டார். அவர் வலது கை மணிக்கட்டிலிருந்து செப்புக் காப்பு கீழே தளர்ந்து இறங்குவதையே நடராஜன் பார்த்தார்.

''நான் சரவணனுக்கு பெரியப்பா மகன். அவன் சொல்லித்தான் வந்திருக்கோம்'' என்றார். வந்திருக்கிறவருக்கு சரவணமுத்து வயதில் இளையவர் போல. 'அவன் சொல்லித்தான்' என்று ஒருமையில் குறிப்பிட்டது நடராஜனுக்கு ஆதரவாக இருந்தது.

மறுபடியும், ''சரவணன் தான் சொல்லி அனுப்பினான்'' என்றார். என்ன சொல்லி அனுப்பினார் என்று நடராஜனால் உடனே கேட்கமுடியவில்லை. விசிறிக் காற்றில் குப்புற விழுந்து உலோகத் தகடு உரசிக்கொண்டு இருந்த மாதக் காலண்டரை எழுந்துபோய்த் திருப்பி வைத்துவிட்டு வந்தார்.

''நீங்க வருகிறதுக்கு முந்தியே உங்க சம்சாரத்துக்கிட்டேயும் பையன்கிட்டேயும் டீட்டெய்லா எல்லா விபரத்தையும் பேசிக்கிட்டு இருந்தோம். காலையில கதர்க் கடை ஆயானும் வந்து பேசிக்கிட்டு இருந்துட்டுப் போயிருப்பாரு போல'' என்று வந்தவர் சொல்லத் தொடங்கும் போது, வாசலில் நிழலாடுவதை நடராஜன் பார்த்தார். செல்வேந்திரன் வந்துகொண்டு இருந்தான், பையுடன். பாட்டில்கள் மோதிக்கொள்கிற சத்தம் லேசாக. ''வா'' என்றார். ''கொடு'' என்பது போல இரண்டு பேர் பக்கம் கையைக் காட்டினார். ''டம்ளர் கொண்டு வாரேன்'' என்று உள்ளே இருந்து பெருமா சத்தம் கேட்டது.

சாம்பல் நிறச் சட்டை போட்டிருந்தவர் உடனடியாகக் குடித்துவிட்டுக் காலி டம்ளரைக் குனிந்து வலது பக்கம் வைத்தார். சரவணன் சொந்தக்காரர் ஒரு மடக்குக் கூடக் குடிக்கவில்லை. கையில் வைத்திருந்தார். செல்வேந்திரனைப் பார்த்து, ''உட்காரு தம்பி'' என்று பக்கத்து நாற்காலியைக் காட்டினார். நடராஜன் மனைவியை, ''இங்கே வந்து உட்காரு'' என்று வரச் சொன்னார்.

''சொர்ணா என்ன நினைச்சுதோ, அதைச் சொல்லுததுக்கு எல்லாம் டைமே இல்லாமல் பொசுக்குன்னு போயிட்டுது. இப்போ நான் சொல்லுதது எல்லாம் சரவணன் சொன்னதுதான். நீங்க மூணு பேரும் வந்து அவளை நல்லபடியா வழி அனுப்பி வைக்கணும்.'' சொல்லிக்கொண்டே இருந்தவர் எழுந்து நின்று நடராஜனைப் பார்த்துக் கும்பிட்டார். ''இது நான் கும்பிடுதது இல்லை. என் தம்பி கும்பிடுதது.''

''அதெல்லாம் எவ்வளவோ இருக்கு. இல்லைண்ணு சொல்லலை. நேத்து நடந்தது இன்னைக்கு ஞாபகம் வரும். இன்னைக்கு நடக்கது நாளைக்கு ஞாபகத்துக்கு வரும். இல்லேங்கலை.'' அவர் இப்போது நடராஜன் முகத்தை விட்டு விலகாமல் பேச ஆரம்பித்திருந்தார். ''எல்லாரும் நேற்றை மறந்திரு, நாளையை மறந்திரும்பாங்க. நான் சொல்லுதது இதுதான். நம்மளால நேத்து நடந்ததை மறக்கமுடியும் நாளைக்கு நடப்பதை மறக்க முடியும்ணா, இன்னைக்கு நடப்பதை மறக்க முடியாதா என்ன?'' அவர் இப்போது பெருமாள் லட்சுமியையும் செல்வேந்திரனையும் பார்த்தார்.

''ஒரு உதாரணத்துக்கு, கண்ணு முன்னால இங்கே நடந்ததைச் சொல்லுதேன். எங்க ரெண்டு பேருக்கும் ஒண்ணு போலதான் குடிக்கக் கொடுத்தீங்க. சார் உடனே குடிச்சிட்டுக் காலி தம்ளரை அப்பமே கீழே வச்சுட்டாரு. நான் இன்னும் ஒரு சொட்டுக் கூடக் குடிக்கலை. கையில வச்சுக்கிட்டே இவ்வளவு நேரமும் பேசிக்கிட்டே இருக்கேன். யோசிச்சுப் பார்த்தா, அவர் ஏன் உடனே குடிச்சார், நான் ஏன் வச்சுக்கிட்டே இருக்கேன் என்கிறதுக்குக் காரணமே இல்லை. என்னமோ அப்படி அமைஞ்சு போச்சு. அதைத் தவிர ஒண்ணும் இல்லை.'' என்றவர் இரண்டு மூன்று மடக்குகளாகக் கையில் இருந்ததைக் குடித்து முடித்தார். செல்வம், கொஞ்சம் அவனுடைய நாற்காலியில் இருந்து எழுந்த வாக்கில் கையை நீட்டிக் காலி டம்ளரை வாங்கிக்கொண்டான்.

கொஞ்சம் கைத்த சிரிப்புடன், ''இப்போ ரெண்டு தம்ளரும் காலி. காலியா இருந்தா, எவ்வளவு லேசா

இருக்கு, கனமே இல்லாம" என்றார். இதை அவர் சொல்லும் போது பெருமாள் லட்சுமி, நடராஜன் முகத்தையே பார்த்துக்கொண்டு இருந்தார்.

செல்வம், எழுந்து தன் கையில் இருந்த தம்ளரையும் இன்னொரு தம்ளரையும் எடுத்துக்கொண்டு அடுப்படிப்பக்கம் போனான். அங்கணத்தில் பாத்திரம் விழுகிற சத்தம் கேட்டது. கையைக் கழுவுகிற தண்ணீர்ச் சத்தம். செல்வம் கையைத் துடைத்துக்கொண்டே வந்தான். அம்மா பக்கம் நிற்க வேண்டும் என்று தோன்றியிருக்கும் போல. பெருமாள் லட்சுமி அருகில் நின்றான்.

நடராஜன், செல்வேந்திரன் அவனுடைய அம்மா பக்கத்தில் நிற்பதையே கொஞ்ச நேரம் பார்த்துக்கொண்டு இருந்தார். யாரோ அப்படி ஒரு ஓவியத்தை வரைந்து சட்டமிட்டு அந்த இடத்தில் தொங்கவிட்டது போல இருந்தது அவருக்கு. அங்கே இருந்து வந்திருக்கிறவர்களைப் பார்த்து,

"எடுக்கிறதுக்கு நாளைக்கு வரைக்கும் ஆகும்னு சொன்னாங்க" என்றார். "நீங்க ரெண்டு பேரும் எப்படி வந்தீங்க. காரிலேயா வந்திருக்கீங்க?" என்று கேட்டார்.

"கதர்க்கடை ஆயானையும் ஏத்திக்கிட்டுப் போக இடம் இருக்கும்லா?" என்று பெருமாள் லட்சுமி கேட்டபோது, நடராஜன் எதிரே இருக்கிறவர் முகத்தையே பார்த்தார்.

"ஆயான் இல்லாமல் நாம மட்டும் எப்படி?" என்று பெருமாள் லட்சுமியிடம் அவர் சொன்ன குரல் காற்றுப் போல இருந்தது. கனமே இல்லை. ●

*mail to:* **vannadasan@gmail.com**



45

## முயங்கொலி குறிப்புகள்

# 55 வயதில் தாகித்தல்

● கயல் ஓவியம்: ஞானப்பிரகாசம் ஸ்தபதி



பூமிதியில் தீ தகிக்கிற
ரசவாதம் அறிந்த
துண்டுப் பிறைகளுன் உதடுகள்.

துவண்டு சிறுத்த என்னை
தன்னுள்ளே தாங்கித்
துடி வீரனாக்கும் வசியக்கார வசீகரி.

பொழுதும் சர்வ அலங்காரிணி
பூக்கள் மட்டும் சூடி
கடற்கரைச் சொகுசு வீட்டில்
நரநரத்த மணலெல்லாம்
சீனியாகப்
பௌர்ணிமையாய்ப் பொலிந்தாயே.

சொக்கப் பனை கொளுத்தி
நீ விசிறத் தெறித்த ஒளியில்
மோக முகைகள் வெடித்து
இச்சைச் சொற்கள் அசை பிரிந்தனவே.

அஃதொரு காலமடி

இன்று முன் நெற்றி நரையுனக்கு
தடந்தோள்களில் வலி எனக்கு

காலம் நம் உடல்களின்மீது
தினம் நடை பயிற்சி செய்கிறது.

ஆனாலும் என்ன

விம்மித் தளும்பினாலும்
தணிந்து அடங்கினாலும்
துள்ளும் மீனுக்கு
நீர்ப் பரப்பே கதி.

தேகப் பரிபூரணியாய்
ஆயிரம் அழகியர் வரட்டுமே
கதிர்க் கை வருடலில் மட்டுமே
சிலிர்க்கும் விடியற் புரவி இது.

தொடரும்

*mail to:* **dr.kayalvizhi2023@gmail.com**

## தருமமிகு சென்னை - 16

# இரு நாயர்களும் இரு ராய்களும்

சென்னை கலைஞர் கருணாநிதி நகர் சங்கீதா காலனியில்தான் எனது இல்லற வாழ்க்கை தொடங்கியது. கே.கே. நகர் சரவணபவனுக்கு அடுத்து வருவது சௌபாக்கியா காலனி.

● சந்தியா நடராஜன்

சௌபாக்கியா காலனி ஆர்.கே. சண்முகம் சாலையில் முடியும். அதற்கு அடுத்த காலனி சங்கீதா. இவ்விரண்டு காலனிகளுக்கும் இடையே இருப்பதுதான் ஆர்.கே. சண்முகம் சாலை. இந்தச் சாலைக்கு எதிரே தொடங்குவது எம்ஜிஆர் சாலை அல்லது எம்ஜிஆர் நகர் மார்க்கெட். ஹோட்டல் சரவணபவனிலிருந்து விருகம்பாக்கம் நோக்கிச் செல்லும் அண்ணா சாலையும் சண்முகம் சாலையும் எம்ஜிஆர் சாலையும் சந்திக்கும் முச்சந்தியின் ஒரு புறத்தில் இருப்பது சங்கீதா காலனி. அரசியலில் எதிரெதிர் துருவங்களாக இருந்த இரண்டு முன்னாள் தமிழக முதல்வர்களான கலைஞர் கருணாநிதி மற்றும் எம்ஜிஆர் ஆகியோரின் பெயர்களில் நிறுவப்பட்டுள்ள இரு நகர்களும் எதிர் எதிராகவே அமைந்துள்ளன.

1990ஆம் ஆண்டு நவம்பர் மாதம் பிற்பாதியில் தொடங்கி ஏறக்குறைய ஐந்து ஆண்டுகள் சங்கீதா காலனி சுற்றுச் சுவருக்குள்தான் எனது வாழ்விடம் அமைந்திருந்தது. 113D என்ற இரட்டைப் படுக்கையறை கொண்ட அடுக்ககத்தில் குடியேறினேன். மேல் வீட்டில் விசுவநாத ராய் என்ற ஒளிப்பதிவாளர் குடியிருந்தார். அவர் மங்களூரைச் சேர்ந்தவர். அவரது தாய் மொழி துளு. 1991இல் வெளிவந்த 'மரிக்கொழுந்து' திரைப்படத்தின் ஒளிப்பதிவாளர். புதியவன் என்ற புதிய இயக்குநரின் முதல் படம் அது. ஐஸ்வர்யாவும் ரமேஷ் அரவிந்தும் நடித்திருந்தார்கள்.



சினிமா உலகத்தில் புகழ்பெற்ற ஒளிப்பதிவாளர்களில் இருவரான ராய் சகோதரர்களில் இளையவர் விசுவநாத ராய். மூத்தவரான P.L.ராய் என்னும் லக்கப்பா ராய், 1938ஆம் ஆண்டில் பம்பாய் சென்று, கோவர்தன் பாய் பட்டேல் என்ற புகழ்பெற்ற ஒளிப்பதிவாளரின் கீழ் அஜந்தா ஸ்டுடியோவில் பயிற்சியாளராகச் சேர்ந்தார். ராய் சகோதரர்களின் தந்தைக்குத் திரைப்படத் துறை என்பதே எட்டிக்காய். தந்தைக்குத் தெரியாமல்தான் பம்பாய்க்குச் சென்றார் மூத்தவர். வெள்ளையனே வெளியேறு போராட்டம் நடந்த 1942ஆம் ஆண்டில் ஹரிபாய் பட்டேல் என்ற ஒளிப்பதிவாளருடன் சென்னைக்கு வந்த பி.எல்.ராய் அடையாறில் இருந்த சுந்தரம் ஸ்டுடியோவில் சேர்ந்தார். பிறகு தனித்து இயங்கத் தொடங்கினார். எம்ஜிஆர் -பத்மினி நடித்த 'பிரித்விராஜ்-சம்யுக்தா' திரைப்படத்தின் ஒளிப்பதிவாளர் பி.எல்.ராய். சிவாஜி கணேசன் - பத்மினி நடித்த 'மங்கையர் திலகம்', 'பாக்யவதி' திரைப்படங்களுக்கும் ஒளிப்பதிவாளராகப் பணியாற்றினார். என்.டி. ராமராவ், நாகேஸ்வர ராவ் ஆகியோரின் உள்ளம் கவர்ந்த ஒளிப்பதிவாளராகத் திகழ்ந்த பி. எல். ராயிடம் அவரது இளவல் பணியாற்றத் தொடங்கினார்.

விசுவநாத ராயின் ஒளிப்பதிவுப் பணி 1958இல் தொடங்கியது. ஓராண்டுக் காலத்தில் 'Dial Double Two and Double Four' என்ற மலையாளப் படத்தின் ஒளிப்பதிவு இயக்குநரானார். அது பிரேம் நசீர் நடித்த படம். 1960களில் இருந்து தமிழ், தெலுங்கு, இந்தி திரைப்படங்களில் ஒளிப்பதிவாளராகப் பணியாற்றினார். குறிப்பாக 'அவன்தான் மனிதன்', 'டாக்டர் சிவா 'போன்ற சிவாஜி திரைப்படங்களில் வெற்றிமுகம் காட்டும் திரைக்கலைஞராக வலம் வந்தார். ஏ.சி. திருலோகச்சந்தருடன் இணைந்து 30 ஆண்டு காலம் ஒரு திரைக்கலைஞனாக வாழ்ந்தார். சிவாஜியும் ரஜினிகாந்தும் இணைந்து நடித்த முதல் திரைப்படமான 'நான் வாழவைப்பேன்' இவரையும் வாழ வைத்தது.



ஒரு முறை உங்களுக்குச் சவாலாக நின்று சாதனை படைத்த திரைப்படம் எது என்று கேட்டபோது அவர் சற்றும் தயங்காமல் 'பத்ரகாளி' என்றார். பத்ரகாளியின் கதாநாயகியைத் தமிழ்த் திரைப்பட ரசிகர்களுக்கு நன்றாகவே நினைவிருக்கும். பத்ரகாளியின் கதாநாயகி 'மிஸ் கேரளா'வாகத் தேர்வான கேரளாவின் அழகுராணி 'ராணி சந்திரா'. எழுத்தாளர் மகரிஷியின் நாவல்தான் 'பத்ரகாளி' திரைப்படமாக 1976இல் ஏ.சி. திருலோகச்சந்தர் இயக்கத்தில் வெளியானது. திரைப்படம் முடிவுறும் நிலையில் படத்தின் கதாநாயகி ராணி சந்திரா துபாயில் ஒரு கலை நிகழ்ச்சியை நடத்தி முடித்துவிட்டு பம்பாய் விமான நிலையம் வந்தடைந்தார். பம்பாயிலிருந்து சென்னைக்குப் புறப்பட்ட விமானத்தில் ராணி சந்திரா பயணம் மேற்கொண்டபோது விமானம் வான் ஏகிய சில நிமிடங்களிலேயே எந்திரக் கோளாறால் வெடித்துச் சிதறியது. இந்த விமான விபத்தில் சந்திராவும் அவரது தாய் மற்றும் மூன்று சகோதரிகளும் மாண்டு போயினர். ஏறக்குறைய 85 கருகிய சடலங்கள் மீட்கப்பட்டன. பயணித்தவர் எவரும் உயிர் தப்பவில்லை. இந்தியாவில் நடந்த விமான விபத்துகளில் கோரமானதும் கொடூரமானதும் இதுவே. இந்த விபத்து 11.10.76 நள்ளிரவில், அதாவது 12.10.76 அதிகாலையில் நடந்து முடிந்தது. அப்போது ராணி சந்திராவுக்கு வயது 22.

இந்தச் சூழ்நிலையில் திரைப்படம் அரைகுறையாக நின்று போனது. இந்தப் படத்தில் கதாநாயகனாக நடித்த சிவகுமாரின் யோசனையின் பேரில் 'பட்டிக்காட்டு ராஜா' படத்தில் நடனமாடிய துணை நடிகை புஷ்பாவை டூப்பாகப் பயன்படுத்தித் திரைப்படத்தை முடித்தார் ஏ.சி. திருலோகச்சந்தர். ராணி சந்திராவின் சாயலில் இருந்த புஷ்பா நடித்த காட்சிகளை ராணி சந்திராவே நடித்ததுபோல எந்தவித வித்தியாசமும் தெரியாமல் மிக நேர்த்தியாக ஒளிப்பதிவு செய்திருந்தார் விசுவநாத ராய். ஏதாவது திரைப்படம் பற்றிய பேச்சு வரும்போதெல்லாம் ராணி சந்திராவையும் புஷ்பாவையும் பேசாமல் இருக்க மாட்டார் விசுவநாத ராய். இளையராஜாவின் மிகப் பிரபலமான 'கேட்டேளா அங்கே', 'கண்ணன் ஒரு கைக்குழந்தை' பாடல்கள் இடம் பெற்ற திரைப்படம் 'பத்ரகாளி'.

விசுவநாதராய 19.03.1928இல் மங்களூரில் தெர்லகட்டே (Derlakatte) என்ற ஊரில் பிறந்தவர். அம்மா வழி குடும்பமான மகனதாடி (Maganathady) குடும்பம் சீரும் சிறப்பும் வாய்ந்த குடும்பம். விசுவநாத ராய் 11.12.2020இல் சென்னையில் காலமானார்.

சங்கீதா காலனியில் வசித்து வந்த பினிதா டீச்சரின் கணவர் சசி நாயர், ராய் பிரதர்ஸ் குறித்து 'தி இந்து' ஆங்கில நாளிதழில் (செப்டம்பர் 9, 2003) ஒரு கட்டுரை எழுதியிருந்தார். விசுவநாத ராயின் மகள் கிரண் பெங்களூரிலிருந்து எனக்கு அதனை அனுப்பி வைத்திருந்தார். அந்தக் கட்டுரையைப் படித்த பிறகு கனவில் கண்டதுபோல இருந்த அவர் உருவம் உயிர் பெற்று நடமாடத் தொடங்கிவிட்டது. விசுவநாத ராயின் மூத்த சகோதரர் பற்றிய விவரங்களை இந்தக் கட்டுரையின் மூலம்தான் அறியப் பெற்றேன்.

விசுவநாத ராயை நான் பார்த்துப் பழகிய காலத்தில் அநேகமாக அவர் சினிமாவிலிருந்து வெளியேறி அவரது உறவினர் கம்பெனி ஒன்றில் இணைந்து செயல்பட்டுக் கொண்டிருந்தார் என்று நினைக்கிறேன். 'மரிக்கொழுந்து' அவரது கடைசிப் படமாகக் கூட இருக்கலாம். அதிகம் பேச மாட்டார். என்னிடம் நெகிழ்ச்சியோடு பேசுவார். பேசிக்கொள்கிற நாட்கள் குறைவுதான். பார்க்கும்போதெல்லாம் அவர் முகத்தில் அன்பின் கீற்றுகள் வெளிப்படும். ஆனால், அவரைச் சந்திக்கும் தருணங்கள் மிகக் குறைவு.

அப்போது நான் தி.நகரில் இருந்த மத்திய வருவாய் புலனாய்வுத் துறை அலுவலகத்தில் பணியாற்றி வந்தேன். காலையில் அலுவலகம் சென்றால், இரவு வீடு திரும்புவோமா அல்லது வேறு ஊரில் இருப்போமா என்றோ, அப்படியே திரும்பினாலும் வீட்டையும் நேரம் எந்நேரம் என்பதோ தெரியாது. தமிழ்நாடு, ஆந்திரா, சில நேரங்களில் கேரளா, கர்நாடகா மாநிலங்களில் வேலை இருக்கும்.

ஒரு முறை திடீரென்று நெல்லூர் புறப்பட வேண்டியிருந்தது. நெல்லூருக்கு அருகே கிருஷ்ணா பட்டினம் கடற்கரையில் துபாயிலிருந்து வரும் ஒரு கப்பல் மூலம் கடத்தல் பொருள்கள் வந்து இறங்கும் என்ற நுண்ணறிவுத் தகவலின் அடிப்படையில் நெல்லூரில் முகாமிட்டிருந்தோம். ஆனால், கடலோரக் காவல் படையின் ஹெலிகாப்டர் சந்தேகத்தின் பேரில் கடத்தல் கப்பலை வானில் வட்டமிடத் தொடங்கியது. ஏதோ ஆபத்து என்று உணர்ந்து கப்பலில் பதுக்கியிருந்த வெளிநாட்டு வெள்ளிக்கட்டிகளை ஆழ்கடலில் தூக்கி வீசிவிட்டார்கள் கடத்தல்காரர்கள். இருப்பினும் கப்பல் பணியாளர்களோடு கப்பல் முடக்கப்பட்டது. இந்தியக் கடல் எல்லைக்குள் புகுந்துவிட்ட அந்தக் கப்பல் கைப்பற்றப்பட்டது. கடத்தலில் பங்குபெற்ற கப்பல் பணியாளர்கள் அனைவரும் விசாரணைக்கு உட்படுத்தப்பட்டார்கள். கப்பலிலிருந்து கடத்தல் பொருட்களைக் கரைக்குக் கொண்டுவர மங்களூர்-கோவா பகுதியிலிருந்து வந்திருந்த பத்துக்கும் மேற்பட்டவர்கள் அவர்கள் தங்கியிருந்த ஹோட்டலில் இருந்து சென்னைக்குக் கொண்டுவரப்பட்டார்கள். கடுமையான விசாரணைக்குப் பின் வாக்குமூலங்கள் பதிவுசெய்யப்பட்டு, கைது செய்யப்பட்டார்கள். நீதிமன்றத்தில் ஆஜர் செய்யப் புறப்படுவதற்கு முன் மதிய உணவு வேளை நெருங்கிவிட்டது. கைது செய்யப்பட்டவர்களுக்கு மதிய உணவு வழங்கப்பட்டது.

கைது செய்யப்பட்டவர்களில் ஒருவன் ஏதோ ஒரு ஷெட்டி. கைது செய்யப்பட்டவர்கள் எழும்பூர் பொருளாதார குற்றவியல் நீதிமன்றத்தில் ஆஜர் படுத்தப்பட்டனர். அவர்களை நீதிமன்றக்காவலில் வைக்க மாஜிஸ்ட்ரேட் உத்தரவிட்டவுடன் பெயர் நினைவில் இல்லை. அவன் மட்டும் யாரிடமும் பேசவில்லை. அவன் கடுமையான மன அழுத்தத்தில் இருப்பதை உணர முடிந்தது. தோற்றத்திலும் பாவனையிலும் மென்மையானவனாகவே தோன்றினான். அவனிடத்தில் முரட்டுத்தனமோ கள்ளத்தனமோ தடித்தனமோ தெரியவில்லை. ஏதோ ஒரு விஷயம் அவனைச் சஞ்சலப்படுத்திக் கொண்டிருந்தது. அவனைத் தனியாக அழைத்துப் பேசிக்கொண்டிருந்தேன். கொஞ்சம் கொஞ்சமாக அவனது மன இறுக்கம் தளர்ந்தது. தன்னைத் தானே நொந்துகொண்டான். கடைசியாக ஒரு வார்த்தை சொன்னான்.

"சிறையிலே என் வாழ்நாள் கழிந்தால்....." நல்ல உணவு அளித்ததற்காக நன்றி தெரிவித்தான். "சார், எல்லாம் என் தலைவிதி" என்றான்.

"தெரிந்துதானே இந்தக் குற்றத்தில் ஈடுபட்டாய்" என்றேன்.

"நான் நல்ல குடும்பத்திலிருந்து வந்தவன் சார்" என்றான். கொஞ்சம் கண் கலங்கினான். ஏதோ சொல்ல முயன்றான். ஆனால், சொல்லத் தயங்கினான். "விசாரணையின் போது உங்களிடம் இருந்த கடுமை காணாமல் போய்விட்டது. மனுஷத் தன்மையுடன் நடந்துகொள்கிறீர்கள். நன்றி சார்" என்றான்.





நீதிமன்றத்தில் சமர்ப்பிக்க வேண்டிய ஆவணங்கள் தயாரானவுடன் கைதானவர்கள் சென்னை மத்திய சிறைச்சாலைக்குக் கொண்டுசெல்லப்பட்டார்கள். போகும் வழியிலும் ஷெட்டி சஞ்சலத்துடன் இருந்தான். சிறைக்குள் செல்வதற்கு முன்பு ஷெட்டி மீண்டும் ஒரு முறை நன்றி சொன்னான்.

"என்ன, சிறை வாழ்க்கைக்குப் பயப்படுகிறாயா?" என்றேன்.

"சார், சிறைக்குள் இருக்கும் வரை எனக்குப் பிரச்னை இருக்காது சார்... சிறைக்கு வெளியில்தான் எனக்குப் பிரச்சனை" என்றான். அதற்குள் சிறைக்காவலர்கள் எல்லோரையும் அழைத்துச் சென்றுவிட்டார்கள்.

இந்தச் சம்பவம் நடந்து முடிந்து சில மாதங்கள் கழிந்துவிட்டன. நாங்களும் வெவ்வேறு வேலைகளில் ஈடுபட்டு வந்தோம். ஒரு நாள் காலை விசுவநாத ராய் எங்கள் வீட்டுக்கு வந்தார். என்னிடம், "கொஞ்ச நேரம் பேச வேண்டும்" என்று சொன்னார். பேசிக்கொண்டிருந்தோம். பேச்சினிடையே, "சில மாதங்களுக்கு முன்பு மங்களூரைச் சேர்ந்த ஷெட்டி என்பவர் கைது செய்யப்பட்டாரா" என்று கேட்டார். "ஆம்" என்றேன்.

"ஷெட்டி ஒரு வகையில் எங்களுக்குத் தெரிந்த குடும்பத்தைச் சேர்ந்தவர். அவர் ஒரு நல்ல குடும்பத்தைச் சேர்ந்தவர். நண்பர்கள் சரியில்லை. கெட்ட நேரம். கெட்ட வழியில் சென்றுவிட்டார். சமீபத்தில்தான் ஜாமீனில் வெளிவந்திருக்கிறார். பம்பாய் சென்றபோது அங்கே அவர் கடத்தல் கும்பலால் சுட்டுக் கொல்லப்பட்டுவிட்டார்" என்று சொல்லிவிட்டுச் சென்றார். சில மாதங்கள் வரை ஷெட்டியின் நினைவு வந்து போகாமல் இல்லை.

நான் தங்கியிருந்த பிளாட்டின் உரிமையாளர் ஹைதராபாத் BHEL நிறுவனத்திலிருந்து ஓய்வு பெற்றபின் அந்த பிளாட்டை நான்கு லட்சம் ரூபாய்க்கு விற்கப் போவதாகச் சொன்னார். நான் வாங்கிக்கொள்ள விருப்பப்பட்டால் 25000 ரூபாய் குறைத்துக்கொள்வதாகவும் சொன்னார். அப்போது நான் வாங்கும் நிலையில் இல்லை. இந்த விஷயத்தை அவர் விசுவநாத ராயிடம் பகிர்ந்து கொண்டிருக்கிறார். மறுநாள் என்னைச் சந்தித்த ராய் எப்படியாவது அந்த பிளாட்டை வாங்கிவிடும்படி என்னை வலியுறுத்தினார். 25000 ரூபாய் வரை அவர் கடனாகத் தரவும் முன் வந்தார். ஆனால், 109C பிளாட் காலியானது. அங்கு நான் இடம்பெயர்ந்து சென்றுவிட்டேன். விசுவநாத ராய் காட்டிய அன்புக்கும் பரிவுக்கும் அளவில்லை. Strangers Are My Lovers.

DRI (Directorate of Revenue Intelligence) என்று சொல்லப்படுகின்ற மத்திய வருவாய் புலனாய்வு இயக்ககத்தின் தென் மண்டல அலுவலகம், எண்:14






கோபால கிருஷ்ண ரோடு, தியாகராய நகர் என்ற முகவரியில் ஒரு ரெட்டியாரின் கட்டிடத்தில் இயங்கி வந்தது. அலுவலகத்துக்கு என்று பெயர்ப்பலகை கூட இருக்காது. எதிரே ரத்னா எலெக்ட்ரிகல்ஸ் கடை. ஒரு பக்கத்தில் ஐயர் வீடு. மறுபுறத்தில் காலி மனை. நான் இந்த அலுவலகத்தில் பணியாற்றிய காலம் என்பது சென்னை டிஆர்ஐயின் பொற்காலம். ஒரு சீனியர் இன்டெலிஜென்ஸ் ஆபிசர் (SIO), ஐந்து இன்டெலிஜென்ஸ் ஆபிசர்கள் (IO) கொண்ட மைய அணியில் பணிபுரியும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. நாங்கள் துணை இயக்குநரின் (DD) நேரடிக் கட்டுப்பாட்டில் இயங்கினோம். இடைநிலை அதிகாரிகளுக்கு எமது பணி விவரங்களைத் தெரிவிக்க வேண்டிய அவசியம் இருக்காது. துணை இயக்குநராக இருந்தவர் கே.எஸ். நாயர் என்கிற கே.சோமன் நாயர். தமிழ்நாடு, ஆந்திர மாநிலங்கள் அவரது அதிகார எல்லைக்கு உட்பட்டவை. இந்த மாநிலங்களுடன் கேரளா, கர்நாடகா மாநிலங்களும் இணைந்த தென் மண்டலத்திற்குத் தலைவராக இருந்த அடிஷனல் டைரக்டர் ஜெனரல் CNB நாயர் என்கிற CN

பாலகிருஷ்ண நாயர். இந்த இரு நாயர்களிடமிருந்து கற்றவை பெற்றவை எல்லாம் பெறலரும் பேறு.

கே.எஸ். நாயர் தமது பணியில் உயிரைக் கொடுத்துப் பணியாற்றுவார்; எங்கள் உயிரை எடுக்கவும் தயங்க மாட்டார். மதுரை, கோவை, தூத்துக்குடி, சேலம், ஹைதராபாத், விசாகப்பட்டினம் என்று முக்கிய நகரங்களுக்கு ஒருவரையோ இருவரையோ ரகசியத் தகவல் மற்றும் நடவடிக்கைகளுக்கு அனுப்பி வைப்பார். ஹோட்டல்களே எங்கள் அலுவலகங்கள். ஒவ்வொரு நாள் இரவும் அவரவர் செய்த பணியை அவருக்குத் தெரிவிக்க வேண்டும். அப்போதெல்லாம் செல்போன்கள் கிடையாது. எஸ்.டி.டி பூத்தில் தவமிருக்க வேண்டும். அதுவும் 9 மணிக்கு மேல் கட்டணத்தில் காற்பகுதி என்பதால் பல்வேறு நகரங்களிலிருக்கும் நாங்கள் 9 மணிக்கு மேல்தான் அவரைத் தொடர்புகொள்ள முயல்வோம். யாருடைய அழைப்பு அவருக்கு முதலில் கிடைக்கிறதோ, அவன் அன்றைக்கு பாக்கியசாலி. சமயத்தில் நமக்கு அந்த வாய்ப்பு கடைசியில் கிடைத்ததென்றால் இரண்டு மணி நேரமாவது எஸ்.டி.டி பூத்தில் கால் கடுக்கக் காத்துக் கிடக்க வேண்டும். நெடு நேரம் அழைப்பு தொடர்பு கிடைக்காமல் எண்களைச் சுழற்றிக் கொண்டிருக்கும் எங்களை இளக்காரமாகவும் எரிச்சலோடும் பார்த்துக்கொண்டிருப்பான் பூத்காரன். நாயரோ அயராமல் பேசிக்கொண்டே இருப்பார். சமயத்தில் நாக்கு வறண்டு போய், "ஒரு நிமிடம் இருங்கோ" என்று சொல்லிவிட்டு மடக் மடக் என்று நீர் அருந்தும் சத்தம் கேட்கும்.

அவர் துணை இயக்குநராக இருந்த காலத்தில் சென்னை டி.ஆர்.ஐ இந்திய அளவில் ஒரு மகத்துவமிக்க அமைப்பாக அறியப்பட்டிருந்தது. ஒரு மாபெரும் கடத்தல் வேட்டை வெற்றிகரமாக நடந்து முடிந்திருந்த சமயம். நாயர் களப்பணியில் ஈடுபட்டிருந்த எங்களை வெகுவாகப் பாராட்டினார். விளையாட்டில் வெற்றி பெற்ற ஒரு சிறுவனைப் போலத் துள்ளிக் குதித்தார். அப்போது என்னிடம் ஒரு கேள்வி கேட்டார். "நடராஜன், நான் ஏன் தொடர்ந்து வெற்றி பெறுகிறேன் தெரியுமா? நான் ஒரு ஐ.ஆர்.எஸ் அதிகாரி என்பதாலா? இல்லை. எனது படிப்பினாலா? இல்லை. எனக்கு ஒன்றே ஒன்றுதான் தெரியும். ஒரு வேலையை முடிக்க ஐந்து நபர்கள் தேவை என்றால் நான்கு நபர்களை வைத்துக்கொண்டு அந்த வேலையை முடிக்க முடியாது. ஆறு நபர்களை ஈடுபடுத்தினால் அந்த வேலை குழப்பத்திற்கு உள்ளாகிவிடும். சரியான Man Management ஒன்றே வெற்றிக்கு வழி" என்று சொன்னார். இந்தச் சூத்திரத்தை இன்றுவரை நானும் கடைப்பிடித்து வருகிறேன். மேலும் தகவல் பரிமாற்றம் தெளிவாகவும் துல்லியமாகவும் இருக்க வேண்டும் என்பதை அடிக்கடி சொல்லிக்கொண்டே இருப்பார். என்னிடம் ஏதோ ஒரு காரியமாகப் பேச அழைப்பார். அப்போது நான் எங்கேயாவது வெளியே சென்றிருப்பேன். நான் வந்தவுடன் அவருக்கு போன் செய்யும்படிக் கூறுமாறு அவரது உதவியாளரிடம் சொல்வார்.






"ஆயாளு நடராஜன் எவிடே?"

"சார் டீ குடிக்கப் போயிருக்காரு சார்."

"அது எத்ரா தவன சாயா குடிக்கும்?"

தனது உதவியாளரிடம் சீறி விழுவார். அடுத்து பஸ்ஸரை அழுத்தி, சீனியர் இண்டெலிஜென்ஸ் ஆபீசரிடம், "நடராஜன் வந்ததும் என்னிடம் பேசச் சொல்லுங்கள்" என்பார். வீட்டுக்குக் கிளம்பும்போதும் அலுவலக நுழைவு வாயிலில் இருக்கும் சிப்பாயிடமும், "நடராஜன் வந்தவுடன் பேசச் சொல்லுங்க" என்பார். காரிலிருந்து இறங்கி வீட்டுக்குள் நுழையும்போது டிரைவரிடமும் இதே வாசகத்தை மீண்டும் சொல்வார். நான் அலுவலகத்துக்குள் நுழைந்தவுடன், "DD உடனே பேசச் சொன்னார் என்று ஒவ்வொருவராக வந்து சொல்வார்கள். நான் தப்பிக்கவே முடியாது. ஏதோ தலைபோகிற காரியம் போலப் பதறுவார்கள். உடனடியாக நான் பேசினால் ஒழிய அவர்கள் யாரும் என்னை விட்டு அகல மாட்டார்கள். ஒருவர் சொல்ல மறந்தாலும் இன்னொருவர் சொல்லத் தவறமாட்டார். சாதாரண விஷயமென்றாலும் இதே பரபரப்பு நீடிக்கும்.





Communication Gap இருக்கக் கூடாது. எல்லா நடவடிக்கைகளிலும் ஒரு தீவிரம் காட்ட வேண்டும். கூட இருப்பவர்கள் அதைத் தீவிரமாகக் கண்டுகொள்ளும்படிச் செயல்பட வேண்டும் என்பது அவரது கொள்கை.

இன்னொருவர் மூலம் முடிக்க வேண்டிய வேலையை அல்லது இன்னொரு அலுவலகத்தில் இருந்து பெற வேண்டிய ஆவணத்தை, 'இன்னாரிடம் சொல்லியிருக்கிறேன்' என்று கே.எஸ். நாயரிடம் சொன்னால் நறநறவென்று அவர் பற்கள் கடிபடும். 'நீங்கள் அவருக்குச் சொல்லிவிட்டதோடு உங்கள் வேலை முடிந்துவிட்டதா? இட்ட பணி முடிந்ததா என்று உறுதி செய்தீர்களா? Did you ensure?' என்று குரல் உயர்த்துகிறபோது நம் நாடித்துடிப்பு சீராக இருக்காது. Ensure என்ற சொல்லுக்கு அவர் தரும் அழுத்தத்தில் அதன் அர்த்தம் நம் மனத்தில் ஆழமாகப் பதியும். இன்றும் நாள்தோறும் எனது பணிகளில் Ensure என்ற சொல் எதிரொலித்துக் கொண்டே இருக்கிறது.

ஒரு முறை அழிக்கப்பட வேண்டிய வரைவுகளை, ஆவணங்களைச் சுக்கு நூறாக அழிக்கும் Shredder இயந்திரம் விற்கும் கம்பெனியின் பிரதிநிதி ஒருவர் அந்த இயந்திரத்தின் பயன்பாட்டை விளக்கிக் காட்ட, கே.எஸ்.நாயரை அணுகினார். டிடியின் அறையில் நானும் அவரது உதவியாளரும் இன்னும் சிலரும் இருந்தோம். அந்த ஷ்ரெட்டர் இயந்திரம் இயக்கப்பட்டது. வந்திருந்த கம்பெனியின் பிரதிநிதி ஏதாவது ஒரு காகிதத்தை அந்த இயந்திரத்தில் நுழைக்குமாறு சொன்னார். டிடி அவரது மேஜையிலிருந்த ஒரு காகிதத்தை இயந்திரத்துக்குள் இட்டார். அந்தக் காகிதம் நார் நாராகக் கிழிந்து விழும் இறுதிக் கட்டத்தில் ஷ்ரெட்டரை நிறுத்தும்படி உரக்கக் கத்தினார். அவர் ஏன் அப்படி அலறுகிறார் என்பது எங்களுக்கும் தெரியவில்லை. அதற்குள் காகிதம் இழை இழையாகக் கிழிந்துவிட்டது. அந்தக் காகிதத்தில் டெல்லியிருந்து அவரது பாஸ் (DGRI) கொடுத்திருந்த சில டெலிபோன் எண்களையும் குறிப்புகளையும் எழுதியிருந்ததாகவும் அவற்றை எப்படியாவது மீட்க வேண்டும் என்றும் அந்த மெஷின் விற்பனையாளரிடம் பதற்றத்தோடும் கவலையோடும் கேட்டுக்கொண்டார். விற்பனையாளரோ, அதற்கு வாய்ப்பே இல்லை என்று கூறிவிட்டுச் சென்றுவிட்டார். அவர் சென்ற பிறகு தனது உதவியாளரையும் சிப்பாயையும் அழைத்து நார் நாராகக் கிடக்கும் காகித இழைகளை ஒன்று சேர்த்து ஒட்டி அதில் குறிக்கப்பட்டிருந்த டெலிபோன் எண்களை மீட்க வேண்டும் என்று உத்தரவு போட்டுவிட்டு டிடி வீட்டுக்குக் கிளம்பி விட்டார். சிப்பாயும் உதவியாளரும் தலைமயிரைப் பிய்த்துக்கொண்டு காகித இழைகளுடன் போராடிக் கொண்டிருந்தார்கள். மணி எட்டு ஆகியும் காரியம் முடிந்தபாடில்லை. எப்படி முடியும்? அந்த மெஷினின் பயன்பாட்டைத் துல்லியமாகத் தெரிந்துகொள்ள கே.எஸ். நாயர் நடத்திய நாடகமே அதுவென்று நான் கண்டுகொண்டேன். அவர்களை வீட்டுக்கு அனுப்புவது பெரும்பாடாயிற்று. பல மணி நேரம் போராடியும் சுக்கு நூறாகிவிட்ட அந்தக் காகிதத்திலிருந்து அதையும் மீட்க முடியவில்லை என்று உதவியாளரும் சிப்பாயும் உறுதியளித்த பிறகு மன நிறைவு பெற்ற நாயர் மறுநாள் அந்த விற்பனைப் பிரதிநிதியை அழைத்து ஒரு மெஷினுக்கு ஆர்டர் கொடுத்தார். இதுதான் டிஆர்ஐ அலுவலத்துக்கு ஷ்ரெட்டர் வந்த கதை. இத்தனைக்கும் அந்த மெஷினின் விலை பத்தாயிரம் மட்டுமே!

விசாரணையின் போதும் அதிகாரிகள் சமர்ப்பிக்கும் அறிக்கைகள் மீதான விவாதத்தின் போதும் நாயர் சாப் எழுப்பும் வினாக்களுக்கு முடிவே இருக்காது. சரமாரியாக இடைவிடாமல் கேட்பார். ஒரு குறிப்பிட்ட ஆண்டில் தீபாவளிக்கு ஓரிரு நாட்கள் முன்பு ஒரு நாள். பம்பாயிலிருந்து சென்னை வந்த உள்நாட்டு விமானத்தில் 330 வெளிநாட்டு முத்திரையிட்ட தங்கக் கட்டிகளைக் கடத்தி வந்த இருவரை விமான நிலையத்திலிருந்து டிஆர்ஐ அலுவலகத்துக்கு அழைத்து வந்தோம். இருவரும் இந்திக்காரர்கள். அவர்களுக்குத் தமிழ் தெரியாது. எனக்கு இந்தியில் ஒரு சில

வார்த்தைகள் மட்டுமே தெரியும். கடத்தல்காரர்கள் இருவரையும் விசாரணை செய்ய இந்தி தெரிந்த அதிகாரி அலுவலகம் வந்து சேரக் கால தாமதம் ஆனது. அதுவரை அவர்களை மன இறுக்கத்திலேயே வைத்திருக்க வேண்டும். என்ன செய்வது? எனக்குத் தெரிந்த இந்தியில் அந்த இருவரிடமும் என் முகத்தை சீரியசாக வைத்துக்கொண்டு, "சச் போலோ" (உண்மையைச் சொல்) என்றேன். அவர்கள் இருவரும் மாறி மாறிப் பேசிக்கொண்டே இருந்தார்கள். அவர்கள் சொல்வது எதுவும் எனக்குப் புரியாது. நடுவில் இடைமறித்து, "ஜூட் மத் போலோ" (பொய் சொல்லாதே) என்று அதட்டினேன். மீண்டும் அவர்கள் கச்சேரியைத் தொடங்கினார்கள். கொஞ்ச நேரம் கழித்து, "கித்னா ஆத்மி, கிதர் ஸே" போன்ற சொற்களை இடைவெளிவிட்டு இடைவெளிவிட்டு உரக்கக் கத்தினேன்; முறைத்தேன்; உறுமினேன்; மிரட்டினேன். நான் இந்தி தெரிந்தவன் என்று அவர்கள் நம்பிவிட்டார்கள். இப்படி இந்த நாடகம் நடந்து கொண்டிருந்தபோது நாயர் சாப் அலுவலகத்துக்கு வந்து சேர்ந்தார். Accused இருவரையும் தனது அறைக்கு அழைத்துவரச் சொன்னார். இந்திக்காரர்கள் இருவரையும் அவரது அறைக்கு அழைத்துக்கொண்டு போனேன். இருவரையும் மாறி மாறி இந்தியில் கேள்வி கேட்டுத் துளைத்து எடுத்தார். இருவரில் ஒருவன் நாயர் சாரை முறைத்தபடி எதுவும் பேசாமல் இருந்தான். இறுதியில் அவனை அதட்டி ஒரு கேள்வி கேட்டார் நாயர். அவன் பதிலில் நாயர் ஆடிப்போய்விட்டார். அவன் இந்தியில் என்ன சொன்னான் என்று எனக்குப் பிறகுதான் தெரிய வந்தது. அவன் சொல்லியிருக்கிறான்: "கீழே ஹாலில் வைத்து படா (பெரிய) ஆபிசர் (என்னைச் சுட்டிக் காட்டி) எல்லாம் கேட்டுவிட்டார். நானும் பதில் சொல்லிவிட்டேன். நீங்க யார்? மீண்டும் என்னைத் தொல்லை செய்வது". நாயருக்கு ஏற்பட்ட அதிர்ச்சி அவன் சொன்ன பதிலில் இல்லை. நடராஜன் எப்படி இந்தியில் விசாரித்தான் என்பதுதான். பேய் அறைந்தது போல என்னையே பார்த்துக் கொண்டிருந்தார்.

நாயர் அதிகாரத்தின் கீழ் பெரும் சாதனைகளை நிகழ்த்தியது சென்னை டிஆர்ஐ. காலம் காலமாக, பரம்பரை பரம்பரையாகக் கடத்தலில் ஈடுபட்டு வந்த சிதம்பரம் கவரப்பட்டு சாம்ராஜ்யம் தகர்ந்தது. கடத்தலை விட்டொழித்து மாற்றுத் தொழிலுக்கு மாறிப் போனார்கள். தூத்துக்குடி கேங், கீழக்கரை கேங், காயல்பட்டினம் கேங் எல்லாம் சுவடு தெரியாமல் சுருங்கிப் போனார்கள். நாயர் எதுவுமே நடக்காததுபோல் 'தாயே யசோதா' என்று முணுமுணுத்தபடி தனது அறையில் செயல்பட்டுக்கொண்டே இருப்பார். அவரிடம் கற்றவை எனது செயல்முறையானது.




**ம**த்திய வருவாய்ப் புலனாய்வுத் துறையின் தென்மண்டல தலைமை கூடுதல் இயக்குநராக இருந்த சி.என். பாலகிருஷ்ண நாயர் தொடக்க காலத்தில் கல்லூரிப் பேராசிரியராகப் பணியாற்றியவர் என்று கேள்விப்பட்டிருக்கிறேன். அவரது ஆங்கில மொழி நடை, அழகும் செறிவும் கூடியது. மனித நேயம் மிக்க சிஎன்பி சாரை அதிகாரமோ பதவியோ கவர்ந்திழுத்ததில்லை. பொருளாதாரக் குற்றங்களுக்கான அடிப்படைகளை சமூக அரசியல் பார்வையோடு பார்க்கக்கூடியவர். நேரம் கிடைக்கும்போதெல்லாம் கோல்ப் மைதானத்திற்குச் சென்று விளையாடிவிட்டு வியர்க்க விறுவிறுக்க நனைந்த டீ ஷர்ட்டுடன் வீடு திரும்புவார். தீவிர விவாதங்களின் போதும் உணர்ச்சி வசப்படாமல் அமைதியாகப் பேசுவார். மலையாள இலக்கியம் குறித்துப் பேசக்கூடியவர். அவரிடம் பணியாற்றிய எல்லா அதிகாரிகள் மீதும் அன்பும் நம்பிக்கையும் கொண்டிருந்தார். குறிப்பாக எனக்கு அவர் கொடுத்த இடம் அதிகம். அப்போது சென்னையில் பன்னாட்டு திரைப்பட விழா நடந்து கொண்டிருந்தது. சிஎன்பியின் துணைவியார் சாந்தா நாயர், 'பிரஸ் இன்பர்மேஷன் பீரோ'வில் பொறுப்பு மிகுந்த பதவியில் அதிகாரியாக இருந்தார். சிஎன்பி சாரிடம் விழாவுக்கான விஐபி பாஸ் இருக்கும். அவர் போக முடியாத நாட்களில் எனக்கு 'பாஸ்' கொடுத்து படம் பார்த்துவரச் சொல்லியிருக்கிறார். எனது கலை, இலக்கிய ஆர்வங்களை அறிந்தவர் அவர்.



1991இல் தாராளமயமாக்கல் இந்திய அரசின் கொள்கை முடிவு என ஆனபோது தங்கத்தின் இறக்குமதி வரி வெகுவாகக் குறைக்கப்பட்டது. ஆறு மாத காலம் வெளிநாட்டில் தங்கியிருந்துவிட்டு, தாயகம் திரும்பும் வெளிநாடு வாழ் இந்தியர்கள் 5 கிலோ தங்கம் எடுத்து வரலாம், அதற்குரிய இறக்குமதி வரியை அந்நியச் செலாவணியில் கட்டவேண்டும் என்ற திட்டம் 1992இல் செயல்முறைக்கு வந்தது. வங்கிகளும் தங்க இறக்குமதியில் ஈடுபட்டன. தங்கக் கடத்தல் லாபம் ஈட்டும் தொழிலாக இல்லை. பம்பாயில் தாவூத் இப்ராஹிம் கும்பல் வலிமை இழந்தது. அதன் பக்க விளைவாக, பம்பாயில் ஆள் கடத்தி பணம் பறிப்பது, சினிமா தயாரிப்பாளர்கள், பெரும் கட்டுமானத் தொழிலில் ஈடுபட்டிருந்தவர்கள் போன்ற முதலாளிகளை மிரட்டிப் பணம் பறிப்பது போன்ற குற்றச் செயல்கள் அதிகரித்தன.

இந்தச் சூழலில்தான் சிஎன்பி நாயர் ஒன்றை அனுமானித்துச் சொன்னார். “இனி உங்கள் தங்கம் ஒளிராது. உங்கள் கவனம் போதைப் பொருள் கடத்தல் கும்பல் மீது திரும்ப வேண்டும். உங்கள் பணி போதைப் பொருள் தடுப்புப் பணியாக இருக்க வேண்டும்” என்று அறிவுரை செய்து அது குறித்த ரகசிய தகவல் சேகரிப்புப் பணியில் துரிதமாகச் செயல்படும்படி கூறிவந்தார். எமது அலுவலகத்துக்கு எதிரே NCB என்று சொல்லப்படும் Narcotics Control Bureau அலுவலகம் இயங்கி வந்தது. போதைப்பொருள் தடுப்பு என்பது NCB யின் பிரதான பணி. எங்களுக்கோ இரண்டாம் பட்சமான விஷயமாகவே இருந்து வந்தது. போதைப்பொருள் கடத்தலில் ஈடுபடுபவர்கள் கிரிமினல்கள். அவர்களைக் கையாள்வதும் கடினமான வேலை.

சிஎன்பி சாரின் அறிவுறுத்தலுக்கு ஏற்ப எமது இயக்ககம் துரித கதியில் இயங்கத் தொடங்கியது. எனது ரகசியத் தகவலின் அடிப்படையில் ஒரு கிலோ பிரௌன் சுகர் சென்னை சென்ட்ரல் ரயில் நிலையத்தில் மத்திய பிரதேச மாநிலம் இண்டோரிலிருந்து வந்த ஒரு தமிழரிடம் கைப்பற்றப்பட்டது. கைப்பற்றப்பட்ட போதைப் பொருள் இண்டோருக்கு அருகில் உள்ள நீமச் என்ற கிராமத்தின் தாதா முகமது ஹசன் என்பவரிடமிருந்து பெறப்பட்டதாக விசாரணையில் தெரிய வந்தது. முகமது ஹசன் சென்னைக்குக் கொண்டு வரப்பட்டு, கைது செய்து சிறையிலடைக்கப்பட்டார். முகமது ஹசன் NCBயால் கண்காணிக்கப்பட்டு வந்த மிகப்பெரிய இலக்கு. இதற்காக NCBயின் இயக்குநர் பாராட்டுப் பத்திரம் அளித்துச் சிறப்பித்தார்.

அடுத்ததாக இலங்கைக்கு பிரௌன் சுகர் கடத்தி வந்த கும்பலும் பிடிபட்டது. சிலேட் குச்சிகள் ஏற்றி வந்த லாரியில் 66 கிலோ பிரௌன் சுகர் மறைத்து வைக்கப்பட்டிருந்தது. அந்த லாரி சேலத்தில் தடுத்து நிறுத்தப்பட்டு போதைப் பொருள் கைப்பற்றப்பட்டது. ஏறக்குறைய ஆறு மாத காலம் எனது ரகசியத் தகவலின் அடிப்படையில் ஒட்டுமொத்த அலுவலகமும் இரவு பகலாக வேலை பார்த்தது. இந்த மிகப் பெரிய வேலையைச் செய்து முடிக்க சேலம் சென்ற குழுவில் நான் செல்ல முடியவில்லை. அப்போது எனக்கு ஒரு சிறிய அறுவை சிகிச்சை நடந்து முடிந்திருந்தது. வீட்டில் ஓய்வெடுத்துக் கொண்டிருந்தேன். என்றாலும் வெற்றிகரமாக வேட்டையாடி அதிகாரிகள் சென்னை திரும்பிய பிறகு ஒரு நாள் அலுவலக காரை அனுப்பி என்னை அலுவலகத்திற்கு அழைத்து வரச் செய்தார் சிஎன்பி. அவர் அறையில் என்னோடு கொஞ்ச நேரம் பேசிக்கொண்டிருந்த சிஎன்பி நாயர், காபி வரவழைத்துக் கொடுத்து மனமாரப் பாராட்டினார். “நீ இன்றைய கதாநாயகன். நேரில் உன்னைப் பாராட்ட ஆசைப்பட்டேன். இனி எத்தனை நாள் வேண்டுமானாலும் விடுப்பில் இருந்துவிட்டு வரலாம்” என்று சொல்லி விடையளித்தார். என்றென்றும் மனத்தில் நிற்பவர் சிஎன்பி நாயர்.

டிஆர்ஐ பணிக்காலம் முடியும் வரை நான் கேகே நகர் சங்கீதா காலனியில்தான் இருந்தேன். கேகே நகர் குறித்து எழுத வேண்டும்.

தமிழக அரசின் கோடம்பாக்கம்-புதூர் பிரிவு II திட்டத்திற்குத்தான் கலைஞர் கருணாநிதி நகர் என்று அன்றைய தமிழக ஆளுநர் மேதகு கேகே.ஷா-வால் பெயர் சூட்டப்பட்டது. அதற்கான விழா கலைஞரின் 48வது பிறந்த நாளன்று (3.6.1971) நடைபெற்றது. இது குறித்த நினைவு கல்வெட்டு அசோக் நகர் மெட்ரோ ஸ்டேசனுக்கு அருகில் நடைபாதை ஓரமாக 100 சதுர அடி கொண்ட இடத்தில் அழகாக நிறுவப்பட்டிருந்தது. அந்த இடம் சரிவரப் பராமரிக்கப்படாமல் கலைஞர் கருணாநிதி நகர் என்ற பெயரில் உள்ள எழுத்துகள் சிதைந்து கிடக்கின்றன. மாநகராட்சியோ தமிழக அரசோ இதைக் கவனித்துச் சீர் செய்யுமா?

தொடரும்

*mail to:* **sandhyapathippagam@gmail.com**

# மீரா ஏன் சினிமாவுக்கு வரவில்லை?

குளித்துவிட்டு அறைக்குள் வந்த போது உடம்பு வெடவெடவென்று ஆடிற்று. தாழிடப்பட்ட கதவையும் ஜன்னலையும் மீறி உள்ளே வந்தது நடுக்கும் குளிர். சடகோபன் விறுவிறுவென்று உடைகளை அணிந்துகொண்டான்.

● **ஸிந்துஜா** ஓவியம்: **உஷா சாந்தாராம்**

சட்டைக்கு மேலே அணிந்த முழு ஸ்வெட்டர், மனைவிக்குப் பணியும் கணவனைப் போல, அறையின் குளிரை எதிர்க்க முடியாமல் உடம்புடன் ஒட்டிக்கொண்டது. ஜன்னல் கண்ணாடி வழியே தெரிந்த பனி, எதிர்சாரி வீடுகள், மரங்கள், விளக்குக் கம்பங்கள் எல்லாவற்றையும் மறைத்து வெண்கடலென உலகையே சூழ்ந்துவிட்டது போல் இருந்தது. கடிகாரத்தைப் பார்த்தான். ஒன்பது மணி. சனிக்கிழமை என்று ரஜாயை இழுத்து விட்டுக்கொண்டு பதினோரு மணி வரை அரை விழிப்பும் அரைத் தூக்கமாகவும் கொண்டாட வேண்டிய தினம். ஆனால், இன்று சாமநாது பத்து மணிக்கு வருவதாக நேற்றே அவனுக்குப் போன் செய்துவிட்டார்.



சுத்தம் செய்ய வேண்டுமா என்று ஒரு முறை அவன் கண்கள் அறையைச் சுற்றின. இரண்டு கட்டில்கள் அந்த அறையை அடைத்திருந்தன. தலையணைகளும் மடித்து வைக்கப்பட்டிருந்த ரஜாயும் போர்வையும் அமர்ந்திருந்த ஒன்று அவனுடையது. மற்றொன்றில் தலையணைகளும் ஒழுங்கற்று மடித்து வைக்கப்பட்டிருந்த ரஜாயின் மேல் அன்றைய செய்தித்தாளும் சில புத்தகங்களும் பரப்பிக் கிடந்தன. அந்தக் கட்டிலை இரண்டு வாரம் முன்பு வரையும் அவனுடைய பெரியப்பா பையன் சிவா உபயோகப்படுத்திக் கொண்டிருந்தான். அவன் தில்லியில் இருந்தது ஆறு மாதம்தான். "என்ன எழவுடா இந்த ஊரு?" என்று வெய்யில் காலத்தில் சூரியனையும் குளிர் காலத்தில் இயற்கையையும் திட்டிக் கொண்டிருந்தான். இங்கு வந்ததிலிருந்து அவன் விடாமல் போட்டுக் கொண்டிருந்த அப்ளிகேஷன்களில் ஒன்று சென்னையில் வேலை வாங்கிக்கொடுக்க ஓடிவிட்டான்.

சடகோபன், நடுத்தர வர்க்க அரசு ஊழியர்களுக்காக அரசாங்கம் கட்டிக் கொடுத்திருந்த குடியிருப்புகளில் ஒன்றில் இருந்தான். அரசு ஊழியர்கள், தாம் குடியிருக்கும் வீட்டுக்கு என்று அரசாங்கத்துக்கு ஒரு சிறிய வாடகை தந்த அதே நேரத்தில், அவர்களது வீட்டில் ஒரு அறையை சடகோபன் போன்ற பிரம்மச்சாரிகளுக்கு வாடகைக்கு விட்டு சம்பாதித்தார்கள். அவர்கள் வசூலித்த வாடகை அவர்கள் அரசுக்கு அளித்த வாடகையை விட இரண்டு மூன்று மடங்கு அதிகம் இருந்தது. ஆனால், சடகோபன் வேறு எங்காவது இடம் தேடிப் போனால் தர வேண்டிய வாடகையை விட இது குறைவுதான். அது தவிர ஆறு மாதம், பத்து மாதம் அட்வான்ஸ் என்று பணத்தைப் பிடுங்கும் தொல்லை இல்லாமலிருந்தது.

அறைக்கு வெளியே இருந்த பாத்ரூம், டாய்லெட்டை வாடகைக்கு வந்தவர் உபயோகப்படுத்திக் கொள்ள முடிந்தது. சமையல் வேலை எதுவும் அனுமதிக்கப்படவில்லை. மின்சார பில் என்று தனியாக எதுவும் கட்ட வேண்டியதில்லை. அநேகமாக ஒவ்வொரு வீட்டிலும் தமிழ்நாடு, கர்நாடகா, ஆந்திரா, கேரளா என்று தென்னிந்திய இளைஞர்கள் இடம் பிடித்திருந்தார்கள்.

சாமநாது, ரவியிடம், "சாய் அடிக்கிறியா?" என்று கேட்டார். மூடியிருந்த வாசல் கதவை மீறிக்கொண்டு உள்ளே வந்து குசலம் விசாரித்த குளிருக்கு இதமாக ஏதாவது சூடாகச் சாப்பிட நாக்கு கேட்டது. அவன் நான்கு நாள்களுக்கு முன்புதான் தில்லிக்குள் காலடி எடுத்து வைத்திருந்தான். பிறந்ததிலிருந்து காப்பியில் ஊறியிருந்த நாக்கும் வாயும் முதலில் தேநீரை ஏற்க மறுத்தன. ஆனால், சூழ்நிலை அவைகளைத் தோற்கடித்து தேநீரின் மடியில் மண்டி போட வைத்துவிட்டன.



சாமநாது, ரவியிடம் ‘‘மணி எட்டரை ஆறது. நாம ரெண்டு பேரும் குளிச்சிட்டு ஒம்பதரை வாக்கிலே கிளம்பினா சரோஜினி நகருக்குப் போய்ச் சேர சரியா இருக்கும். நீ எல்லாத்தையும் பேக் பண்ணி வச்சுண்டாச்சா?’’ என்று கேட்டபடி பாத்ரூமை நோக்கிச் சென்றார். ரவி, ‘‘ஆங், எல்லாம் ஆச்சு’’ என்றான்.

சாமநாதுவின் வீடு தில்லியில் பர்ஸாத்தி என்று அழைக்கப்படும் மேல்மாடி ஒற்றை அறையில் இருந்தது. ஒரு பெரிய ஹால். இடது பக்க ஓரத்தில் ஒரு சிறிய சமையல் மேடை. கிழக்குப் பார்த்த வாசல். வீட்டுக்குள் தெற்கும் வடக்கும் பார்த்து இரண்டு ஜன்னல்கள் இருந்தன. மொத்தமே முன்னூறுக்கும் குறைவான சதுர அடி இருக்கலாம் என்று ரவி நினைத்தான். இந்தக் குச்சில் சாமநாதுவும் அவர் மனைவியும் ஒரு வயசுக் குழந்தையும் குடித்தனம். மனைவியும் குழந்தையும் குளிர்காலத்தில் தாங்க முடியாது என்று வருஷம் முழுக்க ராவும் பகலுமாய்ச் சுட்டெரிக்கும் மதுரைக்குப் போய்விட்டார்கள். சாமநாதுவுடன் தில்லியில் பல வருஷங்கள் வேலை பார்த்து விட்டு, ரிட்டயர்மென்டுக்குப் பின் சென்னை சென்றுவிட்ட சிநேகிதரின் மகன் என்று, ரவி, தில்லியில் வந்து இறங்கியவுடன் அவர் வீட்டுக்கு வந்தான்.

படிப்பு முடிந்து ஒரு வருஷம் ஆகியும் சென்னையில் அவனுக்கு வேலை எதுவும் கிடைக்கவில்லை. சாமநாதுவின் வடக்குத்தி நண்பர் ஒருவர் நடத்தும் கம்ப்யூட்டர் கம்பனியில் அவனுக்கு சாமநாது வேலை வாங்கிக் கொடுத்திருக்கிறார். கிடைக்கும் சம்பளத்தில் தில்லி போன்ற நகரில் வாழ்க்கை நடத்துவது பற்றிய கவலையுடன் ரயில் ஏறி வந்தான். ஆனால், வந்த இரண்டு தினங்களுக்குள் அவனுக்கு அவர் நிறைய நம்பிக்கை தரும் சொற்களைக் கூறினார். அவர்

தில்லிக்கு இதே மாதிரிதான் வந்தாராம். அவனுக்கு இப்போது உண்டாகியிருக்கும் பயங்கள் அவருக்கும் அப்போது இருந்ததாம். சென்னையில் அவன் வீட்டில் இனிமேல் அவனுக்காகச் செலவு எதுவும் செய்ய வேண்டியதில்லை என்பதே பெரிய சேவிங்தானே என்று ரவியிடம் சொன்னார். நேற்று இரவு ரவியிடம் அவருக்குத் தெரிந்த பையன் ஒருவன் சரோஜினி நகரில் இருப்பதாகவும் அவன் கூட சில நாள் இருந்துகொண்டே வாடகைக்கு ஒரு இடம் பிடிப்பது வசதியாக இருக்கும் என்றும் அவர் சொன்னார். இப்போது அங்கேதான் போக இருக்கிறார்கள்.

இன்று என்ன புரோகிராமுடன் சாமநாது வருகிறாரோ என்று சடகோபன் நினைத்தான். போன வாரமே ஐஃபாக்சில் நடக்கும் ஓவியக் காட்சிக்குப் போகலாம் என்று சொல்லிக் கொண்டிருந்தார். வாரத்தில் ஐந்து நாள்கள், சில நாள்களில் பகலுடன் பின்னிரவு நேரமும் சேர்ந்துகொள்ளும் வேலை அவனைப் பிழிந்து எடுக்கும் பின்னணியில், சாமநாதுவின் பரிச்சயமும் நெருக்கமும் அவனுக்கு அருமருந்தாக இருந்தன. கணினியின் கணக்குப் பட்டியல்களில் படர்ந்து திரியும் எண்களின் பின்னே பதுங்கியிருக்கும் யோக்கியமற்றவற்றைப் பின்தொடர்ந்து கண்களைக் காவு எடுக்கும் தணிக்கை வேலை அவனுடையது என்றால், சாமநாதுவின் அலுவலகத்தில் அவர், நாட்டிலுள்ள ஆள்களின் அயோக்கியத்தனத்தைத் தணிக்கை செய்து கண்டுபிடிக்கும் வேலையில் இருந்தார். தணிக்கை இருவரையும் நெருக்கமாகக் கட்டிப் போட்டுவிட்டது என்று அவர் அவனிடம் ஒரு முறை சொன்னார்.

அவர்கள் இருவரிடையே வயது வித்தியாசம் (இவனுக்கு இருபத்தி நான்கு; அவருக்கு நாற்பத்தி ஒன்று), படிப்பு வித்தியாசம் (இவன் இன்னும் ஒரு குரூப் பாக்கி வைத்திருக்கும் சி.ஏ. மாணவன்; அவர் அப்போதும் இப்போதும் யாரும் மதிப்பு வைத்திருக்காத வெறும் பி.ஏ.) இருந்தாலும் தணிக்கையைப் போல் இருவருக்குமிருந்த மற்றொரு ஒற்றுமை, அவரவர் உள்ளூரில் அவர்கள் அணிந்திருந்த சிறிய நூல் கண்டு அவர்களின் திறமையை அடக்கியாண்டதால் தில்லிக்கு வந்துவிட்டவர்கள். சடகோபனின் ஆடிட்டர் கம்பனியில் அவன் வந்து சேர்ந்த முதல் மாதமே அவனை சாமநாதுவின் அலுவலக ஆடிட்டுக்கு அனுப்பிவிட்டார்கள். நாலைந்து நாள்களில் அங்கிருக்கும் முகங்களில் அவருடையதும் அவனுக்குப் பழகிப் போனது. அந்த வார இறுதியில் அவன் அலயான்ஸில் காண்பிக்கப்பட்ட ஒரு திரைப்படத்தைக் காணச் சென்றான். வரிசையில் நின்று கொண்டிருக்கும் போது, “அட பார்ரா, யாரு இங்கேன்னு” என்று குரல் கேட்டுத் திரும்பிப் பார்த்தான். சாமநாது வாயில் பைப்புடன் நின்று அவனைப் பார்த்துச்



சிரித்தார். இருவரும் உள்ளே சென்று அமர்ந்ததும் அவர் அவனிடம், “நீ எங்கேய்யா இந்தப் பக்கம்? முதல்லே உன்னைப் பாத்ததும் இது கொல்லன் பட்டறை இல்லையேன்னு...”

சடகோபன் அவரை இடைமறித்து, “நான் ஈ இல்லே சார். எறும்பு” என்றான்.

அவர், அவனை அந்த அரை இருட்டில் உற்றுப் பார்த்தார். வாயில் கையை வைத்து வரும் சிரிப்பை அடக்கிக்கொண்டார். அவரது இடது கை அவனது வலது கையைப் பற்றி அழுத்தியதில் அவர் அவனைப்

பாராட்டுவதை உணர்ந்தான். அன்றைக்குப் பிறகு அவன் ஆடிட் என்று வெளியூர் போகாத வார விடுமுறை நாள்களில் சந்தித்து சினிமா, நாடகம், இசை என்று நடக்கும் இடங்களுக்குப் போனார்கள். பேசித் தீர்த்தார்கள்...

வாசலிலிருந்து அழைப்பு மணி ஒலித்தது. சடகோபன் சென்று வாசல் கதவைத் திறந்தான். சாமநாது புன்முறுவலுடன் உள்ளே வந்தார். கூடவே ஓர் இளைஞனும். அறைக்குள் வந்து உட்கார்ந்ததும் சாமநாது, சடகோபனிடம், "இவன் ரவி. நா பதினஞ்சு வருஷத்துக்கு முன்னாடியும், நீ ரெண்டு வருஷத்துக்கு முன்னாடியும் செஞ்ச தப்பை இப்ப இங்க செய்யறதுக்குன்னு வந்திருக்கான்" என்றார்.

"நாளுக்கு நாள் மோசமாயிண்டு வர்ற புது டெல்லிக்கு உங்களை வரவேற்கிறேன்" என்றான் சடகோபன். ஒரு முறை வந்தவனை ஏற இறங்கப் பார்த்தான்.

அதிகமாகச் சதை போடாத, ஒல்லியுமில்லாத உடம்பு. நீல டெனிம் கால்சட்டையும் ஸ்வெட்டருக்கு அடியில் வெள்ளைச் சட்டையும் அணிந்திருந்தான். சென்னைக் குளிருக்கு வாங்கிய ஸ்வெட்டர் என்று தெரிந்தது. களையாக இருந்தான். அவனுக்குத் தன் வயதுதான் இருக்குமென்று சடகோபனுக்குத் தோன்றிற்று.

"நீங்க, உங்க எல்லாம் வேண்டாம்" என்றான் ரவி. "இந்த ஊருக்கு வரப்போ குளிர்தான் ரொம்பப் பயமுறுத்தும்னு எல்லாரும் சொன்னா. அதுவும் நவம்பர் கடைசியிலே நான் கிளம்பினதினாலே. நான் இங்க வந்து ரெண்டு நாளாறது. வெளியிலே வந்து நடந்தா மூச்சு முட்டுற மாதிரி இருக்கு. நேத்திக்குப் பேப்பர்லே போடறான், ஒரு நாளைக்கு அம்பது சிகரெட்டு குடிக்கிற கெடுதல் காத்துலே இருக்குன்னு. இங்கே கவர்மென்டுன்னு ஒண்ணு இருக்கிற மாதிரி தெரியலையே."

"என்ன பண்றது? விதான சபாவுக்குப் பதிலா தினமும் பாதி கேபினட், கோர்ட்டுக்குப் போறது. மீதிப் பாதி ஜெயில்லே" என்றான் சடகோபன்.

சாமநாது, "இவன் மெட்றாஸ்லே இருக்கற என் பிரெண்டோட பையன். என் கூடதான் வந்ததிலேர்ந்து இருக்கான். ஆபீஸ், கான் மார்க்கெட் ஏரியாலேஇருக்கு. இவனுக்கு ஒரு ரூம் பாக்கணும். சரோஜினி நகர்தானே இப்ப இந்த ஊர்லே பேச்சிலர் பாரடைஸ்? இங்க மார்கெட் கிட்டேயே மெட்றாஸ் மெஸ்ஸும் இருக்கு. எங்காபீஸ் பியூன் இங்கதான் லக்ஷ்மிபாய் நகர்லே இருக்கான். சைடிலே புரோக்கர் பிஸினஸ் பண்றான். அவன் கிட்டே சொன்னப்போ ஒரு வாரம் பத்து நாள்லே பண்ணித் தரேன்னான்..." என்று நிறுத்தினார்.

"அதுக்கென்ன, இடம் கிடைக்கிற வரைக்கும் என் கூடயே இருக்கட்டுமே" என்றான் சடகோபன்.

ரவி, அந்த அறையில் இருந்த மற்றொரு கட்டிலைப் பார்த்தான். ரஜாய், இரண்டு தலையணைகள் அதன் மேல் இருந்தன.

"இங்கே என்னோட கசின் இருந்தான். அவனுக்கு மெட்றாஸ்லே வேலை கிடைச்சதுன்னு இதையெல்லாம் இங்கே விட்டுட்டுப் போயிட்டான்."

ரவி ஒன்றும் சொல்லாமல் சடகோபனைப் பார்த்தான்.

"நீ வேணும்னா இங்கியே பெர்மனெண்டா என் கூட இருந்துக்கலாம். தனியா இருக்கணும்னு நீ நினைச்சா ரூம் பாத்துண்டு போகறதுதான் சரி. ஆனா அதுக்கு முழு வாடகை, அட்வான்ஸ் அது இதுன்னு செலவு இருக்கும். என் கூட இருக்க உனக்கொண்ணும் ஆட்சேபணை இல்லியே?" என்று ரவியைப் பார்த்துக் கேட்டான்.

"தரை இவ்வளவு ஜில்லுனு இல்லாட்டா நேரே ஒரு நமஸ்காரத்தைப் பண்ணிடுவேன்" என்றான் ரவி அவன் கையைப் பிடித்துக்கொண்டு.

"பெரிய எமகாதகனா இருக்கானே!" என்று சிரித்தான் சடகோபன்.

"ரெண்டு நாள் டில்லித் தண்ணி குடிச்சதுக்கே இப்படின்னா...?" என்று சாமநாதுவும் புன்னகை புரிந்தார்.

"என் கூட இருந்தா நாம ரெண்டு பேரும் வாடகையை ஷேர் பண்ணிப்போம்" என்ற சடகோபன் தொடர்ந்து, "இதுலே எனக்கும் பெனிபிட் இருக்கு" என்று அவனைப் பார்த்துக் கண் சிமிட்டினான்.

"உதவி செய்யறதைக் கூட இப்படி ஒருத்தர் ஜென்ட்டிலா சொல்றதை இப்பதான் நான் பாக்கறேன்" என்றான் ரவி.

அடுத்த நாள் ரவி, சடகோபனின் அறைக்குக் குடி வந்துவிட்டான். உதவிக்காக சாமநாதுவும் அவனுடன் வந்தார்.

"இன்னிக்கி ஞாயித்துக் கிழமை. லீவு நாள்ன்னு பிள்ளைவாள் மெஸ்ஸிலே ஸ்பெஷல் மீல்ஸ் இருக்கும்" என்று சடகோபன் அவர்களை சரோஜினி நகர் மார்க்கெட் பக்கம் அழைத்துக்கொண்டு போனான். மெஸ் வாசலில் ஏகப்பட்ட இளைஞர்கள் நின்று பேசிக் கொண்டிருந்தார்கள்.

"டெல்லி பேச்சிலர் கூட்டமே இங்கதான் இருக்கும் போல இருக்கே!" என்றான் ரவி. அவர்களைச் சுற்றிலும் முக்கால்வாசித் தமிழ்க் குரல்கள்.

“எப்பவும் பெரிய திருவிழாக் கூட்டம்தான். லோடி காலனிலேந்து ஏன் சில சமயம் கரோல்பாக்லேந்தே கூட குடும்பமா வருவான்னா பாத்துக்கோயேன்” என்றார் சாமநாது.

அன்று வாழைக்காய் ஒரப்புக் கறி, அப்பளம், வடாம், மோர்க் குழம்பு, அரைத்துவிட்ட ரசம், போதாக்குறைக்கு பாயசம், தயிர் என்று விருந்து சாப்பாடுதான். சடகோபன் பணம் கொடுத்தான்.

சாப்பிட்டு விட்டு அவர்கள் வீடு திரும்புகையில் ரவி, “பிள்ளைவாள் மெஸ் இருக்கற வரைக்கும் தமிழ்நாட்டுக்கு டெல்லி மாப்பிள்ளைகள் கிடைக்கறது கஷ்டம்தான்” என்றான்.

“தமிழ்நாட்டுக்குத் திரும்பிப் போகமாட்டேன்னு எப்படி ஜென்டிலா சொல்றான் பாரு!” என்றார் சாமநாது.

“ஆனா சாப்பாடு விலை கொஞ்சம் ஜாஸ்திதான் இல்லே?” என்றான் ரவி.

சடகோபன் அவனைத் திரும்பிப் பார்த்தான்.

**மீ**ரா, எல்லாவற்றையும் சரியாக எடுத்து வைத்துக் கொண்டாயிற்றா என்று ஒரு முறை கைப்பையைப் பிரித்துப் பார்த்துக்கொண்டாள். கண்ணாடியில் பார்த்து தலைமயிரைச் சரி செய்துகொண்டாள். ‘அழகாத்தான் இருக்கே போ!’ என்று அம்மா அவள் கண்ணாடியைப் பார்க்கும் போதெல்லாம் சொல்வது ஞாபகத்துக்கு வந்து முகத்தில் புன்னகை மின்னிவிட்டு மறைந்தது.



“என்ன இன்னிக்கி ஒரே ஜாலி மூடுலே இருக்காப்பிலே இருக்கே?” என்று சிரித்தபடி அறைத் தோழி கிறிஸ்டி கேட்டாள். “காலேல காப்பிலே ஜாஸ்தி சக்கரை போட்டுக் குடுத்தே. மெஸ்லே உப்புமான்னதுக்கு முகத்தைச் சுளிக்கலே. இப்ப என்னடான்னா ஆபீசுக்குக் கிளம்பறப்போ மொகம் பூரா சிரிப்பா இருக்கே. என்ன ஆச்சு?”

“உனக்கு வேறே வேலை இல்லே. இன்னிக்கி மத்தியான ஷிப்டா உனக்கு? அதான் என்னைப் போட்டுக் காய்ச்சறே!” என்று சிரித்தபடி தோழியைத் திட்டிவிட்டு கையில் கட்டியிருந்த கடிகாரத்தைப் பார்த்து, “ஒம்பது மணி பஸ், மார்க்கெட் பஸ் ஸ்டான்ட்டிலிருந்து கிளம்ப இன்னும் கால் மணிதான் இருக்கு. அதை மிஸ் பண்ணினேன்னா ஆபீஸ்லே பாட்டு வாங்க வேண்டியிருக்கும். வரட்டா?” என்று கிளம்பினாள்.

போகிற வழியில் கிறிஸ்டியின் பேச்சு அவளைச் சுற்றி வந்தது. கிறிஸ்டியிடம் வெளிப்படையாக அவள் எதுவும் சொல்லவில்லை என்றாலும் மனதில் குதூகலம் பொங்கி வழிவது என்னமோ உண்மைதான். இன்று கணினிப் பிரிவுக்கு புது ஆள் வரப் போகிறான். வரப்போகிறவன் அவளைப் போல இளம் வயது ஆள். அவளைப் போல அவனும் ஒரு ஆபிசராகச் சேருகிறான். மானேஜராக அல்ல. கடந்த ஒரு வருஷமாக அவளுடைய முழு வெறுப்பையும் சம்பாதித்திருந்த கணினிப் பிரிவு மானேஜர் சித்தராமு சனிக்கிழமை வேலையை விட்டுப் போனான். என்ன மாதிரியான ஆள்! அவன் ஏதோ ஆகாயத்திலிருந்து வந்து அவதரித்தவன் போல, கூட வேலை பார்ப்பவர்கள் மீது காட்டிய அலட்சியம்! வேலைப்பளு பற்றி அவள் என்றும் அலட்டிக் கொண்டதில்லை. மாலை ஐந்தரை மணிக்குக் கைக்கடிகாரத்தைப் பார்க்கும் வழக்கத்தை அவள் என்றும் கொண்டிருக்கவில்லை. ஆனால், அவன் அவளையும் அவளது சக ஊழியர்களையும் நடத்திய விதம்! இவ்வளவுக்கும் அவர்கள் வேலை பார்த்தது என்னவோ மனித வளப் பிரிவில். இந்த இரு பிரிவுகளையும் கட்டிப் போட்டது அலுவலர்களின் சம்பளமும் அதன் உடன்வந்த மற்ற தொழிலாள விவரணைகளும்தான்.

சித்தராமு, அவளைச் சந்தித்த முதல் நாளே அவளது வெறுப்பைச் சம்பாதித்து விட்டான். புதியவனை வரவேற்கும் முகமாக அவள் அவனது அறைக்குள் சென்றாள். “குட்மார்னிங்” என்றாள்.

“குட்மார்னிங்” என்றான் அவன். பார்த்தால் அவளைவிட ஏழெட்டு வயது பெரியவனாக இருப்பான் போலிருந்தது. நின்று கொண்டிருக்கும் அவளை அவன் உட்காரச் சொல்லவில்லை.

அவள் தன் பெயரையும் தான் இருக்கும் பிரிவின் பெயரையும் தான் வகிக்கும் பதவியையும் பற்றிச் சொன்னாள்.

“ஓ ஜூனியர் ஆபீசரா?” என்றான். அந்தக் குரலில் தொனித்த ஏளனம்! அது வெளிப்படையாக அவளுக்குத் தெரிய வேண்டும் என்பது போலச் சொன்னான்.

“உங்கள் வருகைக்கு என் மகிழ்ச்சியைத் தெரிவிப்பதற்காக

இங்கே வந்தேன். வாழ்த்துக்கள். வரட்டுமா?'' என்று கதவின் பக்கம் திரும்பினாள்.

''அடுத்த தடவை வரும் போது இன்டெர்காமில் போன் செய்து அனுமதி கேட்டுக்கொண்டு வா'' என்றான் அவன்.

அவள் திரும்பி அவனைப் பார்த்தாள். 'குட்மார்னிங்' என்று அவன் சொன்ன பொழுதிலிருந்து இப்போது வரை அவன் குனிந்த தலை நிமிராமல்தான் இருந்தான்.

''அடுத்த தடவை வரச் சான்ஸே இல்லை. ஆனால், இனிமேல் என்னிடம் வா, போ என்றால் உன்னிடமும் வா, போ என்றுதான் பேசுவேன்'' என்று சொல்லிவிட்டுக் கதவைத் திறந்துகொண்டு வெளியே வந்தாள்.

நேரே அவளுடைய பிரிவின் தலைவரைப் போய்ப் பார்த்து நடந்ததைக் கூறினாள். அவர் புன்முறுவலுடன் கேட்டுக் கொண்டிருந்தார்.

''அவன் எஃப்.டியின் தூரத்து சொந்தம். அது தலைக்குள்ளே போயிருக்கு போல. நாங்க எஃப். டியையே என்னய்யான்னு கேக்கறவங்க. யூ டோன்ட் ஒர்ரி. உனக்கு அவன் போன் பண்ண மாட்டான். பண்ணிணா என் கிட்டே பெர்மிஷன் வாங்கச் சொல்லு'' என்று சிரித்தார்.

அதற்குப் பிறகு கணினிப் பிரிவு, அவளது பிரிவுக்குச் செய்து தர வேண்டிய வேலைகளுக்கு எல்லாம் அவளுடைய உதவியாளர்களை அனுப்பிவிடுவாள். முதலில் அவன் அவர்களுக்குத் தர வேண்டிய ரிப்போர்ட்டுகளைத் தாமதமாக அனுப்பினான். அவள் அது சமாளிக்கக் கூடிய ஒரு பிரச்சினைதான் என்று விட்டுவிட்டாள். அவன் அதனால் மேலும் கோபமுற்றவன் போல அவளது உதவியாளர்களைத் திட்டி, திரும்பத் திரும்ப வரச் சொல்லி அலைக்கழிக்க ஆரம்பித்தான். பொறுத்துப் பார்த்துவிட்டு அவர்கள் யூனியனில் புகார் செய்துவிட்டார்கள். அது பூதமாகக் கிளம்ப எஃப்.டி. தலையிட்டு சித்தராமுவை யூனியன் தலைவர்கள் முன்னேயே கண்டிக்கும் அளவு ரகளையாகி விட்டது.

அவள் பஸ் நிறுத்தத்தை அடைந்த போது அவளுடைய பஸ் வந்திருந்தது. அவள் சித்தராமுவின் நினைவைக் கழற்றிப் பஸ் நிறுத்தத்தில் தூக்கி எறிந்துவிட்டு வண்டிக்குள் ஏறினாள்.

ரவி, வேலையில் சேர்ந்த அன்று மீராவைச் சந்தித்தான்.

ஒரு மணி வாக்கில் ''எக்ஸ்க்யூஸ் மீ!'' என்று அவன் இருந்த அறையின் கதவைத் திறந்துகொண்டு வந்த பெண் அவனைப் பார்த்துப் புன்னகை செய்தாள். ''மிஸ்டர் ரவி?''

''ஆமாம்'' என்று அவனும் அவளைப் பார்த்துப் புன்னகை செய்தான்.

அவள் கவனத்தைக் கவரும் தோற்றத்துடன் காணப்பட்டாள். மாநிறம். எடுப்பான முகம். வரைந்துவிட்ட மாதிரி இருந்த நாசியும் உதடுகளும்தான் அந்த முகத்தின் எடுப்புக்குக் காரணம் என்று நினைத்தான். ரவிக்கைக்கு வெளியே வெளிப்பட்ட கைகள் வழவழப்புடன் பூனை மயிருடன் மின்னின. மதிக்கத்தக்க விதத்தில் அணிந்திருந்த ஸாரி அவள் உயரத்தை எடுத்துக் காட்டிற்று. அந்த உயரம், லேசாகப் பூசிய உடம்பைக் கவனத்துடன் வெளித் தெரியாது காத்து நின்றது. கழுத்தில் மெல்லிய சங்கிலியும் முகத்தில் புன்னகையும் அணிகலன்களாக விளங்கின.

''நான் மீரா. செகண்ட் ஃப்ளோர்ல இருக்கற பெர்சானல் டிபார்ட்மெண்ட்லேர்ந்து வரேன்'' என்றபடி அங்கிருந்த நாற்காலியில் உட்கார்ந்துகொண்டாள். அவள் கையிலிருந்த ஃபைலைப் பிரித்து, ''ஒரு வாரமா தலையைப் பிச்சுக்கறேன். இந்த இஸ்யு சால்வ் ஆகவே இல்லே'' என்று ஒரு பேப்பரை எடுத்தாள்.

அவன், அவள் தலையை உற்றுப் பார்த்தான். அவள், ''என்ன பாக்கறீங்க?'' என்று கேட்டாள்.

''ஒண்ணுமில்லே.''

''இல்லே, என்னமோ இருக்கு''

''இல்லே, காலையிலே எடுத்த வகிடு கூடக் கலையாம இருக்கேன்னு பார்த்தேன்'' என்றான்.

அவள் வாய்விட்டுச் சிரித்தபடி அவனிடம், ''இப்போதுதான் என் வாழ்க்கையில் கம்ப்யூட்டருடன் உறவாடும் ஒருவர் நகைச்சுவையாகப் பேசுவதைப் பார்க்கிறேன். என்ன ஆச்சரியம்!'' என்றாள் ஆங்கிலத்தில்.

''திட்டுவது என்றால் நேரடியாகத் திட்டிவிடுங்கள்'' என்றான் அவன்.

''வாவ்! நீங்க எங்கே, அந்தத் திருதராஷ்டிரன் எங்கே?'' என்றவள் அவசர அவசரமாக உதட்டைக் கடித்துக்கொண்டாள். அதே அவசரத்துடன் மன்னிப்புக் கோரும் குரலில் ''ஐ'ம் சாரி'' என்றாள்.

''திருதராஷ்டிரன்! என்ன ஒரு அட்டகாசமான பெயர்! யார் அது?''

அவள் சில வினாடிகள் பேசாமல் இருந்தாள். மறுபடியும், ''சாரி!'' என்றாள். ''முதல் நாளே நான் இப்படிப் பேசியிருக்கக் கூடாது.''

''இப்போது நான் தலையைப் பிச்சுக்க வேண்டுமா?'' என்றான் ரவி.

அவள் வாய்விட்டுச் சிரித்தாள். இயல்பு நிலைக்கு அவளைக்கொண்டு வந்தாயிற்று என்று ரவி நினைத்தான்.

“உங்களுக்கு முன்னே இருந்த சித்தராமுதான்” என்றாள் மீரா.

“எதுக்கு அப்படி ஒரு பெயர் அவருக்கு?” என்று ரவி கேட்டான்.

“அவரோட கிரேடுக்குக் கீழே இருக்கற யாரையும் பாக்க மாட்டார். கண்ணில்லாத ஆள் மாதிரி. அவ்வளவு தலைக்கனம். அதனால்தான்” என்றாள் மீரா.

“நான் வேலைக்கு சேர்றதுக்கு முந்தியே ஒரு நாள் சித்தராமு கிட்டே பேசினேன். ஜஸ்ட் எ ஃபார்மாலிட்டி. அப்போ அவர், நான் உங்களிடம் ஜாக்கிரதையா இருக்கணும்னு எச்சரிச்சார்.”

“ஓ மை காட்!” என்றாள் . “ஆனா அவர் வந்த முதல் நாளே என்கூடப் பிரச்சினையாகி விட்டது.”

அவன் வியப்புடன் அவளைப் பார்த்தான்.

அவள், சித்தராமு வேலைக்குச் சேர்ந்த முதல் நாளன்று நடந்த நிகழ்ச்சியைக் கூறினாள்.

ரவி, ஒரு நிமிடம் பேசாமலிருந்தான். பிறகு “என்ன அடி! என்ன அடி! ஆனா முன்பின் தெரியாத உங்க கிட்டே அப்படி சிங்குலர்லே பேசியிருக்கக் கூடாது” என்றான்.

மீரா அவனிடம், “அவரை விட ரெண்டு பொசிஷன் நான் கீழேன்னு, அதிகாரத்தைக் காமிக்க நினைச்சதுக்கு திருப்பிக் கொடுத்துட்டேன். இந்த அதிகாரம் இருக்கே, அதை வச்சிண்டு வாலாட்டறவனையும் எனக்குப் பிடிக்காது, அதுக்குத் தலை குனிஞ்சிண்டு பம்முறவனையும் எனக்குப் பிடிக்காது” என்றாள்.

“வாவ்!” என்றான் ஆச்சரியத்துடன்.

“அதே மாதிரிதான் இந்தப் பண விஷயமும். பணம் இல்லேங்கிறதுக்காக நம்மளையே நாம விட்டுக் குடுக்கக் கூடாது.”

“நல்ல வேளை. என்கிட்டே அதிகாரமும் கிடையாது. பணமும் இல்லே!” என்று ரவி சிரித்தான்.

“என்கிட்டேயும்தான்” என்று அவளும் சிரித்தாள்.

பிறகு அவள் தன் கையிலிருந்த காகிதத்தை அவனிடம் கொடுத்தாள்.

அதைப் பார்த்துவிட்டு, “இந்த டாக்ஸ் ஸ்டேட்மென்டிலே என்ன பிரச்சினை?” என்று கேட்டான்.

“மே மாசத்திலே ஒரு தடவை எம்ப்ளாயிஸ் எல்லாருக்கும் இந்த வருஷத்து இன்கம்டாக்ஸ் எவ்வளவு கட்ட வேண்டியிருக்கும்னு நாங்க ஒரு ஸ்டேட்மென்ட் தர்றது வழக்கம். அதோட கூடவே அவங்களோட சேமிப்பு, மத்த இன்கம் விவரங்களையும் தாங்கன்னு ஒரு சர்குலர் அனுப்பிச்சிடுவோம். இது வரைக்கும் ஒரு பிராப்ளமும் இல்லே. ஆனா இப்போ இன்கம்டாக்ஸ் கட்டறதுக்கு பழைய ஏற்பாடு, புது ஏற்பாடுன்னு ரெண்டைக் கொண்டு வந்து ஆப்ஷன் எடுத்துக்கலாம்னு சொல்லியிருக்கில்லே கவர்மெண்ட்டு? இங்கே ஆறு மாசத்துக்கு முன்னாலே கொடுத்த ஆப்ஷனை இப்ப வந்து மாத்திடுன்னு ரொம்பப் பேர் லெட்டரோட வந்து நிக்கறாங்க. இந்த லெட்டரையெல்லாம் வழக்கமா உங்க டிபார்ட்மென்டுக்குதான் நாங்க அனுப்புவோம். சித்தராமு ஒர்க் அவுட் பண்ணி எங்களுக்கு அனுப்புவார். இந்தப் பிராப்ளம் அவர் வேலையை விடற சமயத்திலே வந்தது. எனக்கு அடுத்தாப்பிலே வரவரு கிட்டே கொடுங்கன்னு சொல்லிட்டுப் போயிட்டார். அதனாலே இப்ப உங்க கிட்ட வந்து இந்த பேக்ரவுண்டைச் சொல்லிப் பண்ணிக் கொடுங்கன்னு கேட்டு வந்திருக்கேன்” என்றாள்.

ரவி அவளிடம், “இதை நீங்களே செய்யலாமே! உங்க கிட்டே சிஸ்டம் இருக்கில்லே?”

“இருக்கு. ஆனா அவர் இதையெல்லாம் அவரோட டிபார்ட்மெண்டுக்குத்தான் அனுப்பணும்னு சொன்னதால அதை நாங்க அனுப்பிச்சிடுவோம்” என்றாள் மீரா.

“இந்த இன்புட் டேட்டா எல்லாம் நீங்க கொடுக்கறதுதானே?”

அவள், ஆமென்று தலையசைத்தாள்.

அவன் தனக்கு எதிரேயிருந்த கணினியில் தேடினான். அவளிடம், “இதுக்கான சாஃப்ட்வேர் சிஸ்டத்தில் இருக்கே?” என்றான்.

“ஆனா எங்களுக்குக் கொடுக்கலையே. சித்தராமு அதெல்லாம் அவராலே கத்துக்கொடுக்க முடியாதுன்னு சொல்லிட்டார்.”

“மீரா, நான் இதை ரெண்டு நாள்ளே உங்களுக்குச் சொல்லிக்கொடுத்தா அப்புறம் ரெண்டாவது மாடிலேர்ந்து ஒவ்வொரு தடவையும் வர வேண்டியதில்லே” என்றான்.

“வராதேடின்னு சொல்றீங்க” என்றாள்.

அவன் திடுக்கிட்டு அவளை நோக்கினான். அவள் முகம் மிகவும் சீரியஸாக இருந்தது போல அவனுக்குப் பட்டது.

“சே, சே, அப்படியெல்லாம் இல்லே. யு ஆர் ஆல்வேஸ் வெல்கம்” என்றான்.

அவள் குபுக்கென்று சிரித்தாள். “பயந்துட்டீங்களா?”

அவன் சற்று வெட்கத்துடன் அவள் சிரிப்பில் சேர்ந்துகொண்டான். அவளது விகல்பமற்ற பேச்சும் இயல்பாகப் பழகும் தோரணையும் அவனைக் கவர்ந்தன.

சடகோபன், ரவி வந்த மறுநாளே ஆடிட் என்று மீரட் சென்றுவிட்டான். மத்திய அரசு நடத்தும் உணவுப் பொருள் சேமிப்புக் கழகத்தில் ஆடிட்; ஒரு வாரத்தில் ஆடிட் முடிந்துவிடும் என்று போனான். ஆனால், அது இழுத்துக்கொண்டே போகிறது என்று ரவியிடம் போனில் பேசும் போது ஒரு நாள் சொன்னான். ஆபீசுக்குப் போன ஒரு வாரத்தில், தான், கான் மார்க்கெட்டிலிருந்து சரோஜினி நகருக்குப் போகக் குறுக்கு வழி கண்டு பிடித்துவிட்டதால் தினமும் மாலையில் நடந்தே அறைக்குத் திரும்பி விடுவதாக ரவி சொன்னான். அலுவலகத்திலேயே காலை உணவு, மதியச் சாப்பாடு, மாலை டிபன் என்று எல்லாம் குறைந்த செலவிலேயே முடித்து விடுவதாகவும் சொன்னான்.



"ரவி, நீ சொல்றதையெல்லாம் பாத்தா என்னை விட நீ ஜாஸ்தி சம்பாதிச்சு சேக்கற ஆளாயிட்டேன்னு தோணறது" என்று சடகோபன் சிரித்தான்.

"அடச் சே, நீ எங்கே? நான் எங்கே? எனக்கு கொடுக்கற சம்பளமே கம்மி. அதை வச்சிண்டு டெல்லிலே இவனால தாக்குப் பிடிக்க முடியாதுன்னுதானோ என்னவோ திருப்பதி பாலாஜி ஆபீஸ்லே கைகாட்டி வச்சிருக்கார்."

"அது சரி, காலம் எப்பவுமே ஒரே மாதிரியா இருக்கப் போறது? டோன்ட் ஒர்ரி" என்றான் சடகோபன் பரிவுடன்.

"இன்னொரு பாலாஜி தங்கறதுக்கு இடம் கொடுத்துக் காப்பாத்திட்டார்."

"சரி, நான் இன்னிக்கி போன் பண்ணின நேரம் சரியில்லே போல இருக்கு. போனை வச்சிடவா?"

"ஏய் ஏய் கோபா, நான் உண்மையைச் சொல்லக்கூடாதுன்னு தடுக்க உனக்கு உரிமையில்லே!" ரவியின் குரல் தழதழத்திருந்தது. போனைக் கீழே வைத்த பின் சடகோபனின் நினைவு ரவியைச் சுற்றி வந்தது. தானும் தில்லிக்கு வந்த புதிதில் பணம் படுத்தும் பாட்டை உணர்ந்தவன்தான். ஒரு காலத்தில் சாமநாதுவும் கூட இதே நிலைமையைச் சந்தித்திருப்பதாகக் கூறியிருக்கிறார். வாழ்க்கையில் இதெல்லாம் சகஜம் என்று உணர்ந்துகொள்ளக் காலமும் மாற்றமும் உதவுகின்றன.

அவர்கள் இருவரும் வாரத்தில் இரண்டு அல்லது மூன்று நாள்களுக்கு ஒரு தடவை பேசிக்கொண்டார்கள். ஆனால், ரவி, சடகோபனிடம் மீராவைப் பற்றிச் சொல்லவில்லை. சஸ்பென்ஸில் இருக்கட்டும் என்று வைத்திருந்தான்.

மீரட்டில் சடகோபன் வந்த வேலை முடியக் கிட்டத்தட்ட ஒரு மாதமாகிவிட்டது. தில்லிக்குக் கிளம்புவதற்கு முதல் நாள் அவன் ரவிக்குப் போன் செய்தான்.

"அப்பாடா, ஒரு வழியா முடிஞ்சுதா?" என்றான் ரவி.

"அதையேன் கேக்கறே? ஜமால்னு ஒரு காஷியர் பணத்தைத் திருடினான்னு ரிப்போர்ட் பண்ணனும். பணமும் லட்சக் கணக்கிலே. ஆனா இப்போ அதை இந்து முஸ்லீம் கலாட்டாவா மாத்திட்டாங்க. போலீஸ் வராததுதான் பாக்கி. என்ன ஒரு கண்ராவி! என் பாஸ் கிட்டே பேசினேன். 'நீ இங்கே வந்ததுக்கு அப்புறம் ரிப்போர்ட்லே போட்டு அனுப்பிச்சிடலாம். நீ கிளம்பி வா'ன்னார்."

"நீ வந்ததுக்கு அப்பறம் நாளைக்கு ஆபீஸுக்குப் போகணுமா? இல்லே ரெண்டு மூணு நாள் ரெஸ்ட்டா?" என்று ரவி கேட்டான்.

"போகணும். இது மாசக் கடைசியில்லியா? ஒண்ணாம் தேதிதான் புது ஆடிட்டுக்கு அனுப்புவாங்க."

"சரி, வந்து ரெஸ்ட் எடு. நாளைக்கு சாயங்காலம் மீட் பண்ணுவோம்" என்றான் ரவி.

மறுநாள் சடகோபன் அறையில் இருந்த போது, ரவி, மீராவுடன் வந்தான்.

சடகோபன் அவர்கள் இருவரையும் ஆச்சரியத்துடன் நோக்கினான்.

"மீட் மீரா. இது மிஸ்டர் சடகோபன். என் பெஸ்ட் ஃபிரென்ட்" என்றான் ரவி.

சடகோபன் புன்னகையுடன் அவளை வரவேற்றான்.

"உங்களைப் பத்தி எனக்கு எல்லாமே தெரியும். நீங்க ரெண்டு பேரும் ரொம்பக் க்ளோஸ்ங்கறதுலேந்து " என்று சடகோபனிடம் சொல்லி விட்டு ரவியைப் பார்த்து அவள் சிரித்தாள்.

"ஐ டௌட் வெரி மச்" என்றான் சடகோபன்.

ரவி திடுக்கிட்டு நண்பனைப் பார்த்தான்.

அவளும் திகைப்புற்று "என்னது?" என்றாள்.

"எவ்வளவு நாளா உங்களுக்கு இவனைப் பழக்கம்?" என்று சடகோபன் அவளிடம் கேட்டான்.

"நோ நீங்க, நோ உங்க" என்று அவள் சிரித்தாள். "மூணு வாரம் முடிஞ்சு நாலாவது வாரம் ஆரம்பிச்சிருக்கு" என்றாள் அவள்.

"பின்னே? இந்த இருபது நாள்லே நாங்க ரெண்டு பேரும் எவ்வளவு தடவை மணிக்கணக்கிலே பேசியிருக்கோம்? உன்னைப் பத்தி ஒரு வார்த்தை சொல்லாம அமுக்கமா இருந்திருக்கானே. இது எப்படி எங்களுக்குள்ளே நெருக்கம் ஆகும்?" என்றான் சடகோபன். ரவி, பதட்டத்துடன் எழுத்து நின்று "சாரி, சாரி" என்று கலங்கிய குரலில் சொன்னான்.

"அடச் சீ. சும்மாக் கிட. உனக்குக் கூச்சம் ஜாஸ்தின்னு எனக்குத் தெரியாதா? சும்மா ஒரு நிமிஷம் உன்னைக் கலாய்க்கலாம்னு பாத்தா!" என்று சடகோபன் அவனைப் பார்த்துச் சிரித்தான்.

"உனக்கு ஒரு ஷாக் கொடுக்கலாம்னுதான்..." என்றான் ரவி.

"சமாளிக்கறான்" என்று சடகோபன், மீராவிடம் சொன்னான்.

"ஆமா. கரெக்ட்" என்று அவளும் சிரித்தாள்.

"இன்னிக்கி ஆபீஸ் போனியா?" என்று ரவி கேட்டான்.

"ஆமா. ஃபைல்ஸ் எல்லாத்தையும் கொடுத்துட்டு வரப் போனேன்."

"நாளைக்கு ஞாயித்துக்கிழமை. ரெஸ்ட்தானே" என்றாள் மீரா.

"இல்லே. போகணும். மீரட் ஆடிட்லே தகறாருன்னு உன்கிட்டே சொன்னேனே" என்று சடகோபன் ரவியைப் பார்த்தான். "சண்டேங்கிறதினாலே ஆபீஸ் சத்தமெல்லாம் இருக்காது. நிம்மதியா வேகமா அந்த ரிப்போர்ட்டைப் பண்ணி முடிச்சிடலாம்னு பாஸ் வரச் சொன்னார்."

"அடக் கண்ராவி!" என்றாள் மீரா. "நாளைக்கி நாம மூணு பேரும் சேர்ந்து வெளியே ஏதாவது புரோகிராமுக்குப் போகலாம்னு ரவி வாஸ் டெல்லிங்."

"ஆமா. நானும் இந்த ஆபீஸ் வேலைய எதிர்பார்க்கலே. ஆக்சுவலி மகாராஷ்ட்ரா ரங்காயன்லே ஒரு வாரம் ரேயோட படங்களைப் போடறதா சாமிநாது நேத்தி என்னோட போன்லே பேசிண்டு இருந்தப்போ சொன்னார். நாளைக்கு முதல் படமா பதேர் பாஞ்சலியாம். நாளைக்கு நாம ரெண்டு பேரும் போயிட்டு வரலாம்னு நினைச்சிண்டிருந்தேன். இப்பதான் ஆபீஸ் வேலை வந்துடுத்தே" என்றான்.

"ஆ, பதேர் பாஞ்சாலியா? ஐ லவ் ரே. ஆனா இதுவரைக்கும் அவரோட அந்த முதல் படத்தைப் பாக்க முடியாமலே போயிடுத்து" என்றாள் மீரா ஆர்வத்துடன்.

"அப்ப நீங்க ரெண்டு பேரும் நாளைக்குப் போகலாமே" என்றான் சடகோபன்.

"லாப் டாப்பிலே பாத்திருக்கலாமே? அதைக் காண்பிக்காத சானல்னு ஒண்ணு இங்கே இருக்கா?" என்று சிரித்தான் ரவி.

"எனக்குத் தியேட்டர்லே பாக்கணும். லாப்டாப்பிலே பாத்தா அது என்னமோ சிவாஜி கணேசனை மிக்கி மவுசா பாக்கற மாதிரி இருக்கும்!"

"அப்படிப் போடு!" என்று சடகோபன் வாய்விட்டுச் சிரித்தான்.

மீரா, தன் கைக்கடிகாரத்தைப் பார்த்துவிட்டு "அப்ப கிளம்பலாமா?" என்று ரவியைக் கேட்டாள். சடகோபனிடம், "நீ அடுத்த தடவை ஆடிட்ன்னு வெளியூர் போறதுக்கு முன்னாலே ஒரு நாள் நாம் வெளியே போய் சுத்திட்டு வரலாம்" என்றாள்.

"நிச்சயமா" என்றான் சடகோபன்.

அப்போது ரவி, சடகோபனிடம் "எனக்கு கொஞ்சம் பணம் வேணும்" என்றான். மீராவிடம், "ஆத்திர அவசரத்துக்குக் கோபன் தான் என்னோட கேஷியர்!" என்று சிரித்தான்.

"ஷ்யூர்" என்றபடி சடகோபன் கால்சட்டைப் பையிலிருந்து பணம் எடுத்துக் கொடுத்தான். அவன் பார்வை மீராவின் மீது விழுந்தது. அவள் கர்சீப்பால் முகத்தைத் துடைத்துக் கொண்டிருந்தாள்.

மீராவும் ரவியும் வீட்டைவிட்டு வெளியே வந்து மீராவின் ஹாஸ்டலை நோக்கி நடந்தார்கள். போகும் வழியில் ரவி, அவளிடம், "நாளைக்கு ஈவினிங் உன்னை வந்து பிக்கப் பண்ணிக்கட்டுமா?" என்று கேட்டான்.

"இல்லே. நாளைக்கு நான் கரோல்பாக் போகணும். என் சித்தி வீட்டிலே லஞ்ச். அங்கேர்ந்து ஜன்டேவாலன் பக்கம்தானே? நானே வந்துடறேன்" என்றாள்.

ரவி, மறுநாள் தியேட்டரை அடைந்த போது மீரா இன்னும் வந்திருக்கவில்லை. அவன் இரண்டு டிக்கட்டுகள் வாங்கிவிட்டு வராந்தாவில் இருந்த போஸ்டர்களையும் படம் பார்க்க வந்து கொண்டிருந்த ஜனத்தையும் வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தான். படம் ஆரம்பிப்பதற்கு முன்னால் தியேட்டரில் மணி அடிக்கும் சத்தம் வந்தது. அவன் வாசலுக்குச் சென்று மீரா வருகிறாளா என்று பார்த்தான்.

அன்று மீரா தியேட்டருக்கு வரவில்லை.

*mail to:* **weenvy@gmail. com**

# TOXIC FEMINISM
# நச்சு பெண்ணியம்

பெண்ணியம் என்பதை வரையறுக்கும் போது மிகவும் தெளிவானப் புரிதலுடன் பெண்ணியம் என்பது பாலின சமத்துவம் என்று அறிவுறுத்தப்பட்டது. ஆனால், நடைமுறையில் பெண்ணியம் என்ற கருத்தாக்கம் ஆண்களுக்கு எதிரானதாகவும் பெண்களின் உரிமைகளுக்கானதாகவும் மட்டுமே குறுகி சில எதிர்மறை விளைவுகளை உருவாக்கியிருக்கிறது. இந்த எதிர்மறை விளைவுகள் கவலை அளிப்பதாக இருக்கின்றன.

● புதியமாதவி

பெண்ணியவாதம் என்பது சமத்துவத்திற்கான ஓர் இயக்கம், அது தீர்ப்பு வழங்குவதற்கோ எதிர்ப் பாலினத்தின் செயல்பாடுகளை கட்டுப்படுத்துவதற்கோ அல்ல! பெண்ணியம் என்ற பெயரால் பிறிதொரு மனிதரைக் கீழ்த்தரமாக மதிப்பீடு செய்வதற்கு அல்ல. உறவுகளில் மரியாதை, ஆண் பெண் உறவுகளில் இருக்கும் புரிதல், பகிர்வு ஆகியவை பெண்ணியத்திற்கு எதிரானவையும் அல்ல! ஆனால், நடைமுறையில் இவை அனைத்தும் கைவிடப்பட்டு ஆண் மட்டுமல்ல சக பெண்ணையும் இழிவு படுத்துவதுதான் பெண்ணியம், பெண்ணுரிமை என்பதாக தவறான பாதையில் சரிய ஆரம்பித்திருக்கிறது. பெண் உரிமைகளுக்கு வழங்கப்பட்ட சட்டங்களையும் பெண்களுக்கு அரசாங்கள் வழங்கி இருக்கும் பாதுகாப்புகளையும் சலுகைகளையும் பெண்ணியத்தின் பெயரால் தவறாகப் பயன்படுத்தி ஆண்களை மட்டுமே குற்றம் சாட்டுவது என்பதும் ஒருவகையில் பாலியல் சமத்துவத்திற்கு எதிரானதுதான்.



குற்றம் சாட்டப்பட்ட ஆண்களும் அவர்களின் குடும்பமும் அவமானத்தை தாங்க முடியாமல் தற்கொலை வரை போகின்றார்கள். சமூகத்தில் அவர்களுக்கு இருந்த மதிப்பு, மரியாதையை இழந்து பலர் கண் காணாத இடத்திற்கு போய் விடுகின்றனர். குற்றம் நிரூபிக்கப்படாமல் விடுதலைப் பெற்றாலும் கூட அதனால் ஏற்பட்ட மன அழுத்தமும் அவமானங்களும் நீதிமன்றங்களால் நிவர்த்தி செய்ய முடியாதவை.

இந்திய தண்டனைச் சட்டத்தின் பிரிவு ஐபிசி 498A என்பது திருமணம் தொடர்பான வரதட்சணை தொந்தரவுகளில் இருந்து பெண்களைப் பாதுகாப்பதற்காக கொண்டுவரப்பட்டது. ஆனால், அது இன்று பரவலாக தவறாக பயன்படுத்தப்பட்டு வருகிறது. தேசிய குற்ற புள்ளி விவர பணியகம் (NCRB) தரவுகளின் படி இந்தப் பிரிவின் கீழ் பதிவு செய்யப்படும் வழக்குகளில் சற்றொப்ப 80% வழக்குகள் முடிவில் விடுதலை ஆகின்றன; அதாவது குற்றச்சாட்டுகள் பொய்யானவையாக இருக்கும் வாய்ப்புகள் இருப்பதையே இந்த முடிவுகள் உணர்த்துகின்றன. 2021ஆம் ஆண்டில் உச்ச நீதிமன்ற வழங்கிய தீர்ப்பு இந்தச் சட்டம் பரவலாக தவறாக பயன்படுத்தப்படுவதாக குறிப்பிட்டுள்ளது. குற்றம் சாட்டப்பட்ட நபரை கைது செய்வதற்கு முன் ஆதாரங்களை பரிசோதிக்க வேண்டும் என்று நீதிமன்றம் அறிவுறுத்துகிறது. டெல்லி மகளிர் ஆணையத்தின் அறிக்கை டெல்லியில் பதிவு செய்யப்பட்ட பாலியல் பலாத்கார வழக்குகளில் 53% மேலான வழக்குகள் பொய்யானவை என கண்டறிந்து கண்டனம் தெரிவித்திருக்கிறது.

ரைஸ் (Rice) கூறுகையில், 'சமூக ஊடகங்களும் நச்சுப் பெண்மையை ஊக்குவிப்பதில் பெரும்பாங்காற்றுகின்றன' என்கிறார். பெண்கள் தங்கள் பெண்மையை பிரதிபலிப்பதாக நினைத்துக்கொண்டு பகிரும் கவர்ச்சியான புகைப்படங்கள், வீடியோக்கள், உடல்வளைவுகள், இரவு நேர உள்பெட்டி உரையாடல்கள்... ஒரு கைபேசியில் அனைத்தும் எளிதாக கிடைப்பதால் பெண்கள் சற்றும் யோசிக்காமல் கிளர்ச்சிக்காகவும் உடல் இச்சைக்காகவும் இன்னும் சிலர் பொழுதுபோக்கிற்காக ஆரம்பித்து, அதன்பின்

அதுவே ஒரு போதையாகி அதில் அடிமையாகி விடுகிறார்கள்!

பெண்ணியம் என்பது ஆண்களைக் கவர்வதில் பெண்களுக்கான திறமையாக, எதோ ஒரு வகையில் பழைய மரபான பெண்ணுடல் சார்ந்த மதிப்பீடுகளின் புதிய சரக்காகவே மாறி இருக்கிறது. ஒவ்வொரு பெண்ணுக்கும் அவள் உடல்தான் பிரதானம் என்பதில் கருத்து வேறுபாடில்லை. ஆனால், அவள் உடல் என்பது முழுக்கவும் அவளுக்கானதாக இல்லாமல் ஒவ்வொரு அசைவுகளும் யாரோ ஒருவனின் கைப்பாவையாக மாறிவிட்டதை பெண்கள்



*Anna Orbaczewska, 'Pieta', 2022; Courtesy A.I.R. Gallery, New York*

அறியவில்லை. அவர்களையும் அறியாமல் அவர்கள் தங்கள் உடல் யாரோ ஒருவனுக்கு அவன் விருப்பத்திற்கு அடிமைப்பட்டுப் போன உடலாக ஆட்டம் கண்டுவிட்டதை அறிந்து கொள்ளவில்லை.

One night stand, Tinder on line App என்று புதிதுப் புதிதாக சந்தையில் விற்பனைக்கு வரும் கவர்ச்சிகரமான ஆன்லைன் தளங்களைப் பயன்படுத்தும் பெண்கள் இறுதியாக வந்தடையும் இடம், ஆண் பெண் உடலுறவாக மட்டுமே எஞ்சி, மற்ற எதுவுமில்லாத, மனித உறவுகளின் அர்த்தங்கள் அனைத்தையும் இழந்து நிற்கும் புள்ளியில் கொண்டு நிறுத்துகிறது.

டிண்டர் செயலியைப் பற்றியும் அதன் பயன்பாடுகள் குறித்தும் பலவேறு கருத்துகள் அதன் பயனாளர்களால் பகிரப்பட்டிருக்கின்றன. அவற்றில் கருத்து வேறுபாடுகள் உண்டு என்றாலும் அனைவரும் ஏற்றுக்கொள்ளும் ஒரே கருத்து அத்தளத்தில் நீங்கள் பதிவேற்றும் உங்கள் புகைப்படம், உங்கள் தோற்றத்தின் முக்கியத்துவத்தையே முதன்மைப் படுத்துகின்றன! (It depends on your looks, your profile ad the kind of picture you upload)

இம்மாதிரி ஆன்லைன் தளங்களைப் பயன்படுத்தும் ஆண் பெண் இருபாலாருமே தங்களின் உண்மையான பெயர், முகவரி, அடையாளம் எதையும் விட்டுச் செல்வதில்லை என்றாலும்... இவை மிக எளிதாக ஒரு பெண்ணை ஏமாற்றுவதற்கான தளமாக இருக்கிறது என்பதைப் பெண்கள் எந்தளவுக்குப் புரிந்து கொண்டிருக்கிறார்கள் என்ற கேள்வி எழுகிறது.

பல ஆண்களுடன் உடலுறவு கொள்ளும் பெண், திருமணம் ஆனவர்/ திருமணம் ஆகாதவர் யாராக இருந்தாலும், பெண்ணுடல் என்பது கருத்தடை சாதானங்களின் கோடவுண் அல்ல. கருக்கலைப்புகள், பாதுகாப்பான உடலுறவு, அதையும் மீறி எதாவது விளைவுகள் ஏற்பட்டால், அதை எதிர்கொள்ள பெண்கள் உட்கொள்ளும் மாத்திரைகள்... இவை அனைத்தும் இறுதியில் பெண் உடலுக்கு எதிரானதாக மாறி, அப்பெண்ணின் மன நிலையைச் சிதைக்கும் நிலையில் கொண்டு நிறுத்திவிடுகின்றன.

சபா ஹருனி லுரி (Saba Harouni Lurie), திருமண குடும்ப உறவுகள் ஆலோசகர் (திருமண மற்றும் குடும்பத் தொழில்வல்லுநர் (LMFT) மற்றும் Take Root Therapy நிறுவனத்தின் நிறுவனர்). “நாம் பயன்படுத்தும் சமூக வலைத்தளங்கள், ஊடகங்கள் நம்மை அறியாமல் நச்சு பெண்ணியத்தை ஊக்குவிக்கின்றன” என்கிறார்.

டாக்டர் ஜாக்வலின் ஜான்சன் அவர்கள், நச்சு பெண்மை என்பது ஒரு வகையான உள் நிலைபெற்ற பெண் விரோதம் (internalized misogyny) ஆகும் என்று விளக்கம் தருகிறார். பெண் விரோதம் என்ற இந்த உளவியல் சிக்கல் பெண்கள் குறைவானவர்கள் என்ற சமுதாய நம்பிக்கைகளின் அடிப்படையில் உருவான எதிர்மறை மன நிலையாகும். இதன் நீட்சிதான் உள் நிலை பெற்ற பெண் விரோதம் ஆகும்.

பெண்கள் சமுதாயத்தின் மறைமுகமான கருத்தாக்கங்களில் அழுத்தம் பெற்று வாழும் சூழலில் அவர்களும் அறியாமல் இதன் வெளிப்பாடுகள் அவர்களை வழி நடத்துகின்றன.

தெரியாமல் நடந்துவிடும் தவறுகள் குற்றங்கள் என்பதைவிட இப்போதெல்லாம் தெரிந்தே, அறிந்தே நடக்கும் அனைத்து செயல்களுக்கும் பெண்கள் தான் பொறுப்பு. காரணம் பொறுப்பு துறந்த ஓர் உடலுறவு என்பதை அறிந்துதான் இப்பெண்கள் இச்செயல்பாடுகளில் தங்கள் உடலைக் கிடத்துகிறார்கள். பெண்கள் எல்லாவகையிலும் ஆண்களை விடக் குறைவானவர்கள் என்ற சமுதாயச் சிந்தனைகளின் மறைமுகமான அழுத்தம் இதில் வெளிப்படுகிறது. தன் அறிவுசார்ந்த செயல்பாடுகளைக் காட்டிலும் தன் தோற்றமே பிரதானம் என்று நம்புகிறது. தோற்றப் பொலிவு குறைவான பெண்களை குறைத்து மதிப்பிடுவதிலும் இழிவுப் படுத்துவதிலும் இன்பம் காண்பது, காலப் போக்கில் இதுவே அப்பெண்ணின் சுயமரியாதைக்கும் தன்னம்பிக்கைக்கும் இழுக்கு ஏற்படுத்தி, அவளுக்கும் அவள் சார்ந்த உறவுகளுக்கும் தீர்க்க முடியாத பிரச்சனைகளை உருவாக்கி விடுகிறது.

கற்பு, ஒழுக்கம் , திருமண உறவுகள், நம்பிக்கை இவை சார்ந்து அற ஒழுக்கமாக இதை முன்னிறுத்தினால் அதுவும் தீவிரவாத பெண்ணியம் பேசும் சிலருக்கு ஒவ்வாமையை ஏற்படுத்தலாம். ஆனால்,இப்பெண்களின் நச்சுப் பெண்ணியம் அப்பெண்களுக்கே துளித்துளியாக விஷம் கொடுத்துக் கொண்டிருக்கிறது என்பதுதான் உண்மை.

கட்டற்ற பாலியல் சுதந்திரமே பெண் உரிமை என்று நினைக்கும் பெண்கள் அதை வெளிப்படையாக செய்யட்டும். குடும்பம் என்ற போர்வையிலிருந்தும் சமூகம் தருகின்ற பாதுகாப்புகளிலிருந்து விலகி நின்று தனித்து கட்டற்ற பாலியல் உறவை அனுபவிக்கட்டும். திருமண உறவுகளை விலக்கி வைப்பதுடன் மட்டுமின்றி எந்தவொரு குழந்தையையும் இந்த உறவுகளின் மூலம் கொண்டுவரவோ அல்லது தங்கள் குழந்தைகளுக்கு தங்களின் கட்டற்ற பாலியல் வேட்கையிலிருந்து விடுதலைக் கொடுப்பதும் நல்லது.

எது பெண்ணியம்? எது பெண் விடுதலை? எது பெண் உரிமை? என்பதைக் குறித்து இன்னும் தெளிவாகவும் கட்டுடைத்தும் பொதுவெளியில் பேசியாக வேண்டிய காலத்தில் நாம் வாழ்கிறோம்.

ஆண்களைக் கவர்வதிலும் நடக்கும் போட்டிகள், சமூக வலைத்தளங்களில் அதிகமான லைக்குகள் மற்றும் விருப்பக் குறியீடுகளைப் பெறுவதை ஊக்குவிக்கின்றன. இதுவும் ஒரு போதையாகி பெண்களை இந்த நச்சுவலையில் சிக்க வைத்திருக்கிறது.

*mail to:* **mallikasankaran@gmail.com**



# நான் விரும்புகிறேன்

● ஸ்ருதி குஷ்வாஹா

தமிழில்: **வசந்ததீபன்** ஓவியம்: **சாரா**

உலகின் அனைத்து பெண்களே
ஒரு நாள் வேலைநிறுத்தம் செய்யுங்கள்
தாய்மார்கள் விடுப்பு எடுங்கள் மகத்துவமான
பதவியிலிருந்து
ஒருநாள் அழும் குழந்தைகளை ஆணின் பொறுப்பில்
விடுங்கள்
தாம் விரும்பிய நாவலை படிக்க அமருங்கள்
நான்கு முறை எழாமல் அமைதியாக சாப்பிடுங்கள்
உணவுக்கு இடையில் சுத்தம் செய்ய வேண்டாம்
குழந்தைகளின் பாட*
நடுஇரவில் குழந்தைகளின் அழுகையால் கலைய
வேண்டாம் உறக்கம்
அதிகாலையில் எழ வேண்டாம் பாலூட்டுவதற்கு
அந்த ஒரு இரவு குழந்தைப் பருவத்தின் தோழியை
அழைத்து
டிராயிங் ரூமில் சோஃபாவில் படுத்து
தாமதமான இரவு வரை வதந்திகள் பேசுங்கள்
எல்லாத் தாய்மார்கள் இந்த நாள் குழந்தைகளாக
மாறுங்கள்
காதலர்கள் எல்லா முத்தங்களை ஒத்தி வைத்து
தமது இடது காலின் சுண்டு விரலால்
காதலனின் அகங்காரத்தை அப்பால் எற்றி விடுங்கள்
கிளம்புங்கள் நீண்ட பயணத்திற்கு
திரும்பி வந்து சொல்லுங்கள்
எவ்வளவு சலிப்பு இருக்கிறது காதலன் பேசும் விதம்
மற்றும் கனமான அன்பின் வழிமுறை
சொல்லுங்கள்
அவை இன்றும் இருக்கின்றன
காதலனை விட சிறந்தது என்று
மற்றும் நகரத்தில்
இப்போதும் இருக்கிறார்கள்
பல மிகு அழகான இளைஞர்கள்
இன்றும் இருக்கிறது மழை
எவ்வளவு மயிர்க்கூச்செடுப்பதாக
இன்றும் இருக்கிறது சங்கீதம்
எவ்வளவு மோகமூட்டுவதாக
அன்பு செய்வதற்காக
மேலும் கூட
நல்ல விஷயங்கள் இருக்கின்றன உலகத்தில்
மனைவிகளுக்கோ வேலைநிறுத்தத்திற்காக
ஞாயிற்றுக்கிழமையே தேர்ந்தெடுக்கலாம்
அந்த நாள் அவர்கள் தூங்கிக் கொண்டிருக்கணும்
நீண்ட நேரம் வரை
மற்றும் எழுந்து எல்லோரையும் விட முதலில்
வீட்டிற்கு முன்னால் வைக்கணும் பெயர்ப் பலகை
இவை அவர்களின் தேர்ந்தெடுக்கப்பட்ட பெயர்களாக
இருக்கணும்
அவற்றை கூப்பிடுகையில் எல்லோரிடம் இனிமை
உண்டாகணும்
பிறகு தமது வீட்டில் நிதானமான வேகத்தில் தேநீர்
அருந்துங்கள்
இந்த ஞாயிற்றுக்கிழமை மனைவிகள்
அணியுங்கள் தமக்குப் பிடித்த நிறத்தில்
உண்ணுங்கள் தமது ருசிக்காக உணவுகள்
டிவி ரிமோட் இருக்கட்டும் அவர்களின் கைகளில்
தமது இஷ்டத்தின்படி பார்க்கட்டும் அவர்கள் உலகம்
வேலைநிறுத்த நாளில்
எல்லா வேலைக்குச் செல்லும் பெண்கள்
அலுவலக லாபியில் அமர்ந்து சீட்டு விளையாடட்டும்
சத்தமாக சத்தமாக பேசட்டும்

** பாட என்பது ஒரு சிறு குழந்தை கழிப்பறையாக பயன்படுத்தும் ஆழமான கிண்ணமாகும்.*



அவர்களின் பேச்சில் எதிரொலி எழட்டும்
அலுவலகத்தில்
அவர்களின் இருப்பால் நிறையட்டும் ஒவ்வொரு
மூலையும்
அந்த நாள் இவர்களின் அதிகாரம்
வரவேற்பறை, தாழ்வாரம், விருந்தினர் அறை
மற்றும் லிஃப்டில்...
எல்லா மனிதர்கள் படிகளில் ஏறி இறங்க
தினமும்
அவர்களின் முறைத்துப் பார்க்கும் பார்வைகள்
அது தப்பிவெளியேறும் முயற்சியில் இருக்கும்
அப்போதும் ஏதாவது குயில்
மந்தமாக எழும்
'நாங்கள் இருக்கிறோம்
சிந்தனை ஏ சந்து ஓ கடைவீதி போல
எழுகிறது ஒவ்வொரு பார்வை வாடிக்கையாளர்
போல
இது மாதிரி வெட்கத்தோடு
தண்ணீர் தண்ணீர்
மனிதனின் பூட்ஸ் நனைந்து போகட்டும்
உலகின் அனைத்து மகள்கள்,
தோழிகள், சக ஊழியர்கள், நண்பர்கள்
தாதீ, நானீ, சித்தி, மாமி, அத்தை, அண்ணி
லெஸ்பியன், நேர்மையான தனிமனுஷி இணைந்து
இவள், அவள், அப்படி, இப்படி, நல்லது, கெட்டது
பெயர்ச்சொல் பிரதிபெயர்ச் சொல் வினைச்சொல்
உரிச்சொல்
எந்த நாள்
இவர்கள் எல்லாம் வேலைநிறுத்தத்தில்
ஈடுபடுவார்கள்

## ஸ்ருதி குஷ்வாஹா



13.02.1978 அன்று மத்தியப் பிரதேசம் போபாலில் பிறந்தவர். போபால் மக்கன்லால் சதுர்வேதி தேசிய இதழியல் பல்கலைக்கழகத்தில் இதழியலில் முதுகலை பட்டம் பெற்றவர். இவரது கவிதைத் தொகுப்பு 'கஷ்மகாஷ்' (2016), சாகித்ய அகாடமி, மத்தியப் பிரதேச கலாச்சார கவுன்சில், கலாச்சாரத் துறை, போபால் ஆகியவற்றுடன் இணைந்து வெளியிடப்பட்டது. இந்தக் கவிதைத் தொகுப்பு, மத்தியப் பிரதேச ஹிந்தி சாகித்ய சம்மேளனத்தின் 2016ஆம் ஆண்டுக்கான 'வாகீஸ்வரி விருது' பெற்றது. ஹைதராபாத், டெல்லி, மும்பை, போபால் ஆகிய இடங்களில் பல்வேறு செய்தி சேனல்களில் பணியாற்றிய பிறகு, தற்போது சொந்த ஊரான போபாலில் 'ஃப்ரீலான்ஸ்' எழுத்து பணிகளில் ஈடுபட்டுள்ளார்.

நிச்சயம் நம்புங்கள்
அந்த நாள் எல்லா ஆண்கள்
பெண்களாக இருப்பதை கற்றுக் கொள்ளுங்கள்
அந்த நாள் அவர்கள் ஆண்களிலிருந்து மனிதர்களாக
மாற்றப்படலாம்...

*mail to:* **vasanthadheepan@gmail.com**

# கீழடி: மறைக்கப்படும் உண்மைகள்!

● பிரபு திலக்

தொல்பொருள் ஆய்வாளர் அமர்நாத் ராமகிருஷ்ணா, கீழடி அகழாய்வு அறிக்கையை இந்திய தொல்பொருள் ஆய்வு மையத்திடம் (ASI) சமர்பித்து வருடங்கள் ஆகிவிட்ட நிலையில், அந்த ஆய்வறிக்கையை வெளியிடாமல் காலம் தாழ்த்தி வந்த தொல்பொருள் ஆய்வு மையம், இப்போது திருத்தங்களைச் செய்து அறிக்கையை மீண்டும் சமர்ப்பிக்குமாறு அமர்நாத் ராமகிருஷ்ணாவுக்கு கடிதம் எழுதியுள்ளது. தமிழின் தொன்மையை நிரூபிக்கும் ஒரு ஆய்வு உண்மையை வெளியிடுவதில், இந்திய தொல்பொருள் ஆய்வு மையத்துக்கு தயக்கம் உள்ளது மீண்டும் நிரூபனமாகியுள்ளது. முன்னதாக, மூத்த தொல்பொருள் ஆய்வாளர் டி. சத்தியமூர்த்தியின் ஆதிச்சநல்லூர் அகழாய்வு அறிக்கை நீதிமன்றத்தின் தலையீடு வரை 15 ஆண்டுகளாக வெளிச்சத்திற்கு வராமல் இருந்தது குறிப்பிடத்தக்கது.

கீழடியில் 2014ஆம் ஆண்டு தொடங்கி விரிவான அகழ்வாராய்ச்சியை மேற்கொண்ட அமர்நாத் ராமகிருஷ்ணா, 982 பக்க அறிக்கையை 2023 ஜனவரி 30 அன்று ASI இயக்குநர் ஜெனரலுக்கு அனுப்பினார். அவர் தனது அறிக்கையை அனுப்புவதற்கு முன்னதாக, கீழடி அறிக்கையை தாமதப்படுத்தும் வகையில் அமர்நாத் ராமகிருஷ்ணா 2017இல் அசாமுக்கு மாற்றப்பட்டது குறிப்பிடத்தக்கது.



தமிழ்நாட்டில் இதுவரை நடந்துள்ள அகழாய்வுகளில் முழுமையான குடியிருப்புப் பகுதி கிடைத்திருப்பது கீழடியில்தான். இந்தியாவின் புகழ்பெற்ற வரலாற்றாளர்கள் பலரும் பழந்தமிழகத்தை ஒரு இனக்குழு சமூகமாகத்தான் வரையறுத்தார்கள். சிந்து சமவெளி நாகரிகத்தைப் போல ஒரு நகர நாகரிகம் இங்கு இல்லை என்பது அவர்கள் வாதம். இலக்கிய வர்ணனைகளைக் கடந்த ஆதாரங்கள் கண்டறியப்படாத நிலையில் இந்தக் கருத்துக்கு இதுவரை உயிர் இருந்தது. இப்போது கீழடி தரவுகள் அந்தக் கருத்தைத் தகர்த்திருக்கின்றன. பழங்கால தமிழர்களிடையே நகர நாகரிகம் செழிப்புற்று இருந்ததை கீழடி மெய்ப்பித்திருக்கிறது.

கீழடிக்கு முன்பே தமிழகத்தில் பல்வேறு அகழ்வாய்வுகள் நடத்தப்பட்டிருக்கின்றன. சோழர்களின் தலைநகரமாகவும் துறைமுகப் பட்டினமாகவும் கருதப்படுகிற பூம்புகார்; கொற்கை, ஆதிச்சநல்லூர்; மாங்குடிமருதனார் வாழ்ந்ததாகக் கருதப்படும் மாங்குடி; அதியமான் இருந்ததாகக் கருதப்படுகிற தகடூர்; கொடுமணல்; சேரர்களின் தலைநகராகக் கருதப்படும் முசிறிப் பட்டினம்; அரிக்கமேடு, உறையூர் உட்பட பல இடங்களில் அகழாய்வுகள் நடைபெற்றுள்ளன.

முதன்முதலில், ஆங்கிலேயர்கள் காலத்தில், இந்தியத் தொல்லியல் பரப்பாய்வுத் துறையை சேர்ந்த அலெக்சாண்டர் ரீ மேற்கொண்ட அகழாய்வுகள்தான் பழங்காலத்தில் மிகச் சிறந்த பண்பாட்டினை தமிழகம் கொண்டிருந்திருக்கிறது என்று வெளியுலகுக்குத் தெரியப்படுத்தின. குறிப்பாக, ஆதிச்சநல்லூர் அகழாய்வில் கிடைத்த பொருட்கள், 3000 ஆண்டுகளுக்கும் முன்பு சிறந்த வாணிக நகரமாக ஆதிச்சநல்லூர் இருந்திருக்க வேண்டும் என்கிற முடிவுக்கு அலெக்ஸாண்டர் ரீயை நகர்த்தின. அதன்பிறகும் கொற்கை, காவிரிப்பூம்பட்டிணம், அரிக்கமேடு, உறையூர் ஆகிய இடங்களில் நடந்த அகழாய்வுகள் எல்லாவற்றின் முடிவுகளும், தமிழர்களின் தொன்மையான நாகரிகத்தினை மீண்டும் மீண்டும் உறுதிப்படுத்துவதாகவே அமைந்தன. ஆனாலும், சமஸ்கிருதத்திற்கு பிறகுதான் தமிழ் தோன்றியது என்று காட்டுவதற்காக, கிமு 300க்கு முந்தைய காலத்திற்குத் தமிழர்களைக் கொண்டுசெல்ல ஒன்றிய அரசு அனுமதிக்கவில்லை. மீறிச் சென்ற இடங்களில் அகழாய்வுகள் நிறுத்தப்பட்டன; அகழாய்வு முடிந்த இடங்களில் ஆய்வறிக்கைகள் முடக்கப்பட்டன.

ஆதிச்சநல்லூர் போலவே பொருந்தல், கொடுமணல், அரிக்கமேடு, பூம்புகார் உள்ளிட்ட பல இடங்களில் நடந்த ஆய்வு அறிக்கைகளையும் மத்திய தொல்லியல் துறை முடக்கி வைத்துள்ளது; இப்போது கீழடியும்.

கீழடியில் முதல் இரண்டு கட்ட ஆய்வுகளில் சிறப்பாக பணியாற்றிய அமர்நாத் ராமகிருஷ்ணனை அஸ்ஸாமிற்கு மாற்றி, இந்த அகழாய்வை முடக்க முயற்சித்தார்கள். அதன்பிறகு போராட்டங்கள், நீதிமன்ற வழக்கு என பலகட்டங்கள் கடந்துதான் தமிழக தொல்லியல்துறை கீழடியில் அகழாய்வை மேற்கொண்டது. கீழடியில் நடந்த நான்காம் கட்ட அகழ்வாய்வு குறித்து, தமிழக அரசின் தொல்லியல்துறை வெளியிட்டுள்ள அறிக்கை, அங்குக் கிடைத்த தமிழ் பிராமி எழுத்துகளின் காலத்தை கிமு 6ஆம் நூற்றாண்டு என உறுதி செய்துள்ளது குறிப்பிடத்தக்கது.

இந்திய தொல்பொருள் ஆய்வு மையம், நுட்ப ரீதியான பரிந்துரைகளை வழங்குவது தவறு அல்ல. ஆனால், அந்த பரிந்துரைகள், உண்மையை வெளியிடுவதில் தடையாக இருக்கக்கூடாது. வரலாற்றை ஒழித்து வைக்கும் முயற்சிகள் எப்போதும் வெற்றிபெற்றதில்லை. ●

published by PRABHU THILAAK published at No. 5, 5th Street, Soma sundaram Avenue, Shakti Nagar, Porur, Chennai 600116.
Owned by PRABHU THILAAK. printed by A. Chandran. Printed at Ayyanar offset, No. 10, Subbarao Nagar, Choolaimedu, Chennai 600094.
Editor : PRABHU THILAAK

Posted at patrika channel egmore (Posted between 28-31st of Every month)
Date of Publications : 25th of every month Reg.No.TN/TBM/150/2024-2026. ISSN Number 2456-3447 Dated: 04/10/2016.
R.DisNo. 2010/2002 RNI. TNTAM/2006/17955 Licenced to Post without Prepayment No: TN/PMG(CCR)/WPP 722/2024-2026.